# வள்ளுவர் விருந்து

சித்தாந்த செந்நாவலர், பேராசிரியர்,

**வித்துவான் ஜி. சுப்பிரமணிய பிள்ளை, M. A., B. L.,**

தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர்,

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.





தமிழ்நிலையம்

புதுக்கோட்டை

# முகவுரை

வள்ளுவர் வழங்கிய திருக்குறள் ஒரு நீதி நூலாக விளங்குவதோடு, சுவை நிறைந்த இலக்கியச் செல்வமாகவும் திகழ்கிறது. திருக்குறள் தோன்றிய நாள் முதல் இன்றுவரை பல புலவர்களும் தங்கள் அறிவின் ஆற்றலுக்கு ஏற்ற வாறு பல படியாகச் சுவைத்துச் சுவைத்துப் பொருள்கண்டு இன்ப வளத்தைப் பெருக்கி யுள்ளனர். அவற்றிற் சில துளிகளைச் சேர்த் தெடுத்துப் பல கட்டுரைகளாக நான் எழுதினேன். அவை திருவள்ளுவர், குமரகுருபரன், கலைமகள், ஞானசம்பந்தம், தமிழ்நாடு, செந்தமிழ்ச் செல்வி முதலிய பத்திரிகைகளில் பல காலங்களில் வெளி வந்தன. அவற்றிற் சிலவற்றைத் தொகுத்து 'வள்ளுவர் விருந்து' என்னும் பெயரால் நூல் வடிவில் வெளியிடுவதற்கு முன் வந்த தமிழ் நிலையத்தாருக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலில் அடங்கியவை கட்டுரை வடிவில் அவ்வப்போது பத்திரிகைகளுக்கு எழுதப்பட்ட வையாகலான், ஒன்றிரண்டு கருத்துக்கள் ஓரிடத்தில் வந்தது போல் மற்றோரிடத்தும் வந்திருக்கக் காணலாம்.

வேறுமோர் பயன்விளக்குங்காலைக் கூறியது கூறலும் குற்றமாகாது என்ற ஆன்றோர் கொள்கைப்படி அவற்றை அறிஞர்கள் பொருட்படுத்தமாட்டார்கள் என நம்புகிறேன். விருந்தின்போது சுவையுடையன மீண்டும் மீண்டும் படைக்கப்படுவதும் உண்டு. இந்நூலும் ஒரு சிறந்த அறிவு விருந்தாக இருக்க வேண்டும் என்பதே என் விருப்பம். விருந்து சிறந்து நலமுறுவது உண்பதைப் பொருத்தே ஆகும். "குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள் மிகை நாடி மிக்க கொளல்" வாழ்க தமிழ் நாடு! வளர்க தமிழ் மொழி! வயங்குக வள்ளுவர் வாய்மொழி!

ஆசிரியன்

## பதிப்புரை

நூல் :

விருந்தை, விரும்பி விரும்பி அளித்து, விரிஉலகம் வியந்து நிற்க ஆற்றிய தமிழ் மக்கள், இன்று விருந் துண்ண அழைக்கப்படுகின்றனர். பல்சுவை உணவைப் பாங்குடன் ஏற்ற தமிழ்மக்கள் இன்று சொல்விருந்தைச் சுவைக்க அழைக்கப்படுகின்றனர். சொல்விருந்தைப் பல்வகையில் உண்ட தமிழ் மக்கள், இன்று சொல் அமுது துய்க்க அழைக்கப்படுகின்றனர். இது மிகை அல்ல ; உண்மை.

சொல் அமுதைச் சொற்பொழிவாய்க் கேட்டருந்திய நாம், குறித்து வைத்துச் சுவையைப் பேணி வைத்த நாம், வேண்டும்போது வேண்டுவார்க் களித்தும் சுவைத்தும் வந்துள்ள நாம், இன்று ஆண்டுகள் பல, அரிதின் முயன்று குறித்து வைத்த சுவையைச் சுவைக்கின்றோம். அதனையே கட்டுரையென அறிஞர்கள் கூறுகின்றனர்.

இக்கட்டுரை விருந்து, ஒரு அழியா விருந்து, என்றும் சிந்திக்கும் சிந்தனை விருந்து, 'வள்ளுவர் விருந்து' என வளமாரக் கூறப்படுவதாம். வள்ளுவர் அளித்த விருந்தை, பல்வித நிலையில் சுவைத்துப் பார்த்தோர் பலர். ஆயினும், உண்மைச் சுவையை

உணர்ந்து உரைத்தோர் சிலர். சிலரில் ஒருவரால், தமிழ்மக்களின் சிந்தனைச் சுடரை விளக்க, புத்தம் புதிய சுவைகளை விருந்தெனப் படைத்து, உண்ணவும் பருகவும் மலர்கிறது இந்நூல் என்று மகிழ்வோடு கூறுகின்றோம்.

**ஆசிரியர் :**

அறிஞர், ஆராய்ச்சியாளர், நாவலர், பேராசிரியர், இன்னும் செந்தமிழின் செவ்வி அறிந்தோர்க்கு எத்தனைச் சிறப்பிடவேண்டுமோ அத்தனைக்கும் ஒருங்கமைந்த சீலர், உயர்திரு. ஜி. சுப்பிரமணிய பிள்ளை M. A., B. L. அவர்கள் ஆவர். 'வள்ளுவர் விருந்து' எனும் தலைப்பில் பேராசிரியர் அவர்கள் நல்விருந்தளித்தமைக்குத் தமிழ்மக்கள் சார்பில் எம் உளமார்ந்த நன்றி உரித்தாகுக.

**பதிப்பாளர் :**

தமிழ் மக்கள் உளத்திற்கு உவகை ஊட்டும் சிறுகதைகள், கட்டுரைகள், நாடகங்கள், பாடல்கள், வரலாறுகள் முதலியவைகளை அளித்து வந்த யாங்கள் இன்று 'வள்ளுவர் விருந்து' என்ற கட்டுரை நூலையும் அளிக்கின்றோம். தமிழ்மக்கள் என்றும் போல் ஆக்கமும் ஊக்கமும் அளித்து ஆதரிக்க வேண்டுகின்றோம்.

வணக்கம்.

**தமிழ் நிலையத்தார்.**

# உள்ளுறை

# தமிழின் உயிர்நிலை

பெறுதற்கரியதொரு பெருநிதியாகிய திருக்குறள் தமிழுலகம் செய்த தவத்தாலும், நலத்தாலும், நமக்குக் கிடைத்திருக்கிறது. அதன் சிறப்பைக்கண்டு பிற நாட்டினரும் தத்தம் மொழிகளிற் பெயர்த்தெழுதிப் படித்தின்புறுகின்றனர். "கம்பன் பிறந்த தமிழ்நாடு" என்ற கவி பாரதியார்,

"வள்ளுவன் தன்னை யுலகினுக்கே தந்து
வான் புகழ்கொண்ட தமிழ் நாடு"

என்று பாடினர் இதை ஒரு சிறந்த புகழ்மாலையாகத் தமிழ்நாடு கொண்டு பெருமகிழ்வெய்துகிறது. ஆனால் இதில் ஒரு குறைபாடு தொனிப்பதையும் நாம் அறிதல் வேண்டும். உலகில் மற்ற நாடுகள் எல்லாம் திருக்குறளைப் போற்றிப் பாராட்டுகின்ற அளவுக்கு, வெளி நாடுகள் திருக்குறளின் பெருமையைத் தெரிந்திருக்கின்ற அளவுக்குத் தமிழ்நாடு இன்னும் திருக்குறளின் பெருமையைத் தெரிந்துகொள்ளவில்லை. திருவள்ளுவர் தமிழ் மகனாய்ப்பிறந்து தமிழ் மொழியிலே திருக்குறளை எழுதி யிருந்தாலும், பிறமொழியாளர் அவர் சிறப்பை உணர்ந்திருப்பதுபோல் தமிழ்மொழி பயிலும் மக்கள் இன்னும் உணரவில்லை என்றால், அது மிகவும் வருந்தத்தக்கதேயன்றோ? தமிழ்நாடு வள்ளுவரைப் பெற்றெடுத்தும்கூட, அவரை உலகத்துப் பிறநாட்டினர் பாராட்டும்படி அளித்துவிட்டுத் தனக்கும் பயன்தர வைத்துக் கொள்ளவில்லையே என்று வருந்துவது போன்ற தொனியினை 'உலகினுக்கே தந்து' என்ற சொற்றொடரிற் காணலாம். ஏகாரம் பிரிநிலை ஏகாரமாக ஆகி

விடாதபடி காக்கவேண்டியது தமிழர் கடனாகும். உலகுக்குத் தந்ததுபோல் தனக்கும் வள்ளுவரைப் பயன் தரும் விதத்தில் உரித்தாக்கிக்கொள்ளவேண்டியது தமிழ் நாட்டின் தள்ளற்கரிய பொறுப்பாகும்.

திருக்குறள் எழுந்த காலத்திற்குப் பின்பட்டுத் தோன்றிய நூல்களிலெல்லாம் வள்ளுவரின் குறட்பாக்கள் வளம்பெற எடுத்துக் கையாளப்பட்டிருக்கின்றன. கோவை, உலா, அந்தாதி, தூது, கலம்பகம் முதலிய பிரபந்தங்களிற் குறளடிகளும், கருத்துக்களும் அப்படி அப்படியே காணப்படுகின்றன ஒவ்வொரு பிரபந்தத்தின் இயல்பை எடுத்தோதும் இலக்கணத்தோடு குறளடி கையாளுதலையும் அவ்விலக்கணத்தின் ஓர் உறுப்பாகச் சேர்த்துவிடலாம் போன்றிருக்கின்றது. திருக் கைலாய ஞான வுலா, சீவக சிந்தாமணி, கம்பராமாயணம், திருவிளையாடற் புராணம், சிலப்பதிகாரம் முதலிய நூல்களில் எல்லாம் திருக்குறளடிகளும், கருத்துக்களும் ஆங்காங்கு அழகு செய்து, படிப்போர்க்கு உவட்டா விருந்தாய்ச்சுவை விளைக்கின்றன. திருவள்ளுவரைத் தமிழ் இலக்கியத்திலிருந்து வேறு பிரிப்பது கூடாத காரியம். அவ்விதம் ஒருகால் பிரித்தாலும்கூட, தசைகள் கழிந்த ஆவி குடிபோன எலும்புக்கூடு போன்றே தமிழ் இலக்கியம் காணப்படும். ஆகவே, திருக்குறள் தமிழ் மொழிக்கே உயிர்நாடியாய்ச் செம்மை அளித்துச் செழிப்பூட்டுகின்றது. இதனைத் தெளிந்தே, நாம் உற்றறிந்துணர நின்ற புத்தேரிப்புலவரும்,—

“ வள்ளுவர் தந்த திருமறையைத்—தமிழ்
மாதின் இனிய உயிர் நிலையை
உள்ளம் தெளிவுறப் போற்றுவமே—என்றும்
உத்தமராகி ஒழுகுவமே ”

என்று கனிவுறப் பாடியுள்ளார்

தமிழ் மொழிக்கே முதற்பாவலராய்த் திகழ்பவர் திருவள்ளுவர். அவரை மிஞ்சியவராய் எவரும் அவருக்கு முன்னும் இருந்ததில்லை, பின்னும் இருந்ததில்லை. இலக்கிய வானிலே திருவள்ளுவர் ஒரு சூரியன்; ஏனைப் புலவர்கள் தண்ணுமொளி மழுங்கித் தாமகலும் தாரகைகள். புலவர் என்ற பெயரைத் திருவள்ளுவர் தமக்கே உரித்தாக்கிக் கொண்டார் அவர் ஒருவரே புலவர் என்று அழைத்தற்கு உரிமை வாய்ந்தவர்: ஏனையோரைப் புலவர் என்று கூறுவது பொருந்தாது என்பதைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர்கிழார் என்பவர் கூறியுள்ளார் :—

"புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேல்
சிலவர் புலவரெனச் செப்பல்—நிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றுங்
கறங்கிருள் மாலைக்கும் பெயர்."

ஒவ்வொரு நாளும் வரும் அந்திப்போதினை நாம் மாலை யென்றுதான் அழைக்கிறோம். ஆயினும் நிறை மதி நாள் மாலைப்பொழுது எவ்வளவு அழகாக இன்பம் பொழிந்து ஒளிவீசி நிற்கிறது! மதி தேய்ந்து மறைந்து போய் இருள்மூடிய அமாவாசை மாலைப் பொழுது எவ்வளவு நோய் கூர்ந்து நலிவுறுத்துகிறது! அதுபோல். புலவர் திருவள்ளுவர் நிலவு விரிந்த மாலைப் பொழுது; ஏனைப் புலவர் இருள் கவிந்த மாலைப்பொழுது. இங்ஙனம் கூறினவர் ஒரு சங்கப் புலவர் என்பது நினைவிருக்க வேண்டும்.

பொய்யா மொழியார் ஒரு சிறந்த புலவர். அவர் வாயினின்றும் ஒரு பாட்டுப் பெறுவதற்கு முருகக் கடவுள் நையாவிதமாக நைந்தான், செய்யாதன வெல்லாம் செய்தான், எய்யாத கானகமும் எய்தினான், பொய்யான பெயரையும் புனைந்தான் என்று கூறுவர்

அத்துணைச் சிறப்புற்று விளங்கிய பொய்யா மொழியாரை மதுரையை ஆண்டுவந்த மாறவன்மன் சுந்தர பாண்டியன், "நீவிரும் நல்ல புலவரே" என்றபொழுது, பொய்யாமொழியார், "அரசே! என்னைப் புலவர் என்று தாங்கள் கூறுதல் கூடாது. தென்முகக் கடவுளாய் இருந்து அறம் உரைத்த சிவபெருமான், முப்பாலாகிய திருக்குறளைப் பாடிய திருவள்ளுவர், என்றுமுள தென் தமிழ் இயம்பியிசை கொண்ட அகத்தியர் ஆகிய இவர்களையே புலவர் என்று அழைக்கலாம். என் போன்றவரைப் புலவர் என்று அழைத்தால் உலகம் பொறுக்காது" என்று பாடினதாக வரும் பாடல்:—

"அறமுரைத் தானும் புலவன் முப்பாலின்
திறமுரைத் தானும் புலவன்—குறுமுனி
தானும் புலவன் தரணி பொறுக்குமோ
யானும் புலவன் எனில்."

இதனுல் திருவள்ளுவரின் புலமைத் திறன் அறிவுடைப் பெருமக்களால் எவ்வாறு போற்றப்பட்டது என்பது தெளிவாகும்.

திருக்குறள் ஒவ்வொரு பாட்டும் திட்பமும் நுட்பமும் வாய்ந்தது. அதனைப் பயிலப்பயில நவநவமான நயங்கள் பலப்பலவாய் ஊற்றெடுத்துப் பாய்ந்து வரும். குறள் ஒவ்வொன்றிலும் கருத்துச் செறிவும் பொருள் ஆழமும், சொல்வளமும், தொடை அழகும், அணியும், சுவையும் இனிமையாய்க் கலந்து நிற்கும். குறிப்புப் பொருளும் தொனியின் வளமும் குமிழியிட்டுக் குதித்து வரும். ஒவ்வொரு குறளும் தான் சொல்லும் பொருளைத் தெளிவுற எடுத்து விளக்குவதோடு, நம் சிந்தனையைத் தட்டி எழுப்பிப் பல எண்ண அலைகளை நம் உள்ளத்திலே எழுப்பி அறிவைத் தூண்டிவிடும் ஆற்றல் சான்றது.

இலேசில் கிழியாது நெடுநாள் உழைக்கக்கூடிய துணியை அழுத்தமான துணி என்கிறோம். அதுபோல்

ஒவ்வொரு திருக்குறளும் அழுத்தமான பாட்டாக இருக்கிறது. ஒரு கவிதை எப்படி இருக்கவேண்டும் என்று இலக்கணம் கூறுகின்றதோ அவ்விதம் அமைந்து விளங்குவது திருக்குறள். மற்றக் கவிதைகளுக்கு ஓர் எடுத்துக் காட்டாக விளங்குகிறது. இதனைக் குமரேச சதகத்தில் எவ்வாறு விளக்கியிருக்கிறது பாருங்கள் :—

எழுத்தசைகள் சீர்தளைகள் அடி தொடைகள்
சிதையா திருக்கவே வேண்டுமப்பால்
ஈரைம் பொருத்தமொடு மதுரமாய்ப்
பளபளப் பினியசொற் கமையவேண்டும்

அழுத்தமிகு குறளினுக் கொப்பாகவே பொருள்
அடக்கமும் இருக்கவேண்டும்
அன்பான பாவினம் இசைந்து வரல் வேண்டும் முன்
அலங்கார முற்ற துறையில்,

பழுத்துள முவந்தோசை யுற்றுவரல் வேண்டும்
படிக்குமிசை கூடல் வேண்டும்
பாங்காக இன்னவை பொருத்திடச் சொற்கவிதை
பாடிற் சிறப்பென்பர் காண்,

மழுத்தினஞ் செங்கைதனில் வைத்த கங்காளன் அருள்
மைந்தன் என வந்த முருகா !
மயிலேறி விளையாடு குகனே ! புல்வயல் நீடு
மலைமேவு குமரேசனே ! ''

பொருள் அடக்கமும் சொல்லழகும் அணிநயமும் கொண்ட அழுத்தமான பாட்டுகளைக்கொண்ட திருக்குறள் தமிழ் மொழியின் உயிர் நிலையாய் விளங்குகிறது.

---

# தெய்வத் திருமலர்

ஒரு பெண்வீட்டிற்கு மாப்பிள்ளை பேசி வந்தார்கள். ஒருவர் மாப்பிள்ளையின் திறமைகளை எடுத்துக்கூறும் பொழுது, பிள்ளை மிகவும் கெட்டிக்காரன், புத்திசாலி என்றும், அவனுக்கு முப்பத்திரண்டு புத்திகளில் முப்பது புத்திவரை சிறந்து விளங்கும் என்றும், அத்தனை புத்திகள் வேறு ஒருவருக்கும் எளிதில் கைவரக் கூடுவன அல்ல என்றும், இரண்டே புத்திதாம் இன்னும் ஏற்படவேண்டும் என்றும் தீர விளக்கிப் பேசினர். பெண் வீட்டாருக்கு மிகவும் திருப்தியாகி விட்டது. ஒவ்வொருவருக்கும் ஐந்து அல்லது ஆறு புத்திகூட ஏற்படுவது கடினம். இந்த மாப்பிள்ளையோ முப்பது புத்திகளுடன் கூடி விளங்குகிறன். இரண்டு புத்திகள் மட்டுமே இன்னும் தேவை. முப்பது புத்திகள் கூடிவரப் பெற்றவனுக்கு மற்றும் இரண்டு புத்திகளைக் கற்றுக் கொள்வதுதானு கடினம்? நாளாவட்டத்தில் அவையும் கைகூடிவரும் என்று மகிழ்ந்த பெண் வீட்டார் அந்த இரண்டு புத்திகள் யாவை என்று விசாரித்தனர். அதற்கு விடையாக, மாப்பிள்ளைக்குச் சொற் புத்தியும் சுய புத்தியும் மட்டுமே ஏற்பட வேண்டும் என்று கூறினர். இதைக்கேட்டுத் திடுக்கிட்ட பெண்வீட்டார் பெண் கொடுக்க மறுத்து அனுப்பி விட்டனர். ஆம். ஒருவனுக்குச் சொற்புத்தியும் கிடையாது, சுயபுத்தியும் கிடையாது என்றல், அவன் உதவாக்கரையாய் உலகில் உழலவேண்டியதுதான்.

இது நாட்டு வழக்கில் உள்ள ஒரு கதை. இதன் கருத்தை மற்ற நாடுகளிலும் பிறமொழிகளிலும் காணலாம். “ ஒன்றுக்கும் உதவாதவன் யார்? தானும்

கட்டளை இடமாட்டான், பிறர் கட்டளைக்கும் படிய மாட்டான்" என்று வினவும் விடையுமாக ஒரு சொல் வழக்கு ஜெர்மன் மொழியில் உண்டு. சொற்புத்தியும் சுய புத்தியும் இல்லாதவன் ஒன்றுக்கும் உதவான் என்பதை ஜெர்மன் மொழியிற் கூறவேண்டுமானுல் பின்வருமாறுதான் கூறுவார்கள் :—

" வேர் இஸ்ட் அன் உன் பிரக் ஹ்பாரர் மன்
டேர் நிஷ்ட் பெ.ஃபேலன் உண்ட் அவுக் நிஷ்ட்
கெஹார்க்கன் கன் "

"Who is an useless man? He who can neither command nor obey."

இதை இன்னொருமுறை படித்து உச்சரித்துப் பாருங்கள். இதே கருத்தை இனிய தீவிய மதுர மொழியாகிய தமிழினியல் பயில் திருக்குறளிலும் எவ்வாறு கூறப்படுகின்றது என்பதைக் கண்டு உச்சரித்துப் பாருங்கள் :—

" ஏவவுஞ் செய்கலான் தான்தேருன் அவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்."

ஜெர்மன் வாசகத்தைப் படித்த வாயால் திருக்குறளைப் படிப்பது, பனம்பழத்தைக் கடித்த வாய்க்குப் பாலொடு தேன் கலந்த அமுது சுவைப்பதுபோன்று தித்திக்கும்.

இத்தகைய இனிய தீந்தமிழில் யாக்கப்பட்டது திருக்குறள். உலக மொழிகளுக்குள்ளே உயர் தனிச் செம்மொழியாய்த் தமிழ் தழைத்தோங்குவதற்கு முன்னுல் தமிழ் இத்துணைச் சிறப்படைந்திருக்கவில்லை. வடமொழியில் வேதம் இருக்கிறது, தமிழில் யாதுண்டு என்று பலர் எண்ணியிருந்தனர். திருவள்ளுவர் தோன்றினுர். திருக்குறள் எழுந்தது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் குறள் அரங்கேறியது. அங்கே வடமொழி

வாணரும் பலர் குழுமியிருந்தனர். ஒரு புலவர் வேதத்தையும் திருக்குறளேயும் சீர்தூக்கிப் பார்த்தார். இரண்டும் ஒத்து விளங்குவதாகவே அவருக்குப் பட்டது. சரி! ஆரியமும் தமிழும் ஒன்றையொன்று மிஞ்ச முடியாது என்று முடிவு கட்டிப்பாடினுர்.

> "ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந் திதனினிது
> சீரியதென் றென்றைச் செப்பரிதால்—ஆரியம்
> வேதம் உடைத்துத் தமிழ்திரு வள்ளுவனுர்
> ஓது குறட்பா உடைத்து."

இதைக்கேட்ட மற்றொரு புலவர், வேதத்திற்கில்லாத தனிச்சிறப்பு திருக்குறளுக்கு இருப்பதைக் கண்டு, வடமொழியைவிட தமிழே சிறப்புடையது என அறுதியிட்டார். வேதம் எழுதாக் கிளவி: அதை ஏட்டில் எழுதினுல் தெரிந்தவர்களும் தெரியாதவர்களுமாய்ப் படித்து, படித்தவன் பாட்டைக் கெடுத்தான், எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான் என்று ஆகிவிடும் எனப் பயந்து, ஏட்டில் எழுதப்படவில்லே. இவ்வாறு வேதம் சொல்லளவில், கேள்வி மாத்திரையே நின்று விட்டது. அதை ஏட்டில் எழுதி வைத்தால் பலரும் படித்து ஆராய்ந்து இது இவ்வளவுதானு என்று போய்விடும். ஆனுல் திருக்குறள் அப்படியில்லே. யாவரும் படித்துப் பயன் பெறுவிதமாய் எண்ணிறந்த ஏடுகளில் எழுதப்பட்டுள்ளது. நவில் தொறும் நவில் தொறும் அந்நூலின் நயம் நன்னர் மதிக்கப்படும். அதனேப் படிக்கப் படிக்க நவ நவமான பொருள்களே நல்கிக்கொண்டே யிருக்கும். மணற்கேணியைத் தோண்டத் தோண்ட நீர் ஊறி நிறைவதுபோல் அதைக் கற்கும் அளவிற்கு அறிவு சுரந்து பல்கிக் கொண்டே இருக்கும். அதனேக் கற்றீண்டு மெய்ப் பொருள் கண்டவர் மற்றீண்டு வாரா மெய் நெறியில் தலேப்படுவர். திருக்குறளேப் படிக்குந்தோறும்

அதனிடத்து நமக்கு மதிப்பு அதிகம் ஏற்படும். அதனுல், திருக்குறள் வேதத்தைவிட உயர்வு சிறப் புடையது என்று பாடினுர்.

"ஆற்றல் அழியுமென் றந்தணர்கள் நான்மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதார்—எட்டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனுர் முப்பாலைச்
சொல்லிடினும் ஆற்றல்சோர் வின்று."

இதைவிடவும் சிறந்ததோர் ஏற்றம் கண்டார் மற்ருெரு புலவர். வேதம் செய்யா மொழி. திருக்குறள் பொய்யா மொழி. வேதத்திற் கூறியபொருள் யாவும் திருக் குறளில் உண்டு. அதில் இல்லாத பொருள் இல்லை என்று சொல்வார்கள். வேதத்தை அந்தணர்கள் மட்டுமே கற்றுப்பயன் அடையலாம். மற்ற இனத்தவர் வேதம் பயிலுதல் கூடாது. ஆனுல் திருக்குறளை இன்னுர் இனியார் என்றில்லாது மனிதனுய்ப் பிறந்த யாரும் படிக்கலாம், படித்துப் பயன் அடையலாம். ஆகையால் எவ்வழியாகப் பார்த்தாலும், திருக்குறள் வேதத்தைவிட மிகச் சிறந்த நூல். அதுவே தமிழர் களின் திருமறை. அதனைக்கொண்டே தமிழ்மொழி ஏனைய மொழிகளைவிட உயர்ந்த மொழி. மனித குலத்திலே பிறப்பினுல் கற்பிக்கும் வேற்றுமையை ஒழித்து ஒத்தநிலை என்னும் ஒருமைப் பாட்டினையும் ஒழுக்கத்தையும் நிலை நாட்டிய நூல் திருக்குறள். ஏற்றம் கண்ட புலவர் எக்களிப்புடன் எழுந்து பாடினுர்.

"செய்யா மொழிக்கும் திருவள்ளு வர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருள் ஒன்றே—செய்யா
அதற்குரியர் அந்தணரே ஆராயின் ஏனை
இதற்குரியர் அல்லாதார் இல்."

மற்ருெரு சிறப்பும் திருக்குறளுக்கு உண்டு. வேதத்திற் கண்ட சில குறைபாடுகளையும் திருவள்ளுவர் திருத்தித் தமது திருக்குறளில் செப்பனிட்டிருக்கிருர். நாம் செய்ய

வேண்டிய கடமைகளாகச் சிலவற்றை எடுத்துக்கூறிய வேதம் அவற்றுக்கு மேலாக ஒன்றும் கூருது வாயடைத்துவிட்டது. திருவள்ளுவருக்கு இது மன அமைதியைத் தரவில்லை. மனிதன் செய்யவேண்டிய கடமைகள் எத்தனையோ விதத்தில் இடம் பொருள் ஏவலுக்கு ஏற்றவாறு தோன்றக்கூடும். அவையனைத்தையும் அளந்து வரையறை செய்துவிட முடியாது. இதனை அறியாத வேதம் ஒரு சிலவற்றையே கூறியது. அவற்றைக் கற்றவர்கள் அவ்வளவுதான் நம் கடமை என்று தவருக எண்ணிவிடக்கூடும். நாயனுர் எவ்வாறு இக்குறையைத் தீர்த்துத் தெளிவு செய்கிருர் பாருங்கள்.

"கடனென்ப நல்லவை யெல்லாம் கடனறிந்து
சான்ருண்மை மேற்கொள் பவர்க்கு."

தாயின் பசியைத் தீர்ப்பதற்கு ஒருவன் பாவமும் செய்யலாம் என்கிறது வடமொழி வேதம். அதனைக் கண்டித்துக் கூடாதென்று மறுக்கிறது தமிழ்மொழி வேதம்.

"ஈன்ருள் பசிகாண்பா ளுயினும் செய்யற்க
ஆன்ரேர் பழிக்கும் வினை."

இவ்வாருக, வேதத்தைவிட திருக்குறள் பொருட்செம்மையிலும் மேம்பாடுடையதாய் விளங்குகிறது. திருக்குறள் ஒரு மலர் போன்றது. மலர்களில் அழகில்லாத மலர்களும் உள. மேன்மேலும் வளரா நிற்கும் அழகினை உடையது குறள் மலர். அதன் அழகு கெடாமலும், மணம் குறையாமலும், செவ்வி வாடாமலும் இருப்பதால், அது ஒரு தெய்வ சக்தி வாய்ந்தது. அதன் பொருளாகிய தேன் என்றும் வற்ருது இனித்திருக்கும். மனிதனுக்கு வேண்டிய அறிவை யெல்லாம் தட்டாமல் அது வழங்கிக்கொண்டிருப்பதால் அது கற்பக மலரினும் சிறந்தது. திருக்

குறளைப் போன்றதொரு கற்பக மலர் தேவலோகத்திலும் இல்லை என்று இறையனாரே பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் பாடினார். அது இன்னும் உண்மையாக நின்று நிலவுகிறது.

"என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர்போல்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்."

—

# ஒன்றே முக்கால்

தமிழ்மொழிக்கே முதற்பாவலராய்த் திகழ்பவர் திருவள்ளுவர். அவரை மிஞ்சியவராய் எவரும் அவருக்கு முன்னும் இருந்ததில்லை, பின்னும் இருந்ததில்லை. இலக்கிய வானிலே திருவள்ளுவர் ஒரு சூரியன்; ஏனைப் புலவர்கள் தண்ணொளி மழுங்கித் தாமகலும் தாரகைகள். புலவர் என்ற பெயரைத் திருவள்ளுவர் தமக்கே உரித்தாக்கிக் கொண்டார். அவர் ஒருவரே புலவர், ஏனையோரைப் புலவர் என்று கூறுவது பொருந்தாது என்பதைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர் கிழார் என்பவர் கூறியுள்ளார்:—

"புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேல்
சிலவர் புலவரெனச் செப்பல்—நிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றுங்
கறங்கிருள்மா லைக்கும் பெயர்."

திருவள்ளுவர், அகன்று பரந்த அகவல் விருத்தத்தாலோ, கடலெனக் கலித்த கலிப்பாவாலோ, எஞ்சாது மிஞ்சிய வஞ்சிப் பாவாலோ தமது நூலைப் பாடவில்லை. பாக்களுக்குள்ளே முதற் பாவாகிய வெண்பாவாலே முதற் பாவலர் தமது நூலைச் செய்தார். வெண்பா, அகவற்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்ற நான்கு வகைப் பாக்களுக்குள்ளே வெண்பா ஒன்றுதான் கற்றற்கு மிக எளிது. 'வெண்பா இருகாலிற் கல்லானை' என்ற வாக்கையும் நோக்குக. ஆனால், வெண்பா பாடுதற்கும் மிக எளிது என்று நினைத்துவிட வேண்டா. எல்லாப் புலவர்களும் வெண்பாவை எளிதிற் பாடிவிடமுடியாது. மற்றப் பாக்களை யெல்லாம் சரமாரியாகப் பொழிந்து

விடுவார்கள். ஆனுல் வெண்பா என்றவுடன் புண்பாவிய மனத்தராய்க் கண்பால் நீர் பொழிந்து விடுவார்கள். இதனை,

" காசினியிற் பிள்ளைக் கவிக்கம் புலிபுலியாம்
பேசு முலாவிற் பெதும்பைபுலி—ஆசு
வலவர்க்கு வண்ணம் புலியாமற் றெல்லாப்
புலவர்க்கும் வெண்பாப் புலி."

என்ற பழம்பாட்டாலும் அறியலாம்.

அத்தகைய வெண்பாவிலும், அதன் பாவினங்களுள் அளவில் மிகமிகச் சுருங்கியதாகிய குறள் என்னும் வெண்பாவினுல் பாடினுர் திருவள்ளுவர். குறுகியிருப்பதால் குறள் என்னப்பட்டது. இரண்டடியால் வந்து செப்பலோசை யுடைத்தாய், முதலடி நாற்சீராய், இரண்டாவதாகிய ஈற்றடி முச்சீராய், வெண்சீரும் இயற்சீரும் வந்து, வெண்டளை தட்டு, வேற்றுத்தளை விரவாது, காசு, பிறப்பு, நாள், மலர் என்னும் வாய்பாட்டால் முடிவது குறள் வெண்பா. உலகையெல்லாம் அளந்து கட்டிய திருவள்ளுவர் பாடவந்த பொருளோ கடலினும் மிகப் பெரிது. ஆனுல், அதற்கு அவர் கையாண்ட கருவியோ மிகமிக நுண்ணிது. ஒரு குறள் பாட்டைப் பார்த்தவுடனே அஃது இரண்டு அடிகளைக் கொண்டது என்று யாரும் சொல்லி விடுவார்கள். உண்மையில் அஃது இரண்டடி ஆகாது. ஒவ்வொரு குறள் வெண்பாவிலும் ஒன்றேமுக்கால் அடிதான் உண்டு. யாப்பிலக்கணத்தில் நான்கு சீர் நிறைந்துவரும் ஒரு வரியைத்தான் அளவடி அல்லது நேரடி என்று கூறுவர். ஒரு குறளை எடுத்துக்கொண்டால், அதன் முதல் வரியில் நான்கு சீர்களும் குறையாமல் வந்து அளவடியாய் இருப்பதால், அஃது ஓர் அடியாகும். குறள் வெண்பாவின் இரண்டாவது வரியில் மூன்று சீர்களே வரலாம். மூன்று சீருக்கு

மிகவும் குறையவும் கூடாது. ஆகவே அது முக்கால் அடிதான் ஆகும். மூன்று சீர் வந்த அடியைச் சிந்தடி என்று கூறுவர். இவ்வாறு, ஒவ்வொரு குறளிலும் முதல்வரி ஒன்றும், இரண்டாவது வரி முக்காலும் ஆக ஒன்றேமுக்கால் அடிதான் உண்டு.

"பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்லல் தேற்றா தவர்"

என்ற தம் வாக்குக்கு ஏற்பவே, குறுகிய குறளைக் கொண்டு தம்முடைய பெருகிய அறநூலைத் திருவள்ளுவர் பாடினார். அதனால் அவர் பாடிய நூலும் வேறு எப்பெயரும் கொள்ளாது, திருக்குறள் என்று அவர் பாடிய பாவின் பெயரையே பெற்றது. தமிழ் இலக்கியத்தில் ஏனைப்பாக்களால் பாடப்பெற்ற நூல்கள் ஏராளமாய் மலிந்து குவிந்து கிடக்கின்றன. குறள் வெண்பாவால் யாத்த நூல்கள் ஒன்றிரண்டே உள்ளன அதன் பாடற் கருமையே இதற்குக் காரணம் என்னலாம்

திருக்குறள் முதல் அதிகாரமாகிய கடவுள் வாழ்த்தில், ஏழு குறள்களில் வள்ளுவர் இறைவனுடைய திருவடியைக் கூறி யிருக்கிறார். என்னவெல்லாம் கூறினார்? ஆகமம் முதலிய பல நூல்களைக் கற்பதன் பயன் அறிவு மயமான ஆண்டவனுடைய நல்ல தாளைத் தொழுவது என்றார். பிறவிப் பிணிக்கு மருந்தாகலின் இறைவன் திருவடியை 'நற்றாள்' என்று சிறப்பித்தார் இறைவன் திருவடி எங்கேயிருக்கிறது என்று அதனை நாம் தேடிக்கொண்டு அலையாமல், இருந்த இடத்தி லிருந்தே இடைவிடாது நினைத்த மாத்திரையில், அது நம்மைத் தேடிக்கொண்டு வந்து, நம் இதயப் பூவிலே ஏறி நடந்து, ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பங்களை நுகர்விக்கும் மாட்சிமை தோன்ற 'மாணடி' என்றும் சிறப்பித்தார். விருப்பு வெறுப்புகளை

அறுத்தவர்க்குத் தம்மைப்பற்றி வருவனவும் பிற உயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவும் ஆகிய மூவகையான எல்லாப் பிறவித் துன்பங்களையும் இறைவன் திருவடி போக்கிவிடும் என்றார் ஒப்புவமையில்லாத இறைவன் திருவடியைத் தவிர மனக் கவலைக்கு வேறு மருந்து இல்லையென்றார் பலவேறு வகைப்பட்ட அறங்கள் எல்லாவற்றையும் தனக்கு வடிவமாகவுடைய அருட்கடலாகிய இறைவன் திருவடியைச் சேர்ந்தால், காமமும் பொருளும்பற்றி வரும் அவலம் கெடும் என்றார். குணம் நிறைந்த அத் திருவடியை வணங்குதலே இவ்வுடம்பு எடுத்தலால் பெற்ற பயன் என்றார். இறைவன் திருவடியைப் புணையாகக் கொண்டே பிறவிக்கடலைக் கடத்தல் கூடும் என்றார். அத்திருக்குறள் வருமாறு :—

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்."

இக் குறளிற்கண்ட கருத்து அப்பர் அடிகளின் திருவாக்கு ஒன்றால் இனிது விளங்கிக் கிடத்தலை நாம் இங்குத் தெரிந்துகொள்ளலாம் :—

"துன்பக் கடலிடைத் தோணித் தொழில்பூண்ட தொண்டர்தம்மை
இன்பக் கரைமுகந் தேற்றுந் திறத்தன மாற்றயலே
பொன்பட் டொழுகப் பொருந்தொளி செய்யுமப் பொய்பொருந்தா
அன்பர்க்கு அணியன காண்கஐ யாறன் அடித்தலமே."

ஏழு சீர்கள் வரப்பெறும் குறள் வெண்பாவால் யாத்த திருக்குறளின் முதல் அதிகாரத்தில், ஏழு குறள்களில் இறைவன் தாளைக் கண்டோம். வள்ளுவர் வாக்கினின்றெழுந்த தமிழ்மறையில், இரண்டிரண்டு அடியாக வந்துள்ள ஒவ்வொரு குறளிலுமே சிவபெருமானின் இரண்டு திருவடிகளையும் காணலாம் என்கிறார் சிவப்பிரகாச சுவாமிகள் :—

" என்னடிகள் வெண்குறள்நேர் அடியி ரண்டும்
என்தலையில் இருத்தும்இறை வெங்கை நாட்டின்
முன்னடிகள் இரண்டுநெடில் அடிகள் பின்னர்
முயங்கடிகள் இரண்டுநேர் அடிகள் ஆகப்
பன்னடிகள் ஒருநான்கு கொடுந டக்கும்
பழுதகல்வெண் டுறைபோலப் படர்த லாலே
பின்னடிகள் எங்கள் திரு வடிகள் முன்னர்ப்
பெயர்ந்தஅடி எழில்இளஞ்சேய் அடிகள் ஆமே.'

(சுவடுகண்டு இரங்கல் என்னும் துறை: திருவெங்கைக் கலம்பகம்-42)

கற்பனையிற் கைவந்த அக் கவிப்புலவர் திருவள்ளுவரை 'என்னடிகள்' என்று பாராட்டுகிறார். ஒவ்வொரு குறளும் முதலடி நான்கு சீரும், இரண்டாவதடி முச்சீருமாக இரண்டு அடிகளையுடையது. சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளும் திருக்குறளின் இரண்டு அடிகளையும் ஒக்கும் என்பதே துறைமங்கலம் சுவாமிகளின் கருத்து.

"ஒய்விலாதன உவமனிலிறந்தன ஒண்மலர்த்தாள்" என்று மாணிக்கவாசகர் மனம் உருகிப் பாடினார். அத்தகைய உவமன் இல்லாத திருவடிகளுக்கு ஓர் உவமை கண்டு சொன்னார் சிவப்பிரகாசர். ஆனால் எத்தகைய உவமை? திருக்குறளின் ஒன்றே முக்கால் அடிகளை ஈசனுடைய இரண்டு அடிகளுக்கும் உவமை சொன்னார். ஐயோ! வேறு உவமை கூறியிருக்கலாகாதா? சிவனுடைய இரண்டு சீரடிகளுக்கு இரண்டு நேரடிகள் கிடைக்கவில்லையா? ஒன்றேமுக்கால் அடியைத்தானா உவமை கூறவேண்டும்? அங்ஙனமாயின் சிவனுக்கும் இரண்டு அடி என்று ஆகாது, ஒன்றே முக்கால் அடி என்றல்லவோ முடியும்? சிவன் காலிலும் ஒருகால் குறையுமே? அது ஊனமாகுமே? என்று சிறிது தயக்கம் ஏற்பட்டது. அப்பொழுது பளிச்சென்று அப்பர் அடிகளின் திருத்தாண்டகம் ஒன்று நினைவிற்பட்டது:—

" திருமகட்குச் செந்தா மரையாமடி
சிறந்தவர்க்குத் தேனுய் விளக்கும்மடி
பொருளவர்க்குப் பொன்னுரையாய் நின்றவடி
புகழ்வார் புகழ்தகைய வல்லவடி
உருவிரண்டும் ஒன்றேடொன்று ஒவ்வாவடி
உருவென்று உணரப் படாதவடி
திருவதிகைத் தென் கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி "

உருவிரண்டும் ஒன்றேடு ஒன்று ஒவ்வாத திருவடிகள் என்றல்லவோ அப்பரும் பாடியிருக்கிறர்! சிவன் திருவடிகளில் ஒன்று அளவடி. மற்றென்று சிந்தடிதான். சிவபெருமான் ஒரு காலிலே பொற்கழல் அணிந்திருக்கிறர். மற்றொரு காலிலே சிலம்பும் பாடகமும் கிண்கிணிச் சதங்கையும் ஒலிக்கின்றன. அப்பர் அடிகள் இதனையும் கூறியுள்ளார் :—

" சிலம்புஞ் செறிபா டகமுஞ் செழுங்கிண் கிணித்திரளும்
அலம்புந் திருவடி காண்க ஐயாறன் அடித்தலமே."
" பொருகழலும் பல்சிலம்பும் ஆர்க்கும்மடி."

ஆகா! இப்பொழுது சிவப்பிரகாசரின் உவமைப் பொருத்தம் எவ்வளவு சிறப்பாக விளங்குகின்றது! திருக்குறளடி இரண்டில், ஒன்று நாலு சீர்த்ததாய் நீளமான அளவடி; மற்றென்று முச்சீர்த்ததாய்க் குறுகலான சிந்தடி. இவ்விதமே சிவபெருமான் திருவடிகளுள் ஒன்று மற்றென்றைவிடக் குறுகிய அடியாகவே காணப்படும். சிவபெருமானுடைய வலத்தாள் ஆண் அடி; இடத்தாள் பெண் அடி. சிவபெருமான் திருவடிகளும் இரண்டு நேரடிகள் ஆகாமல், ஒன்றேமுக்கால் அடியாகவே இருக்கும். இவ்வாறு ஆண் அடி ஒன்றும் பெண் அடி ஒன்றுமாய்ச் சிவனுக்கு அமைந்ததால், ஆணும் பெண்ணும் அல்லாத அலியின் அடி என எல்லாரும் கேலி செய்யும்படியாகிவிட்டதே என்று அப்பர் பாடிய பாடல் வருமாறு :—

" வலியான் தலைபத்தும் வாய்விட் டலற வரையடர்த்து
மெலியா வலியுடைக் கூற்றை யுதைத்துவிண் ணோர்கண் முன்னே
பலிசேர் படுகடைப் பார்த்துப்பன் னாளும் பலரிகழ
அலியா நிலைநிற்கும் ஐயன் ஐயாறன் அடித்தலமே."

என்று நகைச்சுவை தோன்ற அப்பர் அடிகள் பாடிய நயம் நோக்கி இன்புறத்தக்கது.

ஆணின் அடியைவிடப் பெண்ணின் அடி எங்கும் எப்பொழுதும் சிறுத்தேயிருக்கும். திருக்குறளின் முதலதாகிய நீண்ட அடியை வலப்பக்கத்து அத்தனது அடியாகவும், இரண்டாவதாகிய சிற்றடியை இடப்பக்கத்தான அம்மையது அடியாகவும் ஒப்புநோக்கி உளங் குளிர்ந்து போற்றினார் சிவப்பிரகாசர். இதை நான் அறிந்தநாள் முதற்கொண்டு திருக்குறளைப் படிக்கும் போதும், காணும்போதும், நினைக்கும்போதும் எனக்குச் சிவபெருமானின் அர்த்தநாரீசுவர வடிவமாகிய அம்மையப்பரின் காட்சியும், அதைக்குறித்து அப்பர் பாடியுள்ள பாடல் ஒன்றும் மனக்கண்முன் தோன்றிக்கொண்டேயிருக்கும். அப்பாடல்,

" புதுவிரி பொன்செ யோலை யொருகாதொர்
காது சுரிசங்க நின்று புரள
விதிவிதி வேத கீத மொருபாடு மோத
ஒருபாடு மெல்ல நகுமால்
மதுவிரி கொன்றை துன்று சடைபாக
மாதர் குழல்பாக மாக வருவர்
இது இவர் வண்ண வண்ணம் இவள்வண்ண
வண்ணம் எழில்வண்ண வண்ண மியல்பே."

என்னும் தேவாரமாகும். சிவப்பிரகாசர் திருக்குறளடியையும் சிவனடியையும் ஒப்பிட்டதன் உட்கருத்தாவது, திருக்குறளைக் கசடறக் கற்று அதன் வழியே நின்று ஒழுகுவோர் ஈசன் கழலடியைச் சேர்வது திண்ணம் என்பதாம் ஆகவே, **திருக்குறள் அடியும் ஒன்றேமுக்கால், சிவன் சேவடியும் ஒன்றேமுக்கால்!** சிவன் திருவடி நல்கும் சிறப்பையெல்லாம் திருக்குறள் மூலமும் நாம் அடையலாம்

---

## மெய் விளக்கு

விளக்கை அணைத்தால் இருட்டை வா என்று கூப்பிடவும் வேண்டுமா? விளக்கு அணைந்தது என்று இருட்டுக்கு எப்படித்தான் தெரிந்துவிடுமோ தெரியவில்லை. உடனே வந்து அப்பிக்கொள்கிறது. அது யாரும் கூப்பிடாமலே வந்து விடுகிறது. இல்லை, வந்துவிடும் என்று சொல்வது தப்பு. அது தானுகவே தோன்றிவிடுகிறது. விளக்கொளியில் அது சற்று மறைந்து ஒதுங்கி யிருக்கிறது. தன் ஆற்றல் குன்றி யிருக்கிறது. விளக்கின் ஒளி குன்றினல் இருள் வலுப்பெற்று முன்னல் தோன்றிவிடுகிறது. இருளுக்கும் ஒளிக்கும் எப்பொழுதும் ஒரே ஓயாத போராட்டம் தான். ஒன்றையொன்று மிஞ்சுவதற்கு முயன்று கொண்டே யிருக்கும். வெளிச்சம் எப்பொழுது குன்றி மங்கி மறையும் என்று இருள் காத்துக்கொண்டே யிருக்கும். விளக்கொளி மறைந்தால் இருள் கதுமெனப் பாய்ந்து கவ்விக்கொள்ளும். இவ்வுண்மையைத் திருவள்ளுவர் எவ்வளவு அழகாகச் சுருக்கிக் கூறினர் தெரியுமா? "விளக்கற்றம் பார்க்கும் இருளே போல்" என்ருர்.

மின்சார விளக்கின் ஒளியிலே இரவில் வீற்றிருக்கிறேம். இரவும் பகல் போல் வெளிச்சமாய் இருக்கிறது. திடீரென்று மின்சாரம் தடைப்பட்டு விளக்கு அணைந்துவிட்டால் எப்படி இருக்கும்? இது என்ன கேள்வி? எங்கும் ஒரே இருட்டாக இருக்கும். எங்கும் இருள் கவிந்தவுடன் நமக்கு ஓர் அச்சம் உண்டாகிறது. நமது அமைதி குலைகிறது. எப்பொழுதுதான் வெளிச்சம் வருமோ என்று ஏங்குகிறேம். எண்ணெய் விளக்காவது அகல் விளக்காவது எங்கு இருக்கிறது என்று தேடுகிறேம். மின்சார அலைகள் மீண்டும் வந்து

விடாதா என்று கண்ணை உருட்டியுருட்டி விழிக்கிறோம். அது குருட்டுப் பார்வையாகவே இருக்கிறது. நெருப்புப்பெட்டி வைத்த இடமும் தெரிவதற்கில்லை. சுற்று முற்றும் உள்ள பொருள்களையும் காணக்கூடவில்லை. எழுந்து நடந்தால் தட்டுண்டு தடுமாறி மோதிக்கொள்கிறோம். கண்ணிருந்தும் காண்பதற்கில்லை. நெஞ்சம் திகில் அடைகிறது. வயிறு பகீர் என்கிறது. யாராவது வந்து நம்மை அடித்துவிடுவார்களோ என்ற வீணான குழப்பங்கள் தோன்றா நிற்கும். இருட்டிலே இருக்க மனம் கொள்ளாது குழந்தைகள் கூட வீறிட்டு அழத் தொடங்கிவிடும். எவ்வளவு பொல்லாதது இருட்டு, பாருங்கள்!

இருள் நம் கண்ணைக் கெடுக்கிறது, மதியை மயக்குகிறது. துக்கத்தைக் கக்குகிறது. பழிபாவச் செயல்களைத் தூண்டுகிறது. மனவமைதியைத் தகர்த்தெறிகிறது. மனித சக்தியைக் குன்றச் செய்கிறது. மனிதன் ஒளியிலே பிறக்கிறான். இருளிலே இறக்கிறான். எப்படி? பகலில் வெளிச்சத்தில் விழித்திருக்கிறான். ஓடி உழைக்கிறான், வயிற்றுக்கு வழி தேடிப் பிழைக்கிறான். ஊக்கமாய் வேலை செய்து இன்பத்திலே திளைக்கிறான். இரவு வந்து இருள் சூழ்ந்துகொண்டால் களைப்பு ஏற்படுகிறது. சலிப்புத் தட்டுகிறது. மனிதன் ஒன்றுக்கும் உதவாது படுத்து உறங்க ஆரம்பித்துவிடுகிறான். இருள் மனிதனுக்கு மரணம் போன்றது. கொடுமை வாய்ந்தது. நரகத்தைப் பயங்கரமாக்குவது. இருளே நரகம். நரகத்தை "இருள் சேர்ந்த இன்னாவுலகம்" என்றும் "ஆரிருள்" என்றும் திருவள்ளுவர் கூறியது காண்க. நரகில் ஒளியே கிடையாதாம். இருளடித்தே கிடக்கும்.

இருட்டிலே ஒரு சிறு எண்ணெய் விளக்காவது நமது முன்னிலையில் ஏற்றப்படுமானால் நமது கண்

திறக்கிறது. ஒளி நமக்குத் தோழன். நமது மனதிற்கு இன்பம் அளிப்பது ஒளி. அது நமது உள்ளத்திற்குத் தைரியத்தை ஊட்டுகிறது. பளிச்சென வெளிச்சம் வீசினுல் பதறிய நெஞ்சமும் இதத்தைப் பெற்று உவகையடையும். இதற்குள் வராதிருந்த மின்சார ஒளியும் வந்து விட்டால் நாமும் பழையபடி மனிதராகி விடுகிருேம். விளக்கொளியிலே வீறு பெற்று விளங்குகிருேம். இருளிலே இடிந்து போய் மலேந்து குமைந்து மங்கி மயங்கிய நாம் விளக்கொளியிலே பொங்கி எழுகிருேம். இருளே வென்றுவிட்டதாக இறுமாப்படைகிருேம்.

இவ்வாறு இருட்டும் வெளிச்சமும் மாறி மாறி வருகின்ற இவ்வுலகில் இருளேக் கண்டு அஞ்சாதார் இல்லே. சிறுவர் முதல் பெரியோர் வரை எல்லாரும் இருளே வெறுக்கின்றனர். செல்வராயினும் வறியராயினும் ஒவ்வொருவரும் தங்கள் தகுதிக்கேற்ப விளக்குகள் ஏற்றி இருளே ஓட்டுகின்றனர். இருள் நமக்குப் பகையாகிக் கெடுதல் விளேக்கிறது என்பதை எல்லாரும் உணர்கின்றனர். ஆனுல் இதுவெல்லாம் புறத்தே காணப்படும் பூத இருள்தான். நம் அகத்தே திணிந்து கிடக்கிற இருளே உணர்வார் இல்லே. கோடி விளக்கேற்றி இருளேயும் பகலாகச் செய்துவிடலாம். ஆனுல் இவ்விளக்கொளியால் புறவிருளே அகற்றலாமே யன்றி நம் அகவிருளே அகற்றமுடியாது. நம் மனதை மருட்டி மதியை மயக்கி அறிவைக் குலேத்து ஆன்மாவை அழுத்திக் கிடக்கும் ஆணவ மல இருள் மிக மிகக் கெட்டது. புறவிருள் பிற பொருள்களே மறைத்தாலும் தன்னே மறைக்காது வெளியே காட்டும். நம் மனதை மயக்கும் ஆணவ மல இருளானது தன்னேயும் காட்டாது, தான் மறைத்த ஆன்மாவையும் காட்டாது.

திருவருட்பயன் என்ற சித்தாந்த நூலிலே ஒரு குறள் கூறுவது :—

" ஒரு பொருளுங் காட்டா திருள் உருவங் காட்டும்
இரு பொருளுங் காட்டா திது. "

இதன் கொடுமையை உணர்ந்து தான், தாயுமானவர், "அந்தகாரத்தையோர் அகமாக்கி, மின் போல் என் அறிவைச் சுருக்கினவர் யார்?" என்று அகம் உருகிக் கதறினர். பொய்மை நிறைந்த இந்த ஆணவ இருளையே நாம் அஞ்சவேண்டியது. அதைக்கொன்று களையும் ஞான விளக்கைத் தேடிப் பெறவேண்டியது. புறவிருள் நம்மை ஒன்றும் செய்துவிடாது. அதற்கு அஞ்சவேண்டியதே இல்லை. ஆனால் சாதாரண மக்கள் இந்த அக விருளைப்பற்றி நினைப்பதே கிடையாது. பின் அதற்கு ஏன் அஞ்சப் போகிறார்கள்? புற விருளைக் கண்டு தான் அஞ்சுவார். இவ்வாறு உலகில் மாந்தர் அஞ்சவேண்டியதற்கு அஞ்சுவதில்லை. அஞ்ச வேண்டாததற்கு அஞ்சுகிறார்கள். இது எவ்வளவு அறியாமை, பாருங்கள் !

"அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவ
தஞ்சல் அறிவார் தொழில். "

என்றார் வள்ளுவரும்.

ஒவ்வொருவர் மனதிலும் அறியாமையாகிய இருள் மண்டிக்கிடக்கிறது. அறிவாகிய ஒளி உள்ளே நுழைய நுழைய அறியாமையாகிய இருட் படலம் சுருட்டிக்கொண்டு ஓடுகிறது. நாம் சிறிது சிறிதாக அறியும் பொழுதுதான் நமது அறியாமை எத்துணை பெரிது என்பதை அறிய முடிகிறது. "அறிதோறறியாமை கண்டற்றால்" என்றார் வள்ளுவரும். அறிவு என்பது என்ன? அது வேறு ஒன்றும் இல்லை. உண்மையை உள்ளவாறு உணர்வதுதான் அறிவு.

இதனை, "எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப் பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்று விளக்கியது தமிழ் மறை. ஆகவே அறியாமை என்பது உண்மையல்லாத பொய்மை என்பது தானே பெறப்படும். ஆம், அறியாமை என்பது பொய்மை யாகிய இருள்தான். இந்தப் பொய்மையாகிய அகத் திருளை அறிவு என்னும் உண்மை விளக்கேற்றி ஓட்ட வேண்டியது ஒவ்வொருவரின் கடமையுமாகும். இதற்குக் காசு பணம் தேவையில்லை. உண்மையை உள்ளி வாய்மையை வாயால் வழங்கி, மெய்மையை மேவிச் செய்து நடப்பதற்குக் காசு பணம் வேண்டுமா? காசு பணத்தை விரும்பித்தான் உள்ளொளியைத் தள்ளி அணைத்துப் பொய்மை யிருட்டை அணைந்து புகவிடுத்து மாசுபடுகின்றனர். காசு பணத்தாலும் காண்டற்கரிய உயரிய புகழை உண்மை ஒரு நொடியில் அளித்து விடும். பொய்மை உள்ளம் பாழ்பட்டுப் பதங்குலையும். உண்ணிறைந்திருக்கும் பொய் யிருளை விண்ணிறைந்தோங்கும் சூரிய சந்திரர்களாலும் களைய முடியாது. உண்மை யொளியாகிய சத்திய சோதி ஒன்றுதான் மனம் குடிகொள்ளும் பொய்யிருளைப் போக்கவல்லது. மனதை இருட்டிலே புகுத்திவிட்டு வெளியே ஒருவன் எத்தனை வெளிச்சத்தில் இருந் தாலும் பயன் இல்லை. ஒருவனுக்குப் பணம், பதவி, பட்டம், மாடு, மனை, மக்கள் ஆகிய விளக்கங்கள் எவ்வளவு இருந்தாலும், உண்மை விளக்கமும் அவனிடம் ஒளிவிட வேண்டும். அவன் பொய்யன் என்று ஆகிவிட்டால் இருளில் தொலைந்தவனே யாவான். அவன் வாழ்க்கை விளக்கம் பெறாது. பொய்யனை ஒருவரும் விரும்ப மாட்டார்கள். அவன் தன்னைத்தானே விரும்பமாட்டான். அவனுக்குப் புகழும் கிட்டாது; பழிவந்து குவியும். பொய்யன் மனது

நிம்மதி கொள்ளாது. ஒரு பொய்யை மறைக்கப் பல பொய்கள் சொல்வான்.

புறவிருளுக்கு அஞ்சி விளக்கைத்தேடி ஓடுகின்றவர்கள் பொய்யாகிய இருளை உள்ளத்திலே ஊற்றிக் கொண்டு திரிகிறார்களே, இது என்ன பேதைமை! இவர்களை நோக்கித்தான் மெய்யே உருவான மணிவாசகனார், "யானே பொய் என் நெஞ்சும் பொய் என் அன்பும் பொய்" என்று வருந்தினார் போலும்! பொய் என்பது ஒரு பொல்லாத இருள் என்பதை நாம் உணரவேண்டும். அது இம்மையையும் மறுமையையும் பாழடிக்கும் பேரிருள். அதை ஒழிப்பதற்கு உள்ளே முளைத்தெழும் நெஞ்சறி மெய் விளக்கை நாம் அணைத்து விடக்கூடாது. "தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின் தன்னெஞ்சே தன்னைச் சுடும்." என்பது பொய்யா மொழி. அகத்தினிலே உண்மையொளி உண்டாயின் வாக்கினிலே முகத்தினிலே வாழ்க்கையிலே உண்மையொளி உண்டாகும். திங்கள் கதிர்களாலும், எந்த வேறு விளக்குகளாலும் ஒருவன் விளங்கப் போவதில்லை. உண்மை என்னும் ஒளிவிளக்கு ஒன்றுதான் மனிதனை விளங்கச் செய்யும். அதுவே ஞானவிளக்கு. இதனைத் திருவள்ளுவர், "எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு." என்று அழகாகக் கூறினார். மேலும் சத்தியநெறி ஒன்றுதான் உண்மையான புகழை மனிதனுக்கு அளிக்கவல்லது. "பொய்யாமையன்ன புகழில்லை" என்று முடித்துக் கட்டினார் வள்ளுவரும். இம்மைக்குப் புகழும் மறுமைக்கு வீட்டின்பமும் அளிக்கவல்லது வாய்மை. உண்மையொளி கொண்டுதான் உயிர் ஆண்டவன் சன்னதியை அடைய முடியும். பொய்யிருளுக்கு ஆண்டவனிடத்தில் வேலையேயில்லை. 'சிவமா நகர் குறுகப் போனா

ரடியார் யானும் பொய்யும் புறமே போந்தோமே'' என்ற மணிவாக்கும் இதை வலியுறுத்துகிறது. மனத்திலே பொய்யாகிய இருளை வளரவிட்டு ஒருவன் செல்வம் நிறைந்து பெரிய மனிதன்போல் திரிவது, தொழுநோய் பிடித்த ஒருவன் பட்டாடையாற் புனைந்து கொண்டு பகட்டுவது போலாகும். பொய்யுடைய நெஞ்சிலே இறைவனுக்கும் வேலையில்லை. பொய்யர் அறியாப் புண்ணியமே! பொய் வளரும் நெஞ்சினர்கள் காணாத காட்சியே! என்ற முதுவாக்குகளும் உள. ஆதலால் பொய்யை அஞ்சிப் போகவிட்டு உண்மை மொழி பயில்வோர் புகழுடையர். அவர்களுக்கு இறைவன் திருவருள் கைகூடுவது திண்ணம். இதைத் திருநாவுக்கரசர் தேவாரம் ஒன்றும் தெரிவிக்கிறது.

"பையஞ் சுடர்விடு நாகப் பள்ளிகொள் வானுள்ளத்தானும்,
கையஞ்சு நான்குடை யானைக் கால்விரலாலடர்த்தானும்,
பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப் புகழ் புரிந்தார்க்கருள் செய்யும்
ஐயஞ் சினப் புறத்தானு மாரூரமர்ந்தவம் மானே."

மெய்விளக் கொளியையே மேவி வாழ்ந்து மேன்மையுறுவோமாக.

---

# ஞான விளக்கு

முதலாழ்வார்கள் என்னப்படும் பொய்கையார், பூதத்தார், பேயார் என்ற மூவரும் திருக்கோவலூரில் நெருக்கமான இடைகழி ஒன்றில் மழை பெய்த ஒரு நாள் இரவு ஒண்டிக்கொண்டு நின்றனர். அந்தச் சுருங்கிய இடத்தில் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம். அவ்வளவுதான் இடம் உண்டு. நான்காமவருக்கு அங்கே நிற்கவும் இடம் கிடையாது. கிள்ளிவிட்டுக்கிட்டே நின்ருலும் தெரியாத நள்ளிருள் எங்கும் கவிந்திருந்தது. அந்த நிலையில் திருமால் ஆழ்வார்களுக்கு அருளும் பொருட்டு ஒரு திருவிளையாடலைச் செய்தார். அந்த இடை கழியில் திருமால் நான்காமவராக ஆழ்வார்கட்கிடையில் புகுந்து நெருக்கினுர். அவரை யாரென்று தெரிய வேறு விளக்கின்மையால், முதலாழ்வார்கள் மூவரும் ஞான விளக்கேற்றி அறிய முயன்ருர்கள். ஞான விளக்கு அழகிய தமிழ்ப் பாடல்களாய்ச் சுடர்விட்டு விளங்கியது. எப்படி? பொய்கையாழ்வார் ஒரு பாட்டுப் பாடி உலகம் பூருவும் உள்ள இருளை விரட்டியடித்தார் :—

" வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக—செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே யென்று."

இப்பாடல் புறவிருளைத்தான் போக்கிற்று. அகவிருள் தொலையாதவரை ஆண்டவனைக் காண முடியுமா? அகவிருளைப் போக்குதற்கு ஞான விளக்காக ஒரு பாடலைப் பாடினுர் பூதத்தாழ்வார் :—

" அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா—நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான். "

பூதத்தாழ்வார் ஞான விளக்கை ஏற்றி முடிக்கு முன், பேயாழ்வார் இறைவனைக் கண்டுவிட்டார். தங்களிடையே புகுந்து நெருக்கிய திருடன் திருமாலே என்பதை உணர்ந்தார். துள்ளிக் குதித்து ஞான விளக்கொளியிலே பாடலுற்றார் :—

" திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்—செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பால் இன்று."

இவ்வாறு மூன்று ஆழ்வார்களும் ஞான விளக்கேற்றிப் பொய்யிருளை அகற்றி மெய்யொளியாகிய இறைவனைக் கண்டு தொழுதார்கள். இது போலவே நமது சமய குரவர்கள் பலரும் ஞான விளக்கேற்றி நாயகனைக் கண்டிருக்கிறார்கள். ஒரு விளக்கை ஏற்றுவதென்றால் அதற்கு ஓர் இடம் வேண்டும். அகல் வேண்டும். நெய் வேண்டும். திரி வேண்டும். நெருப்பும் வேண்டும். திருநாவுக்கரசர் உடலாகிய வீட்டிலே உள்ளத்தை அகலாக அமைத்தார். நூலறிவாகிய உணர்வை நெய்யாக ஊற்றினார். பிராண வாயுவாகிய உயிரைத் திரியாக மாட்டினார். அதிலே அநுபவ ஞானமாகிய தீயால் சுடர் ஏற்றினார். உள்ளொளி பரக்க ஞான விளக்கு ஆணவமாகிய பொய்யிருளைப் போக்கியது. ஒருமை மனதுடன் வாகீசப் பெருந்தகையார் இறைவனைக் கண்டு வணங்கினார் :—

" உடம்பெனும் மனையகத்து உள்ளமே தகளியாக
மடம்படு உணர்நெய் அட்டி உயிரெனும் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே."

இத்தகைய ஞான விளக்கை ஏற்றுவதற்கு அப்பர் கையாண்ட உபாயம் என்ன? சாதாரணமாக நாம் வீட்டு விளக்கை யேற்றுவது போலவா அவர் ஞான

விளக்கை ஏற்றினர்? நாம் சொல்லுகிற வீட்டு விளக்கெல்லாம் நாம் கண்ணுற் காணக்கூடிய விளக்கு. ஒளியுடையதுதான். ஆனல் அது வீட்டிலுள்ள புறவிருளைத் தான் போக்கும். நம் மனதில் அடர்ந்து செறிந்த மன இருளைப் போக்காது. அதைப் போக்குதற்குரிய நல்ல ஞான விளக்கு நமச்சிவாய மந்திரந்தான். அந்த ஐந்தெழுத்து மந்திரத்தை வாயார ஓதி நெஞ்சாலே நினைந்து ஒருமை மனதுடன் இருந்தால் அம்மந்திரமே ஞான விளக்காகும், என்று அப்பர் விளக்கியுள்ளார் :—

" இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சிவாயவே." இதனை,
" ஊனிலு யிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞான விளக்கினை யேற்றி நன்புலத்
தேனை வழிதிறந் தேத்துவார்க்கிடர்
ஆன கெடுப்பன வஞ்செ ழுத்துமே."

என்ற சம்பந்தர் பாட்டாலும் அறியலாம்.

இவ்வாறு ஞானத் தீயை அனல் மூட்டி வழிபட்டால் சிவபெருமானே ஞான விளக்காய் சிந்தையுள்ளே செங்கதிர் பரப்பிக் கள்ளத் தன்மை வாய்ந்த பொய்யிருளைப் போக்கி வைப்பார். அப்பொழுதுதான் ஆன்மாவுக்குரிய ஆசா பாசங்கள் அறவே அற்றொழியும், என்கிறார் அப்பர் :—

" வெள்ளத்தைச் சடையில் வைத்த வேதகீ தன்றன் பாதம்
மெள்ளத்தா னடைய வேண்டின் மெய்தரு ஞானத் தீயால்
கள்ளத்தைக் கழிய நின்றார் காயத்துக் கலந்து நின்று
உள்ளத்து ளொளியு மாகும் ஒற்றியூர் உடைய கோவே."

இத்தகைய ஞான விளக்கைத் துணைக்கொண்டே நாம் உலக மாய மயக்குகளான மண், பொன், பெண் என்பவற்றை ஒழிக்கலாம். மனதிலுள்ள கள்ள இருளைக்

கிழித்தெறியலாம். ஆண்டவனை உணர்ந்து அவன் தாள் அடையலாம் என்றும் அப்பர் கூறினர் :—

" பொள்ளத்த காயமாயப் பொருளினைப் போக மாதர்
வெள்ளத்தைக் கழிக்க வேண்டில் விரும்புமின் விளக்குத் தூபம்
உள்ளத்த திரியொன் றேற்றி யுணருமா றுணர வல்லார்
கள்ளத்தைக் கழிப்பர் போலுங் கடவூர்வீ ரட்டனுரே. "

இவ்வாறு நாம் உடம்பினுள்ளே ஞான விளக்கை ஏற்றுவதென்றால், அது அவ்வளவு எளிதான காரியமில்லை. அதற்கு எத்தனையோ இடையூறுகள் வரும். இந்த உடலினுள்ளே உயிருக்குள்ள அதிகாரம் கொஞ்சம்தான். ஐம்புல உணர்ச்சிகளாகிய கயவர்களுக்குத்தான் உடலில் வலிமை அதிகம். ஐம்பொறிகள் தாம் உடலில் அதிக உரிமை பாராட்டுகின்றன. நாம் ஞான விளக்கை ஏற்றி விட்டோம் என்று மகிழ்ந்து போய் அலட்சியமாய் இருந்துவிட்டால், மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் இந்த ஐம்பொறிகளும் விளக்கை அணைத்து விடும். அவைகளுடைய தீய கொடிய நரகச் செயல்களுக்கு இந்த ஞான விளக்கு இடைஞ்சலாய் இருக்கும். ஆகையால் அவைகள் தூய அறிவாகிய ஒளியை ஓங்க வொட்டாது ஒழிக்கப் பார்க்கும். திருநாவுக்கரசரே எவ்வளவோ திண்டாடிப் போயிருக்கிறார். அவருக்கு ஐம்புல முரடரின் வஞ்சனையும் சூழ்ச்சியும் எவ்வளவோ துயரை விளைத்தன. திருநாவுக்கரசர் அலறினர், உலறினர், அஞ்சினர். கதறினர். சிவபெருமானிடத்திலே அழுது குறையிரந்து வேண்டினர் :—

" மெய்யுளே விளக்கை யேற்றி வேண்டளவுயரத் தூண்டி
உய்வதோ ருபாயம் பற்றி உகக் கின்றேன் உகவா வண்ணம்
ஐவரை யகத்தே வைத்தீர் அவர்களே வலியர் சாலச்
செய்வதொன் றறிய மாட்டேன் திருப்புக லூர னீரே."

இவ்விதம் நெஞ்சிலே இருள் திரும்பும் பொழுதெல்லாம், திருநாவுக்கரசர் ஞான விளக்கை அணைய விடாது

தூண்டிக் கொடுத்துக் கொண்டே ஆண்டவனைத் தரிசிப்பாராம். அதனை எவ்வாறு கூறுகிறார் பாருங்கள் :—

"தீண்டற் கரிய திருவடி யொன்றினால்
மீண்டற் கும்மிதித்தார் அரக்கன்தனை
வேண்டிக் கொண்டேன் திருவாய்மூர் விளக்கினைத்
தூண்டிக் கொள்வன்நா னென்றலுந் தோன்றுமே."

அங்ஙனம் தமது ஞானவிளக்கைத் தூண்டிய பொழுதெல்லாம், திருநாவுக்கரசர் விளக்கையும் விளக்கின் ஒளியையுமா கண்டார்? இல்லை. இறைவனையே கண்டார். இறைவன் சோதிச் சுந்தரமாய்ச் சுடர்விட்டிலங்கக் கண்டார். ஞான விளக்காகிய கருவியே அதன் பயனாகிய ஞானக் கொழுந்தாய் வாலறிவனாய் வண்ணம் செய்தொளிரக் கண்டார். கருவி மறைந்து கருத்தனே முழுதும் அக விடத்தைக் கவரக் கண்டார். இறைவனே ஞான விளக்கு. சிவப்பிரகாசமே செஞ்சுடர்ச் சோதியாய், இருள் கடிந்துள்ளத் தெழுகின்ற ஞாயிறாய்க் குதிகொளக் கண்டார். இறைவனே ஞான விளக்காய் உண்மை உருவுடன் பொய்யற்றுப் பொலியக் கண்டார். தமது உள்ளமாகிய விளக்குத் தகளியிலே இறைவனே நெய்யும் திரியுமாக நின்று நிழல் விடு சோதியாய் நிமிரக் கண்டு மனம் உவந்து பாடினார் :—

"நொய்யவர் விழுமியாரு நூலினுள் நெறியைக்காட்டும்
மெய்யவர் பொய்யுமில்லார் உடலெனும் இடிஞ்சில் தன்னில்
நெய்யமர் திரியுமாகி நெஞ்சத்துள் விளக்குமாகிச்
செய்யவர் கரிய கண்டர் திருச் செம்பொன்பள்ளியாரே."

தாம் கண்ட காட்சியைப் பிறருக்கெல்லாம் விண்டு விளம்பினார் அப்பர் அடிகள். அதுபோல் ஒவ்வொருவரும் ஞான விளக்கை அகத்தே மாட்டவேண்டும் என்று கூவியழைத்தார். துயரத்தில் அழுந்தித் துடிக்

கின்ற மக்களை நோக்கி மனம் வருந்திய நாவரசர், நல்வழி சென்று நம்பனையடைய ஞான விளக்கை அகத்தே ஏற்றி நாதனை வழிபடுங்கள் என்று நாதப் பறையறைந்தார் :—

" தானத்தைச் செய்து வாழ்வான் சலத்துளே யழுந்துகின்றீர்
வானத்தை வணங்க வேண்டில் வம்மின்கள் வல்லீராகில்
ஞானத்தை விளக்கை யேற்றி நாடியுள் விரவ வல்லார்
ஊனத்தை யொழிப்பர் போலும் ஒற்றியூருடைய கோவே."

வானவர் கோமானை ஞான விளக்கொளியில் வழுத்தி வணங்க வம்மின்கள் வல்லீராகில் என்றார் வாகீசர். அவ்விதம் வல்லவர்கள் தாமே ஞான விளக்கேற்றிக் காண முடியும்? அதற்கு உரன் என்னும் தோட்டியால் ஓரைந்தைக் காத்தலும் மற்றும் யோக சாதன முறைப் பயிற்சியும், உயிராவணம் இருத்தலும், உற்று நோக்குதலும், உள்ளக்கிழியில் உருவெழுதுதலும் முதலிய செய்தாக வேண்டுமே! இவற்றைச் செய்ய வல்லார் யார்? எல்லாரும் அவற்றைச் செய்து முடிக்க முடியுமா? அப்பர் போன்ற ஞானிகள் பலரும் ஞான விளக்கேற்றினார்கள், இறைவனைக் கண்டார்கள். அதுபோல் நம்மையும் ஞான விளக்கேற்றி மனத்திருளை மாய்க்கச் சொன்னார்கள். நம்மால் அதனை எளிதில் சாதித்து விட முடியாது. ஆனால் வள்ளுவனார் ஒரு வள்ளலாய் வந்து, ஒருவரும் செய்யாத பேருதவியை உலக மக்களுக்குச் செய்தருளினார். மனத்திருள் நீக்கும் மாசிலா ஞான விளக்கை வையகத்தார்க்கு வள்ளுவர் வழங்கினார். அவர் ஞான விளக்கின் விசித்திரம் தான் என்னே! அறத்தையே அகலாக அமைத்தார். பொருளைத் திரியாகப் பொருத்தினார். இன்பம் நெய்யாக இளகியது. குறட்பாவாகிய தண்டிலே அகலை ஏற்றி வைத்தார். செவ்விய தீவிய அழகிய செந்தமிழ்ச் சொற்களால் தீயைக் கொளுவினார்.

திருக்குறளாகிய ஞான விளக்கு சோதியாய்ச் சுடராய்ச் சூழொளி விளக்காய், உலகத்தார் உள்ளக் குகையில் மண்டிக் கிடக்கும் மருளாகிய இருளை விரட்டி யடித்தது. ஞான விளக்கை நமக்கென்று தயாராக ஏற்றிக் கொடுத்து விட்டார் திருவள்ளுவர். நம் வேலை குறைந்து விட்டது. நாம் ஞான விளக்கை உண்டாக்க வேண்டியதில்லை. நமது மனதில் மட்டும் திருக் குறளின் சோதியொளி வீசும்படி செய்தல் வேண்டும். அதற்குத் திருக்குறளைப் பயிலவேண்டும். நாம் செய்ய வேண்டிய தெல்லாம் அவ்வளவுதான். அதைச் செய்து விட்டால், அஞ்ஞானம் என்னும் அறியாமையாகிய பொய்யிருள் நம் அகத்தினின்று பேர்த்தெடுக்கப்பட்டு இல்லையாய்ப் போயொழியும். வீட்டின்பம் மிக எளிதில் கைகூடும். இம்மையிலும் இவ்வுலகில் இருள் நீங்கி நம் அறிவு தூய்மையுற்று இன்பம் பெற்றுச் சிறப் படையும். திருக்குறள் விளக்கின் இன்ப ஒளி வெள்ளத்திலே நாம் என்றும் திளைத்திருக்கலாம். இத்தகைய முப்பாலின் தப்பாச் சிறப்பினை நப்பாலத் தனார் எப்பாலோரும் வியக்கச்செப்பினர் :—

" அறம்தகளி யான்ற பொருள்திரி இன்பு
சிறந்தநெய் செஞ்சொல் தீத் தண்டு—குறும்பாவா
வள்ளுவனார் ஏற்றினார் வையத்து வாழ்வார்கள்
உள்ளிருள் நீக்கும் விளக்கு. "

திருக்குறள் நூல் ஓர் அணையாத சோதி. அதன் சுடர் ஒளி மக்கள் மனத்தில் வளைந்து கிடக்கும் இருள் மாசினை அறுத்தெறிய வல்ல கதிர்வாள் போன்றது. அதன் பேரொளியிலே அறிவு விடுதலை யடைந்து தன் ஆற்றல் முழுதையும் பெற்று விடுகிறது. அறியாமை, அஞ்ஞானம், பேதைமை, காமவெகுளி மயக்கங்கள், மடமை திரிபுணர்ச்சிகள், புகைத்தும்

பகைத்தும் மிகைத்தும் உகைத்தும் துகைத்தும் எழுகின்ற பல்வேறு ஆசைகள் என்னும் இவை முதலாய இருட் படலங்கள் யாவும் தகர்த்தெறியப் படுகின்றன. திருக்குறளே ஞானவிளக்கு. அதன் ஒளி எங்கும் பரவுக. அதன் ஒளியிலே நாம் என்றும் வாழ்வோம்.

---

# திருக்குறட் புலி

ஓர் ஊரில் திருக்குறள் அவதானியார் ஒருவர் இருந்தார். அவர் திருக்குறளில் அதிகத் தேர்ச்சி பெற்றவர் என்று எப்படியோ எங்கும் பெயர் உண்டாகி விட்டது. ஆனால் அதற்குக் காரணமும் அவர்தாம். யாரிடத்தில் எதைப்பற்றிப் பேசும் பொழுதும், பிறருக்குத் திருக்குறளில் ஒன்றும் தெரியாது என்று அடித்து விடுவார். அதனால் தமக்குத் திருக்குறளில் உள்ள பயிற்சி சொல்லாமலே விளங்கும் அல்லவா? எக்காரியத்தைப்பற்றிப் பேச்சு நிகழ்ந்தாலும் திருவள்ளுவரிலிருந்து மேற்கோள் கொடுப்பார். மூச்சுக்கு முந்நூறு குறள் ஒப்பிப்பார். சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமாயிருக்குமோ, இருக்காதோ, அதைப்பற்றி அவர் கவலை எடுத்துக் கொள்வதில்லை இதுதான் பரிமேலழகர் கருத்து என்று ஆணித்தரமாய் அறைந்து பேசுவார். யாராவது குறுக்கிட்டு 'தாங்கள் சொல்வது புரியவில்லையே. சிறிது பொருளை விளக்கிக் கூறலாமா?' என்றால் வந்து விடும் கோபம் 'உமக்குச் சொன்னாலும் தெரியாது. தமிழின் அருமையை நீர் என்ன கண்டீர்? கீழ்க்கணக்கின் இலக்கணம் யாங்ஙனம் அறிவீர்? வரன் முறையாகத் தமிழ் மரபுகளை யாரிடமாவது கேட்டிருப்பதுண்டா? வாயை மூடும். வாளாது போம்.' என்று ஓங்கி ஒரு போடு போடுவார். பின்னும், 'இந்தப் புலியிடத்திலா பிதற்றுகிறது?' என்று ஓர் உறுமல் வரும். கேட்டவர் தலை கவிழ்ந்து நடுநடுங்கிப் பின்வாங்க வேண்டியதுதான் கேட்டவரை அதனோடு விட்டுவிடமாட்டார் அவதானியார். அந்த ஊர் முழுவதும் அவருக்கு ஒன்றும் தெரியாது என்றும் பறை சாற்றி விடுவார் உடனே ஊரார் அவதானியார் அறிவை வியந்து பாராட்டுவர் அவரை எதிர்த்தவரை இகழ்ந்து

பழி தூற்றுவர். அவதானியார் தமது பரம பக்தர்களின் குழு ஒன்றனைக் கூட்டித் தமக்குத் ‘ திருக்குறட் புலி ’ என்றொரு பட்டமும் வாங்கிச் சூட்டிக்கொண்டார். அன்று முதல் அவர் தம்மைப் புலி என்றுதான் குறிப்பிடுவது வழக்கம். திருவள்ளுவர் நேரில் வந்தால்கூட அவ்வளவு மரியாதை கிடையாது. திருகுறட் புலிக்கு அவ்வூரில் அவ்வளவு பெருமை.

அவ்வூரிலுள்ள ஓர் இளைஞனுக்குத் திருக்குறளைப் பரிமேலழகர் உரையுடன் பழுதறப் பயில வேண்டும் என்ற ஆசை. அதற்குத் தகுந்த ஆசான் அவதானியார் அன்றி யாருள்ளார்? ஒரு நாள் அவரையணுகிப் பையன் பணிந்து வேண்டினான். அக்கலைவாணர் சினந்த முகத்துடன், ‘நீயாவது, குறளாவது, படிப்பதாவது? நான் திருக்குறளைப் படிக்க என்ன பாடுபட்டேன்! எத்தனை பேரை அடைந்து, அவர்கள் கால்வருடி, அவர்கள் காலால் இட்ட பணியைத் தலையால் செய்தேன்! ஆம், ‘உடையார் முன் இல்லார்போல்’ என்று வள்ளுவரும் சொன்னார். ஆனால், நீ என்னடா படிக்கிறது? உனக்குத் தமிழ் வருமா? உன் குடலைக் கிழித்துப் பார்த்தால்கூட ஒரு தமிழ் அட்சரம் அதில் இருக்காது. (படித்ததெல்லாம் வயிற்றுக் குடலில் அடைபடும் என்பது அவதானியார் சித்தாந்தம் போலும்.) நான் அரும்பாடுபட்டு வருந்திக்கற்ற நூலை நீ எளிதில் படித்துக் கொண்டு விடலாம் என்று பார்க்கிறாயா? பின்னால் யோசிக்கலாம் போ’ என்று நாள் கடத்திக்கொண்டே வந்தார்.

பையன் திருக்குறட் புலியிடத்துக் கொண்டுள்ள பணிவையும் மரியாதையையும் காட்டுவற்கு ஒரு சூழ்ச்சி செய்தான். ஒரு நாள் அவர் வரும் வழியில் இருபது முழத்துணி ஒன்றைத் தலையில் வரிந்து கட்டிக் கொண்டு எதிராக வந்தான். அவர் முன் வந்ததும்

அவரைத் தற்செயலாய் அப்பொழுதுதான் கண்டது போல் அவர் காணும்படி தலைக்கட்டினை ஒவ்வொரு பிரியாக அவிழ்த்துத் தன் இடுப்பில் சுற்றிக்கட்டிக் கொண்டு, கீழே புழுதிபடிய வணங்கி யெழுந்து அடக்க ஒடுக்கத்துடன் வாய் புதைத்து நின்றான். இதைக் கண்ட அவதானியாருக்கு உள்ளம் குளிர்ந்து விட்டது. அவருக்குப் பணிவிடை செய்வதற்கும் ஒரு பையன் தேவையாக இருந்தது. ஆதலால் அவதானியார் பேச லுற்றார்: "அடே! நான் முற்காலத்தில் ஞானிகளை யடைந்து அரிதிற் கற்ற கல்வியை உனக்கு உபதேசிக் கத் திருவுளங் கொண்டேன். ஆதலால் நாளை முதல் பரிமேலழகர் உரையுடன் திருக்குறளை விளக்கி வரு வேன். ஆனால் ஒரு நிபந்தனை. நீ குறுக்கு விசாரணைகள் எவையுமின்றி ஐம்பொறி யொடுக்கிக் கேட்டு வர வேண்டும். நீ இடைமறித்துக் கேள்வி கேட்டுவிட் டால், என்னை உன் தோள்களில் தூக்கிச் சுமந்து நான் விரும்பும் இடமெல்லாம் செல்லவேண்டும். குருவைச் சுமந்த பாக்கியமும் உனக்குக் கிடைக்கும். நீ அதற்கு உடன்பட்டால் இந்தப் புலியிடத்தில் கற்றுக்கொள்ள லாம் என்று தம் இணக்கத்தைத் தெரிவித்தார். பைய' னும் "சுவாமி! எப்படியும் பரிமேலழகரின் நுண் பொருளை விளக்கினால் போதும். நான் சம்மதிக்கிறேன்." என்று உடன்பட்டான்.

மறுநாள் பாடம் ஆரம்பமாயிற்று. பையனும் நல்ல நேரம் பார்த்து, குருபாதம் போற்றி முன்னிலையில் அமர்ந்தான். குருவும் கடவுள் வாழ்த்துத் தொடங்கி உபதேசிக்கலுற்றார். முதலதிகாரத்தில் மூன்றாவது குறள்,

"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார்."

என்பது. அதனை விளக்கும் பொழுது குருவானவர் "அடியார்களுடைய இருதய கமலத்திலே விரைந்து

சென்று வீற்றிருக்கும் இறைவனது பாதத்தை அடைந்தவர்கள் இந்நிலவுலகத்திலே நீண்ட காலம் சுகமாய் வாழ்வார்கள்" என்று கூறி முடித்தார். வாய் புதைத்துக் கைகட்டிக் கேட்டுக் கொண்டிருந்த பையன் குருவின் அடியில் விழுந்து வணங்கி எழுந்து நின்று "சுவாமி! நிலமிசை என்பதற்குப் பரிமேலழகர், எல்லா உலகங்களுக்கும் மேலான வீட்டுலகத்திலே என்று அரும்பொருள் கூறியிருக்கவும், தாங்கள் இறைவன் பாதம் பணியும் பக்தர்களை இம் மண்ணுலகத்திலேயே மன்ன வைத்துவிட்டீர்களே என்று ஓர் ஐயம் நிகழ்கிறது" என்று பணிவுடன் தெரிவித்தான். திருக்குறட் புலிக்குக் கண்கள் சிவந்து கால் கை துடித்தன. துர்வாச முனிவரின் சாயை பெற்றார். தமது தவற்றினைத் தாம் உணர்ந்து ஒப்புக்கொள்வது திருக்குறட் புலிக்கு அழகாகுமா? 'உன் போலியருக்கு உபதேசிக்கலாகாதென்று முன்பே விளம்பியுள்ளேன். குருவிடம் குற்றம் காண்பவன் சீடன் ஆகான். என்னை இடைமறித்து அவமதித்துவிட்டாய். இது முதல் நீ என்னைத் தோளில் தூக்கிச் சுமக்கவேண்டும்' என்று முழங்கினார். தன்னை மெச்சுவார் என்று நினைத்து ஏமாந்துபோன பையன், "சுவாமி! சிறியேன் செய்த இச் சிறு குற்றத்தைப் பெரியோராகிய தாங்கள் பொறுத்தருளல் கடனாகும்" என்று விண்ணப்பித்தான். அதற்குக் குருவானவர், 'அட அசடே! குற்றங்களைப் பொருத்த மட்டில், சிறிது பெரிது என்ற பாகுபாடு ஏது? திருவள்ளுவர் கருத்துக்கு முற்றும் முரண்பாடாகக் கூறுகிறாயே. அவர் என்ன சொல்லியிருக்கிறார் தெரியுமா?

"தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்."

என்பது பொய்யா மொழியன்றோ? சிறிய குற்றத்தையும் பெரிதாகக் கொண்டு பாராட்டுவது பெரியோர் கட

ளுகும் என்பது அதன் பொருள். ஆகையால் நமது உடன்படிக்கையின்படி நான் விரும்பும் இடமெல்லாம் நீ என்னைத் தூக்கிச் சுமக்கவேண்டியது தான். திருக் குறள் படித்தால் மட்டும் போதுமா? அதன்படி நடக்க வேண்டாமா?'' என்று சாதித்தார். (பழியை அஞ்சுபவர் கள் அறியாமற் செய்த குற்றம் தினையளவாயினும், பெரியதோர் குற்றம் செய்து விட்டோமே என்று வருந் திப்பின்னும் அதைத் தாம் செய்து விடாதபடி காத்துக் கொள்வர் என்னும் பொருள்பட வந்த குறளைத் திருக் குறட் புலி திரித்துக் கூறினுர்.)

பையன் இன்னும் குறள் கற்கவேண்டும் என்னும் ஆசையால், அவரைத் தூக்கிச் சுமந்தான். தோளேறி ஆரோகணித்து அவதானியார் ஒவ்வொரு பிரபுவையுங் கண்டு பரிசுகள் பெற்றுச் சுற்றி வந்தார். இக்காட்சி யைக் கண்டவர்கள் எல்லாரும் பையன் தமிழ் கற்கும் முறையை வியந்து, "இவ்விதம் உழைத்தாலல்லவா படிப்பு வரும்!'' என்று பாராட்டினுர்கள். ஆனுல் அவ தானியாரோ இடையிடையே உபதேசிக்கும் பொழுது பையனுக்குத் திருக்குறளை வேண்டுமென்றே தப்புந் தவறுமாகச் சொல்லி வைத்தார். அவன் நல்லவிதமாகப் படித்துத் தம்மை மிஞ்சி விடக்கூடாதே என்ற பொருமை எண்ணமே அவரை அவ்வாறு போதிக்கச் செய்தது. குருவைச் சுமப்பது போதாமல் குருவி னுடைய பணப் பெட்டியையும் பையன் கைகடுக்கச் சுமக்க வேண்டி நேர்ந்தது. திருக்குறளை நேரிய முறை யில் கற்றுக்கொடுக்காது அவதானியார் முறையைக் கழிக்கிருர் என்பதைப் பையன் தெரிந்து கொண்டான் இனி இவரிடமிருந்து தப்புவது எப்படி என்ற கவலை வந்து விட்டது. இரவிற் சொல்லிய அரபிக் கதையிற் கூறப்படும் சிந்துபாத் என்னும் மாலுமி முதுகில் ஏறிக்

கொண்ட கிழவனைப் போல் அவதானியாரும் இரக்கம் கொண்டு இறங்கியபாடில்லை.

ஒரு நாள் அவதானியாரை எடுத்துச் செல்லும் பொழுது ஒரு குளத்தின் கரை மீது நடக்க நேர்ந்தது. குளத்தில் ஆழம் அதிகமில்லையானாலும் சதுப்பு நில மானதால் சேறும் குழம்பும் நிறைந்து காணப்பட்டது. பையன் சற்று யோசித்தவாறே தயங்கினான். மறு வினாடியில் திருக்குறட் புலியைக் கழற்றிக் குளத்திற் புகவுய்த்தான். குருவானவர் முட்டுவரை சேற்றில் புதைந்து இடுப்பளவு நீரில் நட்டமாய் நின்றார். அவர் தலைசுழன்றது. கைகளை வீசித் துடித்தார் கால்களை அசைக்கவுங்கூடவில்லை.

'நீ இதுவரை என்னிடம் திருக்குறள் படித்ததன் பயன் இதுதானோ? இது தகவோ?' என்று புலம்பினார் பையன் 'சுவாமி! திருவள்ளுவர் கருத்துப்படி நடப்ப தெனத் தீர்மானித்தே இவ்விதம் செய்தேன்' என்றான். அவதானியார் ஆத்திரம் பொங்கி, 'வள்ளுவர் குளத்தில் எறியும்படியுமா விதித்தார்?' என்று வினவவும், பையன், 'ஆம் சுவாமி! இதோ குறள் இருக்கிறதே:—

'செறுநரைக் காணிற் சுமக்க இறுவரை
காணிற் கிழக்காந் தலை.'

என்ற மணிவாக்கை நினைத்துப் பாருங்கள். 'கிழக் காந்தலை' யென்று, தலைகீழாகச் சுழற்றி யடிக்கும்படி யல்லவோ சொல்லி இருக்கிறார்!' என்று கூறிக் கொண்டே பணப் பெட்டியுடன் புறப்பட்டான் 'அடே! பெட்டியைக் கீழே வைத்துவிட்டுப் போ. பணத்தைப் பறிப்பதும் நல்லதென்றோ வள்ளுவர் சொன்னார்?' என்று கதறினார் போலிப் புலவர். அதற்குப் பையன், 'ஆம் சுவாமி! அதுவும் தான் சொல்லியிருக்கிறார். பணம் சம்பாதிப்பதைப் பொருத்தமட்டில் நல்லது

தீயது என்ற பாகுபாடு ஏது? திருவள்ளுவர் கருத்துக்கு முற்றிலும் முரண்பாடாகக் கூறுகின்றீர்களே. அவர் என்ன சொல்லியிருக்கிறுர் தெரியுமா?

"நல்லவை யெல்லாந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு."

என்பது பொய்யாமொழி யன்றே?' என்று கூறிச் செலவு பெற்றுக்கொண்டான். (அழிக்கும் ஊழ் உற்ற வழி, காலம், இடம், கருவி, தொழில் முதலிய நல்லவா யினும் செல்வம் அழிந்து விடும். ஆக்கும் ஊழ் உற்ற வழி, காலம் முதலியன தீயவாயினும் செல்வம் கூடி வரும் என்ற கருத்துள்ள திருக்குறளைப் பையன் கொள்ளையடிப்பதற்கு ஏற்றதொரு குறளாக மாற்றி விட்டான்.)

---

# தலையாட்டிப் பொம்மை

தஞ்சாவூர்த் தலையாட்டிப் பொம்மையைத் தெரியுமா? ஆம், அதைத் தெரியாதவர்கள் இருக்கமாட்டார்கள். அதற்கு உருட்டுப் பொம்மை என்றும் பெயர். அதற்குள்ள ஆணவம் தான் எம்மாத்திரம் பார்த்தீர்களா? நாம் யார்க்கும் குடியல்லோம் என்று தலை நிமிர்ந்து நிற்கிறது. ஆனால் நிற்பது காலின் மேலல்ல. வயிற்றின் மேலேயே நிற்கிறது. வயிற்றை நிரப்புவது தான் முக்கியம் என்று தன் கைகளால் வயிற்றைத் தடவிக் கொடுப்பது போலவும் காண்கிறது. தலையை அசைக்கவும் செய்யாத இந்தப் பொம்மைக்குத் தலையாட்டிப் பொம்மை என்று எப்படித்தான் பெயர் வந்ததோ தெரியவில்லை. உடம்பும் தலையும் ஒன்றாகச் சேர்ந்தே இந்தப் பொம்மை ஆடுகிறது. ஆகா! சிறிது கூடத் தலையை வணங்கமாட்டேன் என்கிறதே! நீங்கள் எவ்வளவுதான் அதன் தலையை முன்னுக்கோ பின்னுக்கோ தள்ளிச் சாய்க்கப்பார்த்தாலும், அது நிமிர்ந்து நட்டமாய் நிற்குமே ஒழிய, தலையைத் தாழ்த்தாது. வணங்காமுடி மன்னன் மாதிரித் தலையெடுப்பாகவே வீறுப்புக் காட்டி நிற்கும். நாம் எவ்வளவு இனிமையாக அன்புமொழி கூறி, அம்மா அரசே யென்று தட்டிக்கொடுத்து அதன் தலையைக் கீழே கிடத்தினும் அது கிடக்காது. சட்டென்று தலையைத் தூக்கிக் கொள்ளும். நாம் அதன் தலையை உருட்ட உருட்ட, அது திருட்டுப் பார்வை பார்த்து, முரட்டுத் தனமாய் முனைத்தெழுந்து தான் நிற்கும். ஆ! ஒரு நாலணா விலையுள்ள இந்தப் பொம்மைக்கு இவ்வளவு இறுமாப்பு எப்படி வந்தது? தமிழ் நாட்டு மண்ணிலே செய்யப்பட்டதால் இவ்வளவு சுதந்திர உணர்ச்சி இதற்கு ஏற்பட்டதா?

அதை எடுத்துப் பார்த்தால, வயிறு கல் மாதிரிக் கனமாய்க் களிமண் நிறைந்திருக்கிறது. வணங்காத் திறம் படைத்த, வண்ணத் தலைப்பாகை கொண்ட அதன் வட்டத்தலையை அல்லது மொட்டைத் தலையைக் கொட்டிப் பாருங்கள். இது என்ன, டொக்கு டொக்கு என்று சத்தம் கேட்கிறது! ஆம், அதன் தலை காலி. அது வெறும் புழலாயிருக்கிறது. அங்கு ஒன்றும் இல்லை. ஏதாவது பாரம் இருந்தால் அல்லவா தலை வணங்கும்? அதன் மேல் விலாசம் காலியாய் இருப்ப தால் தலை வணங்க முடியவில்லை. வணங்காத் தலை வந்து வாய்த்ததால் அதுபடும் பாட்டையும் பாருங்கள்! ஒரு விளையாட்டுக் கருவியாகிச் சிறு குழந்தைகள் கைப் பட்டு, மோதியும் மொத்துண்டும் தாக்கியும் தள்ளுண் டும், உருட்டியும் புரட்டியும் உதைபட்டும் கடைசியில் ஒன்றுக்கும் உதவாமல் உருக்குலைந்து, உடைத்தெறி யப்படுகிறது.

இந்தத் தலையாட்டிப் பொம்மை ஓர் அரிய உண் மையை நமக்கு எடுத்து விளக்குகிறது. குலை யீன்ற வாழை தானுகத் தலை சாய்கிறது அல்லவா? அதுபோல் அறிவுப் பளு ஏற ஏற மனிதன் தலையும் இறைவனு டைய தாளடியில் தாழ்ந்து நிற்கும். அறிவு சிறிதும் இல்லையாகிப் போய் விட்ட தலை, காற்றுடிப் பலூன் போலத் தாழாது உயர்ந்து நிமிர்ந்து மிதப்பாகவே இருக்கும். இறைவனை வணங்காத தலை தனது தலை போலக் காலியாய்ப் பாழாய் இருக்கும் என்று காட்டு கிறது தலையாட்டிப் பொம்மை. தான் சிறுவர் கைப் பட்டுச் சீரழிந்து சிதறுண்டு சின்னு பின்னமாவது போல், இறைவனை வணங்காத தலையர்களும் விதியின் விளையாட்டுக்கு இலக்காகி வீந்தொழிவது திண்ணம் என்பதையும் நமக்கு ஆடி ஆடிக் காட்டுகிறது இந்த அட்டைப் பொம்மை. இதனை ஒன்றும் அறியாத இளம்

பிள்ளைகள் கையில் விளையாடக் கொடுத்து விடு கிறோம். வயது வந்த பெரியார்களுக்கும் வாய்மை நல் லுரை பகர்ந்து நிற்கும் இந்தப் பொம்மைக்குக் கோயில் எடுத்தோ அல்லது கொலு விருத்தியோ ஏன் வழிபாடு செய்யக்கூடாது?

இறைவன் நமக்குத் தலையைக் கொடுத்திருப்பதின் நோக்கம் என்ன? அதற்கு வாசனை யூட்டி எண்ணெய் காட்டிச் சீவிக் கூட்டிப் பூவினைச் சூட்டி அழகு காண் பதற்கா? இல்லை. இறைவன் நமக்குத் தலையைத் தந்தது அவன் தாளை வணங்குவதற்காக என்கிறது திருவாசகம்:—

‘வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்த வைத்து
இணங்கத்தன் சீரடியார் கூட்டமும் வைத்தெம் பெருமான்
அணங்கொ டணிதில்லை யம்பலத்தே யாடுகின்ற
குணங் கூரப் பாடி நாம் பூவல்லி கொய்யாமோ.’

இக்கருத்துப்பற்றியே வாகீசப் பெருந்தகையும், ‘தன் பொன்னடிகளில் வீழ்ந்து வணங்கவே இறைவன் நமக்குத் தலையைக் கொடுத்தான். அங்ஙனம் தலை யைப் பயன் படுத்தாது தருக்குவோர் தீவினைக்காளாகி நெடுநாள் வருந்துவர்’ என்று இனிது புகன்றார்:—

‘வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே.’

வாகீசருக்கு மிகவும் நீண்ட காலத்தே தோன்றி நமக்குத் திருக்குறளை அருளிச் செய்த திருவள்ளுவ தேவரும், நாம் தலைபெற்றதன் பயன் என்ன என்பதை மிக அழகாக ஒரு குறளிற் பொறித்திருக்கிறார்:—

“கோளில் பொறியிற் குணமிலவே எண் குணத்தான்
தாளை வணங்காத் தலை.”

எவ்வாறு ஐம்பொறிகளுக்கும் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிதல் இன்றியமையாததோ, அவ் வாறே, எண் சாண் உடம்பிற்கும் பிரதானமாகிய சிர சிற்கும், இறைவன் தாளை வணங்குதலே வேண்டுவது. "காணாத கண் முதலியன போல வணங்காத தலைகள் பயனில எனத் தலைமேல் வைத்துக் கூறினார்; கூறினா ரேனும், இனம்பற்றி வாழ்த்தாத நாக்களும் அவ்வாறே பயனில வென்பதூஉங் கொள்க" என்று பரிமேலழகர் விசேடவுரையில் கூறினார். நாக்களும் கொள்ளப்படு மேல், உடம்பிலுள்ள ஏனை அங்கங்களையுமே கொள்ள லாம் என்பது தேற்றமாகும். அங்ஙனமாயின், ஆண் டவரசுகள் அன்பாயமைத்த திருவங்கமாலை முழுவதும் இக்குறளடியின் ஆழ்ந்த கருத்தாக அமையப் பெற்றி ருக்கிறது என்று கொள்வதில் ஒன்றும் இழுக்கில்லை. வந்தனை செய்யத் தலையை அமைப்பது எளிதான காரி யம் இல்லை எனக்கருதியே, "தலையே! நீ வணங்காய்" என்று தாழ்ந்து வேண்டுகின்றார் அப்பர் அடிகள்.

காணாக் கண்ணும் கேளாச் செவியும் போல், வணங்காத் தலையும் பயன்தராது. சுவையை நுகர இயலாத நாக்கு என்ன நாக்கு? புண்ணுக்குத்தான். "சிற்கை நா, கலப்பை நா, இவையுமுண்டாதலின்" என்பர் அடியார்க்கு நல்லார். இறைவன் அழகைக் காணாத கண் என்ன கண்? மரக்கண், இடுக்கண், புன்கண். அவ்வாறே தலைவன் தாளடியில் தாழாத தலை என்ன தலை? தறுதலை. குணமிலவே வணங்காத் தலை என்றதன் உட்கருத்து ஊகித்தறிந்து இன்புறற் பாலது. தலையிலிருப்பது என்ன? அதுதான் மூளை. இங்கே நாம் அறிவு என்று கொள்ளலாம். குணமிலவே வணங்காத்தலை என்பதற்கு, வணங்காத தலைகளில் அறிவு இல்லை என்றே பொருள்.

"கற்றதனு லாய பயனென் கொல் வாலறிவன்
நற்ருள் தொழாஅர் எனின்."

என்னும் அருமைத் திருவாக்கிற்கு ஏற்ப, தலைவன் தாளைத் தலை இறைஞ்சினுல், அச்செயல் தலையில் நல்லறிவு இருத்தலைப் புலப்படுத்தும். அவ்விதம் வணங்காத தலையில் அறியாமையே குடிகொண்டிருக்கும். உயிர்க்குயிராய் நின்று அறிவிக்கிற பேரறிவை உணர்ந்து வணங்காத சிற்றறிவும் வெற்றறிவே யன்றே?

"மார்க்க மொன்றறி யார்மதி யில்லிகள்,
பூக்க ரத்திற் புரிகிலர் மூடர்கள்,
பார்க்க நின்று பரவும் பழனத்தான்
தாட்க ணின்று தலைவணங் கார்களே." (அப்பர்)

வழக்கிலுங்கூட, அறியாப் பேதை ஒருவனை, 'உன் மண்டையில் என்னடா இருக்கிறது? களிமண்ணு?" என்று கேட்கிருர்கள். வணங்காத தலையில் களிமண் கூட இல்லாது காலியாய் இருக்கும் என்று காட்டுகிறது தலையாட்டிப் பொம்மை. இந்தப் பொம்மையை நோக்கியே மணக்குடவர் " கோளில் பொறியில்" என்ற குறளுக்கு, "அறிவில்லாத பொறிகளையுடைய பாவைகள் போல ஒரு குணமும் உடையனவல்ல எட்டுக்குணத்தினையுடையவன் திருவடியினை வணங்காத தலையினை யுடைய உடம்புகள் என்றவாறு" என்று பொருள் கண்டார்போலும்.

தலையாட்டிப் பொம்மையே! வணங்காத் தலையர்க்கும் வணங்கி வழிபட வழிகாட்டு இம்மையே!

---

# சிரித்த முகம்

"and as some men gaze with admiration at the colours of a tulip, or the wings of a butterfly, so I was by nature an admirer of happy faces" "சிலர் மலர் இதழ்களின் வண்ணம் கண்டு அல்லது பட்டுப்பூச்சிச் சிறகின் நிறம் கண்டு வியப்புக்கொள்வர்: நான் இயல் பாகவே மலர்ந்த முகங்களைக்கண்டு மகிழ்ச்சி கொள்வேன்" என்கிறார் ஆங்கிலக் கவிஞர் கோல்டுசுமித். சிரித்த முகங்களை உலகிடை எங்கணும் காண ஆசைப் படுகிறார் நம் திருவள்ளுவர். அவருடைய நூலிடை யாங்கணும் இந்த ஆசையின் துடிப்பை நாம் காணலாம்.

'தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.'

என்பது பொய்யாமொழியன்றோ? நாம் எப்பொழுதும் சிரித்த முகத்துடன் இருக்கவேண்டும் பிறரிடையும் சிரித்த முகத்தைக் காண்பதுதான் நாம் அடையும் உண்மையான இன்பம். அதற்கு நாம் சிரித்த முகத்த ராய் எப்பொழுதும் விளங்கப் பழகவேண்டும் என்பது வள்ளுவரின் சித்தாந்தம்.

இன்பத்தின் புறத்தோற்றம் சிரிப்பு அல்லது நகை. துன்பத்தின் புறத்தோற்றம் அழுகை அல்லது அவலம். சிரித்த முகத்தைக் கண்டவுடன் நமக்கு ஒரு மகிழ்ச்சி பிறக்கிறது. அழுத முகத்தைக்கண்டு நாம் அஞ்சு கிறோம், அலறுகிறோம், அருவருக்கிறோம், அழுகிறோம் ஒவ்வொருவரும் இவ்வுலகில் வேண்டுவது இன்பம் அதன் அறிகுறி நகைமுகம். ஒருவனுக்கு இவ்வுலகில் என்ன இருந்துதான் ஆவதென்ன? நிறைந்த செல்வம்

இருக்கலாம். சுவை மிகுந்த உணவுகள் இருக்கலாம். பெண்டு பிள்ளைகள் வீடு நிறைந்திருக்கலாம். ஆயினும் அவன் முகமலர்ச்சியின்றி அகமகிழ்ச்சியின்றி வாழ்வானாயின் மற்றவைகளால் யாதொரு பயனும் இல்லை மனிதனாய்ப் பிறந்தவன் மனிதனாய் வாழ வேண்டுமானால், அவன் மனதிலே ஓர் உற்சாகம் அல்லது குதூகலம் அல்லது களிப்பு வேண்டும். முகத்திலே நகை தவழ்ந்து தழைக்க வேண்டும். சிலர் சிரிப்பு என்பதே இல்லாது கடிந்த முகத்துடன் வாழ்வர் பிறரோடு சந்தோஷமாய்ப் பழகிப்பேசி இனிய முகத்துடன் வாழாதவர் ஆந்தை, கூகை, கோட்டான் மாதிரியே வாழ்பவராவர். அவர்கள் வாழ்க்கை ஒரு பெரும் இருட்டடிப்பாகவே இருக்கும். பகலும் இரவும் அவர்களுக்கு ஒன்றுதான். அவர்கள் அகத்தும் புறத்தும் இருளே தான் குடிகொண்டிருக்கும். இதைத் திருவள்ளுவர் பின்வருமாறு கூறுகிறார் :—

'நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும் பாற்பட்டன் றிருள்.'

உலகியல் நன்கு தெரிந்தோர் எல்லாரோடும் கலந்து உண்மகிழ்தல் வல்லராவார். அங்ஙனம் மாட்டாதவர்க்கு உலகமே பாழ்பட்டு பகல் என்றும் இரவு என்றும் பாகுபாடற்று ஒரே இருளாய்க் கிடக்கும் என்பது இதன் கருத்து.

உள்ளத்தில் எழுவது உவகை. அதன் அறிகுறியாக முகத்தில் தோன்றுவது நகை இவை இரண்டும் ஒருவனுக்கு இல்லாதுபோனால், அவன் வாழ்க்கை பாழ்பட்டுவிடும். உள்ளத்தில் ஊக்கம் இல்லாதவனுக்கு உவகையும் நகையும் எங்கிருந்துவரும்? அவன் மனித உருவத்திலே ஒரு பாலைவனத்தில் நிற்கும் மரம் போன்றவனேயாவான். மனிதனாகமாட்டான் மரம்

போன்றவன் என்பானேன்? மரம் என்றே திட்டுகிருர் திருவள்ளுவர் :—

'உரமொருவற் குள்ள வெறுக்கைய ஃதில்லார்
மரமக்க ளாதலே வேறு.'

உள்ளக் கொந்தளிப்பு இல்லாத அறிவிலி மரக் கட்டையைவிடவும் கேடு கெட்டவனும். அவன் உண்மையிலேயே ஒரு மரமாய் இருந்திருந்தால் அம் மரத்தில் பழங்களாவது பழுக்கும் அல்லது அதை அறுத்து நன் மரக்கட்டைகளாக்கிக் கோயில், வீடு, தேர், கப்பல் முதலியன கட்டுவதற்குப் பயன் படுத்தலாம். அல்லது கீறி விறகாக எரிக்கலாம். ஆனால் இத்தகையவன் மர வடிவிலே வாராது மனித வடிவிலே வந்து தொலேத்தான் என்று நாயனுர் குத்திக்காட்டி யுள்ளார்.

வெள்ளே மனத்தனுய் சிரித்த முகத்துடன் தெள்ளிய வாழ்க்கையை வாழ்வதற்குக் கள்ளங்கபட மற்ற உள்ளமும் தெள்ளிய அறிவும் வேண்டும். பொய்யும் புலேயும் கோபமும் தாபமும் பொருமையும் சூதும் குடிகொண்ட உள்ளத்தில் உவகை என்பதே உதயமாகாது. உவகையில்லாதுபோனுல் முகத்தில் நகையும் பிறக்காது. ஒருவன் சினம் கொள்ளலாகாது என்று சொல்வது அவன் நலத்தைக் கருதியேதான். கோபம் பொங்கி எழும் உள்ளத்தில் மகிழ்ச்சியாகிய உவகை விளக்கு அணேந்துவிடும். விளக்கணேந்த வீட்டில் ஒளி மாறிப்போவதுபோல், முகத்திலும் நகையொளி மாறி இருண்டுவிடும். ஒருவனுக்குக் கோபம் உள்ளத்தில் தோன்றியவுடனே அது அவனு டைய மன மகிழ்ச்சியையும் முகமலர்ச்சியையும் கொலே செய்துவிடுகிறது. இவ்விதம் மகிழ்ச்சியும் மலர்ச்சியும் கோபத்தால் மாறுவதற்கு உடலில் ஏற்படுகிற இரத்தக் கொதிப்புதான் காரணம். நமக்கு நலம் செய்யவல்ல

சத்துப்பொருள்களையெல்லாம் அழித்து அந்த அழிவின் குப்பையிலே ஊறுவதுதான் சினம். நமக்கு இத்தனை கெடுதலையும் செய்துவிட்ட பிறகுதான், அது வெளியே சீறி எழுகிறது. அதனுல்தான் சினத்திற்குச் சேர்ந்தாரைக் கொல்லி என்று நாயனுர் பெயர் கொடுத்தார். இத்தகைய சினம் இவ்வாறு நம்மைக் கெடுத்த பிறகு தான் வெளியிலும் கிளம்பி நமக்கு வேண்டியவர்களையும் வேண்டாதார் ஆக்கி மற்றவர்களையும் கெடுத்துவிடுகிறது.

'சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும்.'

என்ற திருக்குறளைக் காண்க.

ஒரு தாயானவள் தன் குழந்தைக்குப் பால் கொடுத்துக்கொண்டே அடுத்த வீட்டுக்காரியுடன் கோபமாய்ச் சண்டை போட்டுக்கொண்டிருந்தாள். சண்டை வளர்ந்து வலுத்துக்கொண்டே வந்தது. அவள் சீற்றமும் பெருகியது. கண்கள் சிவந்தன. உதடு துடித்தது. கால் கை ஆடின. உடம்பு வியர்த்தது. வயிற்றில் எரிமலை தீயாய்க் காய்ந்தது. இரத்தம் கொதித்தது. அவள் தாய்ப்பாலும் நஞ்சாகமாறியது. அதனைப் பருகிய குழந்தையின் கதியைப் பின் சொல்லவா வேண்டும்? குழந்தை இறந்து விட்டது. ஆனுல் சண்டை தொடர்ந்து நடந்து கொண்டேயிருந்தது. ஆகா! பாழுங்கோபத்தால் விளைந்த பெருங் கேட்டினைப் பாருங்கள் ! நம்முடைய கோபம் பிறரைக் கெடுக்குமோ கெடுக்காதோ, அது எப்படியும் போகட்டும். ஆனுல் அது நம்மைக் கெடுத்து விடுவது திண்ணம். கோபம் மனிதனுக்கு உண்டாகத்தான் செய்யும். அதனைத் தடுத்து நிறுத்துவது தான் அறிவாளியின் செயல். நம்மையும் பிறரையும் கெடுக்கும் கோபத்தை நம்முடைய நலம் கருதியேனும் தடுக்க வேண்டும். கோபம்

நம்மை எவ்வாறு கெடுக்கிறது என்பதைப் பார்த்தோம். அது நம்முடைய மன மகிழ்ச்சியையும் முக மலர்ச்சியை யும் முதலில் கெடுத்து விடுகிறதே. இதைவிடக் கெடுதல் வேறு என்ன இருக்கிறது? ஒருவன் மற்ற சொத்து சுகத்தை யெல்லாம் இழந்து விட்டாலும் மன மகிழ்ச்சியையும் முக மலர்ச்சியையும் இழந்துவிடக் கூடாது. இவ்விரண்டும் இவ்வுலக வாழ்க்கையில் ஒருவன் அடையவேண்டுவன. இவற்றைப் பெறுவ தற்குக் காசு பணம் தேவையில்லை. மாசற்ற அறிவும், ஆழ்ந்த சிந்தனையும், உயர்வுள்ளமும், தன் உயர்நிலை யுணர்ச்சியும் மட்டுமே தேவை. மகிழ்ச்சி,மலர்ச்சி, என்ற இரண்டின் இன்றியமையாச் சிறப்பினையும்,அவற்றைக் கோபம் அழித்துவிடும் கொடுமையையும் திருவள்ளுவர் நன்கு விளக்கியுள்ளார் :

> 'நகையும் உவகையும் கொல்லும் சினத்திற்
> பகையும் உளவோ பிற.'

மனிதப் பிறவியின் நோக்கம் என்ன? ஒருவன் எதற்காக இவ்வுலகில் வந்து பிறக்கிறான்? ஓர் உயிர் மனிதவுடம்புடன் இவ்வுலகில் தோன்றுவதன் காரணம் என்ன? இதைப்பற்றி நம்மில் பெரும்பாலோர் சிந்திப் பதேயில்லை. இக்கேள்விக்குத் திருவள்ளுவரைத்தவிர வேறு யாரும் சரியான நேரான விடை கூறியதும் கிடையாது. திருவள்ளுவர் என்ன சொல்கிறார்?

> 'அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
> என்போ டியைந்த தொடர்பு.'

என்பது திருக்குறள். அன்பு என்னும் அரிய பொருளை அடைவதற்கே உயிரானது வந்து பிறக்கிறது. அன் பைக் கொடுத்துத்தான் அன்பைப் பெற முடியும், அன்பைப் பெருக்க முடியும். அன்பே உயிருக்கு இன்பம் தருகிறது, இதத்தைச் செய்கிறது. அன்புக்கு மாறான பகையே துன்பத்தைத் தருகிறது, நோயைச் செய்கிறது. உலகம் என்னும் சந்தைக் கடையிலே

அன்பு என்னும் சரக்கைக் கொள்முதல் செய்யவே உயி ரானது மண்மேல் உடலோடு இயங்குகிறது. நம்மிடம் உள்ளதைப் பிறருக்குக் கொடுப்பதன் மூலம் அன்பை வளர்க்கலாம், இன்பைப் பெருக்கலாம். பிறரிடம் உள் ளதை நாம் எடுத்தாலும், எடுக்கமுயன்ருலும், எடுக்க நினைத்தாலும் பகை பாவம் பழிகள் நம்மை வந்து பற்றுகின்றன, துன்பம் தொடர்கின்றது. தவருகப் பலரும் எடுப்பதை இன்பம் என்றும் கொடுப்பதைத் துன்பம் என்றும் கொள்ளுகின்றனர். இது அறியாமை. நல்ல பழக்கம், பயிற்சி, சிந்தனை, நுகர்ச்சி முதலிய இல் லாமையே இதற்குக் காரணம். நம்மிடம் உள்ளதைப் பிறர்க்குக் கொடுத்து அதன் மூலம் அவர்கள் முகம் மலர்வதைக் காண்பதிலேயே நாம் உண்மையான தூய இன்பம் அடையலாம். இதனை நாயனுர் நவில்வது நன்னயம் வாய்ந்தது.

'ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.'

இவ்வருமைத் திருக்குறளில் திருவள்ளுவர் இன்பச் சுரங்கம் இருக்கும் சரக்கறையையே நமக்குத் திறந்து காட்டுகிருர் எனலாம். என்றும் கொடுத்துக் கொண்டே யிரு, எடுப்பதை மறந்துவிடு என்பதை,

'நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று.'

என்கிருர் திருவள்ளுவர். மேலுலக வாழ்க்கைக்கு மட் டும் என்பதல்ல, இவ்வுலக வாழ்க்கைக்கும் கொடுத்தலி லேயே இன்பம் உண்டு. எடுத்தலினுல்தான் துன்பம் வருகிறது என்பதை எவ்வளவு அழகாகக் கூறியிருக் கிருர், காணுங்கள்! பொருளைப்பயன்படுத்தி நமது வாழ்க்கையின் குறிக்கோளாகிய இன்ப அன் பினை அடையாது, துன்பத்தை வளர்த்துப் பொருளையும் இழக்கும் இழிதகவோரை வன்கணவர் என்று நாயனுர்

நொந்து கூறியுள்ளார். ஆகவே பொருளை வைத்துக் கொண்டிருப்போர் பிறருடன் நகை முகம் கொண்டு உறவாடி, உரையாடி, உணவாடிக் குலவி மகிழ்ந்து கூடி வாழ்தல் வேண்டும். சுடுசுடுத்த முகமும் கடு கடுத்த வார்த்தையும் உடைய செல்வர்கள் மனிதர்கள் ஆகார். அவர்களைப் பேய்களின் இனத்தோடு சேர்க் கிறார் திருவள்ளுவர்:

'அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து.'

திறந்த கதவும் மலர்ந்த முகமும் இல்லாதவனுடைய செல்வம் பேயால் காக்கப்பட்ட புதையலை ஒக்கும். பேய் தானும் தின்னாது, பிறர்க்கும் கொடுக்காது: சிரித்துப் பழகாத செல்வனும் அப்படித்தான்.

ஆனந்தம் தாண்டவம் ஆடும் முகத்தைக் காணப் பூரிப்படைந்தவர் திருவள்ளுவர். பொன்னகை பல பூண்டு தான் என் செய்ய? புன்னகை தவழ்ந்து விளை யாடாத முகம் பொலிவிழந்து புற்கென்றிருக்கும். நாம் முகம் திரிந்து நோக்கினால் வந்த விருந்தும் திரும்பி விடும். சிரித்த முகத்தைக் காணும் ஆசையால், இரந் தவர் இன்முகம் காணும் அளவும் ஈதல் நன்று என்று விதித்தார் திருவள்ளுவர். சிரித்த முகத்தால் நாம் இடையறா இன்பம் எய்தலாம். எதையும் இவ்வுலகில் சாதிக்கலாம் பகைவரையும் நட்பினராக மாற்றலாம். கொலை செய்ய வரும் கொடியவனும் சிரித்த முகம் கண்டு மனம் மாறுவான். எத்தகைய துன்பம் வந்தாலும் நாம் நகை முகத்துடன் உள்ளம் தளராது இருந்தால், துன்பம் இன்பமாக மாறி விடும். திரிபுரங் களைச் சிவபெருமான் சிரித்து எரித்ததுபோல், நாமும் துன்பப் பகையைச் சிரித்து விரட்டலாம்.

'இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்.

என்ருர் திருவள்ளுவர். திருத்தக்க தேவர் இதனை விரித்துக் கூறினுர்:

'இடுக்கண்வந் துற்றகாலை யெரிகின்ற விளக்குப்போல
நடுக்கமொன் றுனு'மின்றி நகுகதா நக்க போழ்தவ்
இடுக்கணை யரியும் எஃகாம் இருந்தழு தியாவருய்ந்தார்
வடுப்படுத் தென்னையாண்மை வருபவந் துறுங்களன்றே.'

சிரித்த முகம் மனிதத் தன்மையைக் காட்டுகிறது, ஆண்மையை நிலை நாட்டுகிறது, அன்பைப் பூட்டுகிறது, துயரை ஓட்டுகிறது, பகையை வாட்டுகிறது, உறவைக் கூட்டுகிறது, இன்பம் ஊட்டுகிறது. சிரித்த முகங்களைச் சுற்றிலும் காண நாம் சிரித்த முகத்துடன் உழைப்போமாக.

உயர்ந்த குடும்பத்திலே பிறந்தோரை அறிவதற்குச் சில அடையாளங்கள் உள. அவற்றை நான்கு என்று கூறுவர் திருவள்ளுவர். அவையாவன, யாவர் மாட்டும் சிரித்த முகத்துடன் விளங்குதலும், வறியோர்க்கு இல்லை என்ருது கொடுத்தலும், யாவரிடத்தும் முகம் மாருது இனிதாகப் பேசுதலும், யாவரையும் வெறுத்து இகழாது அன்புகொண்டு ஒழுகுதலும், என்பனவாம் :—

"நகைஈகை யின்சொல் இகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு."

மகிழ்ச்சி மருவிய முகமும், புகழ்ச்சி புகலும் கொடையும், குளிர்ச்சி குலுங்கும் சொல்லும், இகழ்ச்சி இல்லாப் பண்பும் உயர் குடிப்பிறப்பின் சின்னங்கள். இவை நான்கினுள், சிரித்த முகத்தின் இன்றியமையாமை நோக்கி அதனை முதற்கண் கூறினுர். முகமலர்ச்சி இல்லா ஒருவனுக்கு உயர்ச்சி இல்லை. அவனை மிகவும் இழிவாகவே எல்லோரும் கருதுவர். நகையிழந்த முகத்தவனை எவரும் நெருங்க அஞ்சுவர். பின், யார்தாம் அவனிடம் சென்று ஒன்று வேண்ட முற்படுவர்? ஒருவரும் அவனை அணுகார். ஆகவே ஈகைக்கு

முன் நகையை வைத்தார். சிரித்த முகமே ஒருவரைத் தன்னிடம் செலுத்துவதற்கு முதல் வாயிலாக இருக்கிறது. இந்த முதல் வாயிலே அடைபட்டுப் போகுமானுல், யாரும் நுழைந்து வருவதற்கு வழியற்றுப் போய்விடும் அல்லவா? நகை யிழந்தவன் எல்லாராலும் கைவிடப்பட்டு ஒதுக்கப்படுவான். தான் நல்ல பண்புடையவன் என்றும், தன்னை யாவரும் நம்பி நெருங்கிவந்து பழகி உறவாடி அன்புகொள்ளலாம் என்றும் உலகிற்கு எடுத்துக்காட்டுவதற்கு ஓர் உறுதி முத்திரையாக விளங்குவது சிரித்தமுகம். முகமலர்ச்சி உடையவனிடத்திலே யாரும் நம்பிக்கையோடு துணிந்து பழகி அன்பு கொள்வர். யாவர் மனத்தையும் கவரும் ஒரு வசீகரக் காந்தமாக விளங்குவது சிரித்த முகம். பிறர் வேண்டும் பொருளை வழங்கவல்ல ஆற்றலைத் தன்னிடத்தே எடுத்துக் காட்டுவது சிரிப்பு. அதற்காக யாவரையும் தன்னிடத்தே விரும்பி வரவேற்க இன்சொற்களை உதவி நிற்பது சிரிப்பு. ஆனுல் அந்தச் சிரிப்பிலே இகழ்ச்சி இருத்தல் கூடாது. இகழ்ச்சி கலந்த சிரிப்பு மிகப் பொல்லாதது. சுயோதனனை இகழ்ந்து சிரித்த குற்றத்திற்காகப் பாஞ்சாலி பட்டபாட்டைப் பார் அறியப் பகர்கின்றது பாரதக் கதை. எனவே நகையானது ஈகை உடையதாய், இகழாமையற்றதாய் இருக்கவேண்டும் என முறைப் படுத்தி, அழகாகத் திருவள்ளுவர் மேலைக் குறளிற் காட்டியுள்ளார். தன்னை நாடி வந்தோரிடத்தில் இகழ்ச்சி கொள்ளாது முகமலர்ச்சியோடு இனிதாகப்பேசி அவர்கள் வேண்டுவது யாதென அறிந்து அதனை வழங்குபவன் எவனே அவனே உயர்குடிப் பிறந்தவன் ஆவான்.

ஒருவன் யாவருக்கும் இல்லை யென்னுது கொடுப்பவனுய் இருக்கலாம். ஆனுல் அவன் முகமலர்ச்சியற்றவனுய் இருந்தால் அவனை யாரும் நெருங்கமாட்டார்கள்.

அதனுல் அவன் வண்மைக்குணம் வறிதாகி விடும். அதுபோலவே யாவரையும் இகழ்ந்து பேசுபவனும் விரும்பப்படமாட்டான். இகழ்ச்சிப் பேச்சு புகழ்ச்சி தராமையால் கீழான குடியினதாகி விடும்.

ஒருவன் நல்ல மனதுடையவனுய் இருக்கலாம். ஆனுல் அவன் சிரித்த முகம் இல்லாதவனுய்க் கடு கடுத்த முகத்துடன் ஒரு பொருளைக் கொடுப்பதாய் இருந்தால், அதனுல் யாது பயனும் இல்லை. ஒருவன் முகக் குறிப்பைக் கொண்டுதான் உலகம் அவனது உள்ளத்தின் மேன்மையை உற்றறிவதாயிருக்கிறது. அதனுல் முக மலர்ச்சியும் அக மலர்ச்சியும் ஒருவனுக்கு ஒருங்கே நிகழ வேண்டும். அதிலும் அக மலர்ச்சியை விட முக மலர்ச்சிதான் மிகவும் முக்கியம். அதனுல் மனம் உவந்து ஒன்றைக் கொடுப்பதைவிட, முக மலர்ந்து இனிதாகப் பேசுதல் மிகவும் நல்லது என்றூர் திருவள்ளுவர்:—

''அகனமர்ந் தீதலின் நன்றே முக னமர்ந்(து)
இன்சொலன் ஆகப் பெறின்.''

கொடுப்பதற்கு மட்டும் தான் முகமலர்ச்சி தேவை என்பதில்லை. கொள்வதற்கும் முக மலர்ச்சி வேண்டும். துன்பமே சூழ்ந்திருக்கிற இவ்வுலகிலே இன்பம் காண் பவன் எவனே அவனே வாழ்க்கையில் வெற்றி பெற்றவனுவான்.

''இன்ன தம்ம இவ்வுலகம்,
இனிய காண்கதன் இயல் புணர்ந்தோரே!''

என்ற வாக்கையும் நோக்குக.

இவ்வுலகம் பொல்லாதது என்று உலகத்தை வெறுப்பவன் வாழ்ந்தவனுகமாட்டான். அத்தகை யவனை ஆங்கிலத்தில் Cynic, Misanthrope, Pessimist என்றெல்லாம் கூறுவர். அவன் மனித இனத்தையே

குற்றம் கூறி வெறுத்து ஒதுக்குபவன். இத்தகைய வெறுப்பு ஒருவனுக்கு ஏற்படுமானுல், அவன் முகத்தில் மலர்ச்சி ஒரு நாளும் பூவாது. அவன் முகம் பாழ்பட்டு விடும். அவன் வாழ்க்கையில் தோல்வியுற்றுத் தொலைந்தவனேயாவான். இந்த வெறுப்பு ஒருவன் உள்ளத்திலே ஊறி விடுமானுல், அவன் உலகக் கட்டுப் பாடுகளை உதறித் தள்ளுவான். பழி பாவங்களுக்கு அஞ்சமாட்டான். நாணமாட்டான். முரட்டுத்தனம் அவனிடம் முதிர்ந்து விடும். நல்லது கெட்டது என்று பார்க்கமாட்டான். தன் கடமையை உணர்ந்து செய்ய மாட்டான். செய்ய வேண்டுவனவற்றைச் செய்யமாட் டான். செய்யக்கூடாதனவற்றைத் துணிந்து செய் வான். அவன் உள்ளம் அன்பு சுரக்காது அறவே அற்று வற்றிப் போகும். யாவரிடத்திலும் முறிந்த சொற்செயல் உடையவனுவான். யாரையும் எடுத் தெறிந்து பேசுவான். சமூகத்திற்கப்பால் தன்னைத் தானே புறக்கணித்துக் கொள்வான். மனித இனத் தோடு பகை கொண்டு விடுவான். தன் குடியின் உயர்வு, பெருமை, கல்வி, ஒழுக்கம் முதலியனவாகத் தான் பேண வேண்டுவனவற்றைப் பேணமாட்டான். இவ்வாறு மனிதச்செயல்களெல்லாம் அவனிடம் பேய்ச் செயல்களாக மாறிவிடும். ஆகவே, அவன் நல்லறி வினை இழந்தவனேயாவான் அன்ருே? உலகில் இன்ப வாழ்வு வாழ்ந்து மகிழ்வதற்கு ஏதுவாகிய பழி பாவங் களை நாணி அஞ்சி ஒதுங்குதலும், யாவரையும் விழைந்து நாடிப் பழகித் தன் கடமையை ஆற்றுவதில் முறை கடவாதிருத்தலும் யாவரிடமும் அன்பு பூண்டு ஒழுகுதலும், தன்மானம், குடிப்பிறப்பு நிலைமைகளைப் பேணிக் கொள்ளுதலும் ஆகிய இவற்றைச் செய்யாது, உலகோடு பகைகொண்டு மிகைத் தெழுபவனைப் பேதை என்று இரங்குகிருர் திருவள்ளுவர்:—

"நாணுமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணுமை பேதை தொழில்."

புதிதாக ஓர் ஊருக்கு வந்தவன் அந்த ஊர் நல்ல ஊர் தானு என்று அக்கம்பக்கத்தில் விசாரித்தான். "உன் வாயும் கையும் நல்லனவாய் இருந்தால் அந்த ஊரும் நல்ல ஊர் தான்" என்ற பதில் வந்தது. இது எவ்வளவு உண்மை பாருங்கள்! இது போலவேதான் உலகமும். நாம் சிரித்துப் பழகி, இனிதாகப் பேசி, இனியவற்றையே செய்து வந்தால் உலகமும் இன்ப மயமாகவே இருக்கும். நமது சொல்லும் செயலும் தீயனவாயிருந்தால் உலகமும் துன்பச் சுழலாக மாறி நம்மைச் சுட்டு வருத்தி விடும். ஆகவே உலகைத் துன்ப மயமாக ஒருவன் காண்பானுயின், குற்றம் அவனுடையதேயன்றி உலகத்தினுடையதன்று. இதை நன்கு உணர்ந்தவர்கள் உலகத்தைக் குறை கூறமாட்டார்கள். தம்மையே தாம் திருத்திக்கொள்வார்கள். இதைத்தான் திருவள்ளுவரும்:—

"புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவ தெவன்."

என்று கூறினுர்.

இன்பமும் துன்பமும் நம் எண்ணங்கள் செயல்களோடு இயைந்தவைகள். மனம்கொண்டது மாளிகை. நமது உள்ளத்தின் நிலைகளே நரகமும் துறக்கமும். செம்மை மனமுற்ருர்க்கு நரகமும் துறக்கமாகும். வெம்மை மனமுற்ருர்க்குத் துறக்கமும் நரகமேயாம். திருநாவுக்கரசு நாயஞர் தம் தூய செயல்களாலும் செம்மை உள்ளத்தாலும் நீற்றறையையும் நீள்விசும்பாக்கி, மண்டிய நெருப்பையும் தண்டளிர் சோலையாக்கி ஆங்கு இன்பம் திளைக்க வீற்றிருந்த செய்தி யாவரே அறியாதார்? "The mind is its own place: it can make a Hell of Heaven and a Heaven of Hell" என்று ஆங்கிலத்திலும் சொல்வர்.

எல்லாரோடும் அன்புடனே உறவாடி, சிரித்து மகிழ்ந்து கூடிக்கலந்து பழகிப் பிறரைப் பெருமைப் படுத்தித் தானும் பெருமையடைந்து உதவியாளனுய் வாழும் இன்பமே இவ்வுலகிற் பிறந்ததனுல் ஒருவன் எய்தும் பயன். ஒவ்வொருவரும் இதை நன்கு சிந்தித்துப் பார்த்தால் இதன் உண்மை புலனுகும். பிறருடைய நன் மதிப்பையும் அன்பையும் நாம் தட்டின்றிப் பெற்ருலே நமக்கு உலக வாழ்வு இன்பம் தரும். நம் மனதுக்கு நிம்மதி உண்டாகும். பிறருடைய பகையையும் வெறுப்பையும் நாம் பெறவேண்டியிருந்தால் நம் சூழல்கள் யாவும் துக்கம் விளைக்கும் துயரக்குகைகளாக மாறி நமது மன அமைதியைக் குலைத்து வாழ்க்கையைப் பாழாக்கிவிடும். அதற்கு நாம் பிறருடைய வெறுப்பை ஒதுக்கி அன்பைப் பெறும் விதத்திலே நமது வாழ்க்கையைத் திருத்திச் செப்பனிட வேண்டும். அதற்கு முதன்மையாக வேண்டப்படுவது நகைமுகம். பிறரை வெறுப்பதாலும், பகைகொள்வதாலும், மறந்தும் பிறன்கேடு சூழ்வதாலும், அன்பையும் அறனையும் மறந்தும் துறந்தும் எல்லைபிறந்துபோய்க் கொள்ளையடிக்க முயன்று வெறுப்பையும் எதிர்ப்பையும் தேடிக்கொள்வதாலும், நகைமுகமின்றிப் பகைமுகம் காட்டித் தகைவகையின்றி மிகைபல புரிவதாலும், இன்பக் கோட்டையை அடையாமல் துன்பக் காட்டிலே தொலைந்து வீழ்வார் பலராவர். எல்லோராலும் விரும்பப் பட்டு நல்லவன் என்று ஏத்தப்படுபவனே இவ்வுலகில் வாழ்ந்தவன் என்பான். ஒருவராலும் விரும்பப்படாது, அழுது விடிந்து விளக்கெண்ணெய் ஒழுகும் முகத்த வனுய் இவ்வுலகில் இருப்பவன், தான் உயிர் வாழ்வ தால் அடையும் பயன் தான் யாது? 'செத்தால் தெரியும் செட்டியார் வாழ்வு' என்ற பழமொழி ஒன்று உண்டு. நல்லவனும் கெட்டவனும் செத்த பிறகு தான் தெரியும்.

ஒருவன் நல்ல பெயரை உலகினில் நிறுவி விட்டுச் சாக வேண்டும். ஊரில் கிடக்கிறது தராசும் படியும் என்று சொல்வார்கள். குலம், உருவம், கல்வி, பதவி, பட்டம், மாடு, மனே, மக்களால் பயன் இல்லே. பாவி ஒழிந்தான் என்று எல்லாரும் பெருமூச்சு விடும் விதத்தில் ஒருவன் சாவதாயிருந்தால், அவன் வாழ்ந்த வாழ்க்கை எத் தகையதாய் இருந்திருக்கும்? இதை வள்ளுவப் பெருந் தகையார் உள்ளம் குழைய உருகி உரைப்பதை உற்று நோக்கலாம்:—

''எச்சமென் றென்னெண் ணும் கொல்லோ ஒருவரால்
நச்சப் படாஅ தவன்.''

பொட்டலாய்க் கிடக்கிற கட்டாந்தரையிலே மழை பெய்யினும், தொட்டுப் பார்க்கவும் துளி தண்ணீர் நிற்காது. அதுபோல் கலக்கப்படுவாரோடு இனிய முகத்தனுய்க் கலந்து பழகாதவனது வாழ்க்கையிலும் இன்பச் செல்வம் தங்காது. ஒவ்வொருவனும் தன் வாழ்க்கையில் உறவு என்னும் பள்ளம் கோலி, சிரிப்பு என்னும் கரையை உயர்த்தி, அன்பு என்னும் கால்வாய் வழியாகச் செல்வம் என்னும் நீரைத் தேக்கவேண்டும் அங்ஙனம் செய்தால், ஏரி நிறைந்தனைய செல்வம் அவனுக்கு எக்காலத்தும் எய்ப்பில் வைப்பாய் உதவி நிற்கும் சுற்றத்தாரைத் தழுவி யாவரோடும் சிரித்த முகத்தனுய் இனிது அளவளாவிக் கலந்து வாழும் வாழ்க்கையே ஒருவனுக்குச் செல்வம் நிறைந்த வாழ்க்கையாம். வாழ்க்கையில் மலர்ச்சியின்றிப் பிறரோடு சேர்ந்து வாழவும் தெரியாது, பணத்தைப் பூதம் காப்பதுபோல் வைத்துக்கொண்டிருப்பவனுக்கு எவ்வளவு செல்வம் வந்தாலும், அதனுல் யாதொரு பயனும் இல்லாது வறிதாகப் போய்விடும். அவன் வாழ்க்கை கரையில்லாத குளம்போன்றுதான் இருக்கும். கரையில்லாத குளம் குளமாகாது. அதிலே எவ்வளவு

நீர் பெருகினுலும் நிலேத்திருக்காது நாலாபக்கமுமாய் உருண்டோடிவிடும். அதுபோலவே பிறரோடு கலந்து வாழாதவன் வாழ்க்கையும் வறிதாகும். கோதிலா மனத்தோடும் தீதிலா முகத்தோடும் களித்துக் கலந்த தோர் காதற்கசிவோடு, யாதொன்றும் ஒளித்துக் கவராது உண்மை திகழ வாழும் வாழ்க்கைக்கு ஒரு நாளும் குறை வராது. பொருள் பூத்துப் பொலிந்து கொண்டே இருக்கும். செல்வம் சேர்ந்துகொண்டே வரும். இன்பக் களி நகையாடி யாவருடனும் இணேந்து வாழும் வாழ்க்கையே வாழ்க்கை. பிறருடைய நன்மை கண்டு மகிழ்ந்தும் தீமை கண்டு இரங்கியும், பிறர் மேன்மை கண்டு அழுக்காறு கொள்ளாதும், பிறர் சிறுமை கண்டு இகழாதும், பிறருக்கு எவ்வாற்ருனும் மனம் மொழி மெய்களால் தீங்கு செய்யாதும், யாவருட னும் கலகலவென்று குழைவாய்ப் பழகிக் களித்து விளேயாடி இன்பம் திளேத்து வாழும் வாழ்க்கையே செல்வம் செழிக்கும் நல்வாழ்க்கை. பிறரோடு அளவளாவி சல்லாபித்து வாழாத வாழ்க்கை பாழ் என்கிறது திருக்குறள்.

''அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறை தற்று.''

கரையில்லாத குளத்துத் தண்ணீர் களகளவென்றும் குளகுளவென்றும் சுழன்ருேடும் பொழுது எழும் அநுகரண ஒலி இத்திருக்குறளின் முதல் அடியில் இயல்பாகவே அமைந்திருப்பது கண்டு மகிழற்பாலது.

ஒருவன் வாழ்க்கையில் வெற்றியுடன் முன்னேறி வருகிருன் என்ருல், பிறர் அவனேக்கண்டு பொருமை அடைகிருர்கள். தமக்கு அவ்வாறு வெற்றி கிட்ட வில்லேயே என்றுதான் பொருமை. இவ்வாறு பொருமை கொள்வதால் தங்களுக்குக் கெடுதலே யன்றி நன்மை யாதும் இல்லே என்பதை அவர்கள் உணர்வதில்லே.

அவன் வெற்றி யெய்துவதற்கும், தாங்கள் அவ்விதம் எய்தாதிருப்பதற்கும் காரணம் என்ன என்பதைப் பற்றியும் அவர்கள் சிந்திப்பதில்லை. அவ்வாறு சிந்தித்தால் பொருமை போய்விடும். அவன் வெற்றிப் பாதையைத் தாங்களும் மேற்கொண்டு முன்னேறலாம். உலக வாழ்க்கையில் வெற்றி யடைவதற்கு ஓர் இரகசியம் இருக்கிறது. அந்த இரகசியப் பாதையை, வெற்றிப் பாதையை மிக நல்ல எளிய பாதையைத் திருவள்ளுவர் அழகாக நமக்கு எடுத்துக் காட்டியுள்ளார்.

ஒருவரிடத்திலே நமக்கு ஒரு காரியம் ஆக வேண்டியிருந்தால், நாம் இனிய முகத்துடன், சிரித்த வண்ணமாய், அவரை நெருங்கி அக்காரியத்தை எளிதில் முடித்துக்கொள்ளலாம். அக்காள் பிடித்த முகத்துடன் அசடு வழிய ஒருவரை அணுகினுல், எளிதில் முடியக்கூடிய காரியமும் முடியாமற் போகி விடும். நகைமுகம்யாரையும் நமக்கு நல்லவர்களாகச் செய்துவிடும். புன்னகை பூத்த பொலிவு முகத்தைக்கண்டு உலகமே பூரிக்கும். முகத்திலே சிரிப்பு விளையாடினுல், சிந்தையின் நலனும் அங்கே தெளிவாகும். நாம் நினைத்த காரியம் கைகூடும். சீறிய முகத்துடன் சினந்து பகைத்தால்கூறிய காரியம் கெட்டே போகும். நல்ல விதமாய் நகைத்துப் பேசி நட்பு முறையில் எந்தக் காரியத்தையும் சாதிக்க முடியும். பெரிய நாடுகளுக்கிடையே, உறவு முறை கொண்டாடுவதற்கும் இது ஒரு சிறந்த சாதனமாகும். அப்பொழுது இதனை 'டிப்ளோமசி' (Diplomacy) என்பர். பண்பை இழந்து பகைத்துக் கொண்டால், காரியம் பாழ்பட்டு விடும். முகத்திலே நகையொளி தவழப் பழகி வரும் ஒருவருக்கு நல்ல தோற்றம் உண்டு, பொலிவு உண்டு, பெருமை உண்டு, கவர்ச்சி உண்டு, வெற்றி உண்டு.ஆங்கிலத்தில் Personality 'பெர்சனுலிடி' என்று சொல்வதிலும் இது அடங்கியிருக்கிறது.

இந்த எளிய முறையை ஏனோ பலர் கையாளாது விட்டுவிடுகின்றனர். ஒருவன் முகத்தை வைத்துத் தான் அவன் அகத்தை உலகம் அறிகிறது. ஒருவ னிடத்திலுள்ள இனிமையைத்தான் உலகம் நாடுகிறது. இனிமை இல்லாதவனுக்கு உலகில் தனிமை தான் கிடைக்கும். இனிமையைக் காட்டுவது சிரிப்பு. இனி மைக்கு மறுதலை கொடுமை. கொடுமையைக் காட்டு வது கோபம். அகத்தில் இனிமை இருந்தால் முகத்தில் சிரிப்புத் தோன்றும். அகத்தில் கொடுமை இருந்தால் முகத்தில் கடுமை தோன்றும். முகம் கண்ணாடி போல் அகத்தின் உணர்ச்சிகளை எடுத்துக் காட்டிவிடும்.

> "அடுத்தது காட்டும் பளிங்கு போல் நெஞ்சம்
> கடுத்தது காட்டும் முகம்."

என்பது பொய்யா மொழி. இந்தக் குறிப்பைக் கொண்டே தான் உலகம் மனிதரை அளந்து அறிந்து மதிப்பிடுகின்றது. ஆதலால் என்றும் நமது முகம் கோணாது, சீறாது, மாறாது, வாடாது, நகைததும்பி நல் லொளி சிந்த வேண்டும். நகை முகம் கண்டு பகை முகமும் மாறும். நம்மைச் சுற்றிலும் நம்பிக்கையும், அன்பும், நட்பும், அமைதியும் உண்டாகும். இதை விட வாழ்க்கையில் ஒருவனுக்கு வேறு வெற்றி யாதிருக்கிறது? நாம் நகை முகம் மாறிப் பகை முகம் கொண்டால், வாழ்க்கையும் ஒரு படை முகாமாக மாறிப் பகைதான் மிச்சமாகும். வாழ்க்கை ஒரு போர்க்கள மாகிப் படு தோல்வி நமது பக்கத்திலே எப்பொழுதும் வாசம் செய்யும். வீணான துன்பங்களை நாம் விலை கொடுத்தே வாங்கியது போலாகும். பகையுள்ளம் வாழ்க்கையைப் பஞ்சு படாப்பாடுபடுத்தி விடும். மிக எளிதாக சிரித்துக் களித்துச் சீரும் சிறப்புமாய்த் திகழ வேண்டிய வாழ்க்கையைப் பகை கொள்வதால் பெரும் பாடு பட்டுப் பயனற்றதாய்த் துன்பமயமாக்கிக் கொள்

வோம். இதை வள்ளுவர் எவ்வாறு கூறுகிறுர் பாருங்கள்:

"இகலானும் இன்னுத வெல்லாம் நகலானும்
நன்னயம் என்னும் செருக்கு."

நகைமுகம் நட்பைக் காட்டுகிறது. நகையிழந்த முகம் பகையைக் காட்டுகிறது. முகம் மட்டும் நகை யோடு இலங்கி விட்டால் போதாது. நமது வாயினின்று வரும் சொற்களும் இனிமையாய் இருக்க வேண்டும். நமது இனிய பேச்சு அதனைக் கேட்போர் மனத்தில் உவகையையும் முகத்தில் மலர்ச்சியையும் எழுப்ப வேண்டும். இந்த இலேசான முறையை ஒருவன் சோர்ந்து விடாமல் கையாண்டு வந்தால் அவன் வாழ்க்கை இன்ப மயமாய் இருக்கும். அவனைச் சுற்றி லும் எங்கும் அன்பும், நட்பும், ஆதரவும், அமைதியும் ததும்பி இருக்கும். நமது முகமும் களித்த பேச்சும் எங்கும் எப்பொழுதும் யாவரையும் கலந்து மகிழ்ந்து வாழச் செய்யும். அதுவல்லாமல், ஒருவரோடு ஒரு வரை முட்டிப் பகைத்து மோதச் செய்து பகையை விளைத்துக் குட்டிக் கலகங்களை உண்டாக்கும்படியான பேச்சுக்களைப் பேசி வந்தால், நமது வாழ்க்கை ஒரு நரக மாகவே மாறிவிடும். இதை வள்ளுவர் கூறியிருக்கிறுர்:

"பகச் சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச் சொல்லி
நட்பாடல் தேற்ரு தவர்."

சிரித்த முகத்தைப் பார்த்தோம். இனித்த சொற் களைக் கேட்டோம். ஆனுல், மனம் என்னவாயிற்று? சிரித்த முகத்தைக் கண்டு ஏமாந்து விடக்கூடாது. வெளுத்ததெல்லாம் பால் அல்ல. வெளித் தோற்றங்கள் வெறும் வேடமாக இருக்கும். மனத்திலே கரவடமும் கழுத்திலே தாழ்வடமுமாய்த் திரிவோர் பலராவர்.

"புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியார் உடைத்து."

அகத்திலே வெறுப்பும் முகத்திலே சிரிப்புமாய் உலகை ஏமாற்றுவது இப்பொழுது சர்வசாதாரணமாகி

விட்டது. முகம் மலரைப் போல் மலர்ந்தே இருக்கும். ஆனால் மலரின் இதழ்களில் பூநாகம் மறைந்து கிடப்பது போல் உள்ளத்திலே கொடுமை அடர்ந்து கிடக்கும். (ஷேக்ஸ்பியர் நாடகம் ஒன்றில் மேக்பெத் என்பவனின் மனைவி 'மலரைப்போல் முகமும் அதனுள் நெளியும் அரவைப்போல் அகமும் கொண்டு நட' என்று உப தேசிக்கிறாள். "Look like the flower but be the serpent under it") அவன் சிரித்துச் சிரித்துக் குரல் வளையை அறுத்து விடுவான், என்று அடிக்கடி சொல்லக் கேட்கி றோம். அத்தகையோரை நாம் தினமும் சந்திக்கவும் செய்கிறோம். நட்பாடுவதுபோல் நம்மிடம் சிரித்துப் பேசிக்கொண்டே பின்னால் படு பாதாளக் குழியைத் தோண்டி விடுவார்கள். அன்னாரை அறிந்து கொள் வதே மிகக் கடினமாய் இருக்கும். அவர்கள் உலகுக்குச் செய்து வரும் கேடும் மிகப் பெரிதானது. சிரித்துக் கொண்டே நமது கழுத்தை நறுக்கக் கத்தியைத் தீட் டும் அந்த நயவஞ்சகர்களைத் திருவள்ளுவர் நன்கு அறிவார். அவர்களைக் கண்டு பெரிதும் அஞ்சியவர் திருவள்ளுவர். அந்த நம்பிக்கை மோசம் செய்யும் நாசகாரிகளிடமிருந்து உலகைத் தப்புவிக்க வழியில் லையே என்றுதான் திருவள்ளுவர் வருந்தினார். அத் தகையோரை அறிந்து ஒதுங்குவதற்குத் தக்க கருவி யில்லாதது தான் இங்கே சங்கடம். ஒருவனை அறிவது அவன் முகத்தைக் கொண்டுதான். ஆனால் கொடுமைக் காரர்கள் தங்கள் முகத்தைச் சிரிப்பு என்னும் திரை யாலே சிங்காரித்து விடுகிறார்கள். இதனால் அவர்கள் உள்ளத்திலே நெளியும் தேளும் பாம்பும் நமக்குத் தெரி யாமற் போய் விடுகின்றன. நாம் ஏமாற்றப்படுகிறோம். அவர்கள் சூழ்ச்சிக்கு இரையாகிறோம். அவர்கள் நம்மைக் கெடுத்து விடுகிறார்கள். நமக்கு வேண்டிய வர்கள் போலவே நடித்து இன்னாதனவற்றைத்

துணிந்து செய்து வரும் நஞ்சினும் கொடிய நய வஞ்சகர்கள் நமனை விடவும் மிகப் பொல்லாதவர்கள். அவர்களைக் கண்டு அஞ்சாமல் நாம் வேறு என்னதான் செய்ய முடியும்? நேரே வெளிப்படையாய் நம்மை எதிர்த்து வரும் பகைவர்களையாவது நாம் தாங்கிக் கொள்ளலாம். ஆனால் தோளின் மீது இருந்தே செவி யைக் கடிக்கும் இத்துட்டர்களைக் கண்டு நாம் தூர விலக வேண்டும் அல்லவா? சிரித்த முகம் காட்டி உறவாடி நல்லவர்கள் போல் நம்மிடம் ஒட்டிக் கொண்டிருந்தே நம்மைக் கெடுத்து விடுவார்கள். அவர்கள் சிரிப்பு நம்மை ஏமாற்றி இழுத்துச் சென்று அழிவின் ஆழத்திலே அமுக்கி விடும். அவர்களின் போலிமுகத் தோற்றம் நம் பாதுகாவலைக் காலி செய்து விடும். எடுத்ததற்கெல்லாம் கலகலவென்று சிரிப் பார்கள். களுக்கென்று சிரித்துத் தளுக்காகப் பேசு வார்கள். நாம் அவர்களுடைய சிரிப்பின் வலையிலே சிக்கிக்கொள்வோம். முற்றிலும் அவர்களை நம்பிச் சரண் புகுவோம். மடியில் ஏறும் பச்சைக் குழந்தையைக் கழுத்தைத் திருகுவது எவ்வளவு எளிது? அவ்வளவு எளிதாக நம்மைக் கெடுத்து விடுவார்கள். அவர்களை நம்பிவிட்டால் பின் அவர்கள் கொடுமையிலிருந்து தப்ப முடியாது. ஆதலால் அவர்களை அஞ்சப்படும் என்று வள்ளுவர் கூறினார்:—

> "முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா
> வஞ்சரை அஞ்சப் படும்"

'கண்ட இடத்தில் காமாட்சி நாயக்கர், காணாத இடத்தில் தெண்டில் தின்னும் வடுகன்' என்ற ஒரு பழ மொழி உண்டு. நம்மைக் கண்ட இடத்திலே புகழ்ந்து மலர்ந்து சிரித்து நட்புக் காட்டுவதும், நம் முதுகுக்குப் பின்னால் நம்மை இகழ்ந்து கேவலமாகப் பேசுவதுமாய் இருக்கும் ஒருவன் நமக்கு எத்தகைய பகைவன்

என்பதைப் பாருங்கள். பெரும்பாலோர் இப்படியே திரிகின்றூர்கள். இவர்களைப்போல் படுபாவிகள் வேறு கிடையாது என்கிறூர் திருவள்ளுவர். பைரன் என்னும் ஆங்கிலக் கவிஞனின் வாழ்க்கையை இப்படியே சிலர் கூடிப் பாழடித்து விட்டனர். அவன் வருந்திப் பின் வருமாறு ஆங்கிலத்தில் பாடினுன்:—

"From mighty wrongs to petty perfidy
Have I not seen what human things could do?
From the loud roar of foaming calumny
To the small whisper of the as paltry few
And subtler venom of the reptile crew
The Janus glance of whose significant eye,
Learning to lie with silence would seem true
And without utterance, save the shrug or sigh,
Deal round to happy fools its speechless obloquy."
(Childe Harold's Pilgrimage—CXXXVI)

நமக்கு நல்லவர்கள் போலவே தான் நடித்துக் கொண்டிருப்பார்கள். ஆனுல் நம்மை அறியாமலே நமக்குப் பின்னுல் நம்மை இகழ்ந்து பிறரிடம் குறை கூறிக்கொண்டிருப்பார்கள். நமக்கு வேண்டியவர்களே நம்மைக் குற்றம் கூறினுல், அது நமக்கு எவ்வளவு தீங்கு விளைவிக்கும் பாருங்கள்! அவர்களுடைய கள்ளச் சிரிப்பும் பொய்யான நகையும் நம்மைக் கண்ணைக் கட்டி மறைத்துவிடும். இந்தப் பொய்யர்கள் நமக்குத் தெரியாமலே வெளியில் நம்முடைய புகழைச் சின்னுபின்னம் செய்துவிடுவார்கள். ஒரு சின்னச் சிரிப்பாலே, அங்க அசைப்பாலே, உதட்டின் பிதுக்காலே, பேச்சின் பிலுக்காலே, தோளின் குலுக்காலே, விரலின் வீச்சாலே, கள்ள நெளிப்பாலே, கண்ணின் களிப்பாலே நம் பெயரையும் புகழையும் கொட்டிக் கவிழ்த்து விடுவார்கள். அவர்களுடைய பொய்ச் சிரிப்பும் போலி

நட்பும் பொல்லாங்கு புரிந்துவிடும். புண்ணியத்தின் பெயரையும் வாயாற் கூருது பாவமே செய்துவரும் பாதகர்களைவிட மிகக் கொடியவர்கள் இந்தப் போலிப் பொய்ச் சிரிப்பாளர் என்கிருர் திருவள்ளுவதேவர் :—

" அறனழீஇ யல்லவை செய்தலில் தீதே
புறனழீஇப் பொய்த்து நகை."

பகையாளியை உறவாடிக் கெடுக்க வேண்டும் என்பது சிலருடைய சித்தாந்தம். பகையாளியைக் கெடுக்காது, பகைக்காது, அணுகாது, மெல்ல நல்ல விதமாய் ஒதுங்கிவிட வேண்டும் என்பது வள்ளுவர் சித்தாந்தம். உண்மையாக நமக்குப் பகைவன் என்று தெரிந்த ஒருவன், நமது நண்பன் போல் நடித்துக் கொண்டே நம்மிடம் நெருங்கி வந்தால், அவனை அதட்டி வெகுண்டு தள்ளிவிடக் கூடாது. அவ்விதம் செய்தால், அவன் பகைமை மேலும் அதிகமாகி நம்மோடு நேர்முகமாகத் தீமை புரிய ஆரம்பித்து விடுவான். அவனிடம் நாமும் உறவு கொள்வதுபோல் பொய்யாகவே நடித்துத்தான் தீர வேண்டும். கண்ட இடத்தில் இலேசுமாசாய் சிரித்துப் பேசிக் கழித்துவிட வேண்டும். ஆனுல் எச்சரிக்கையாய் அவன் வஞ்சகத்தில் அகப்படாது, தப்பித்துக்கொள்ள வேண்டும். நமது மனதை அவர்களிடம் பறிகொடுத்து விடலாகாது. மனமாரப் பகைவர்களை நேசிக்கவும் கூடாது. மனதால் அவர்களிடமிருந்து நீங்கி, முகத் தளவிலே அவர்களோடு சிரித்துப் பேசி அமைய வேண்டும். அவர்களுக்குத் தீமை விளைக்கவும்கூடாது. இவ்வாறு திருவள்ளுவர் நமக்குக் கூறும் தந்திரம் சிந்தித்து உணர வேண்டியதோர் உண்மையாகும்.

"பகைநட்பாங் காலம் வருங்கால் முகம் நட்(டு)
அகம்நட்(பு) ஒரீஇ விடல்."

# திருக்குறளும் இல்லறமும்

அறம், பொருள், இன்பம் என்னும் உறுதிப் பொருள்கள் மூன்றனையும் அடிப்படையாகக்கொண்டெழுந்தது முப்பாலென்னும்திருக்குறள் நூல்.நான்காவதாகிய வீடு என்னும் உறுதிப் பொருள் மாற்ற மனம் கழிய நின்ற தொன்ருகலின், துறவறமாகிய காரண வகையாற் கூறப்படுவதல்லது இலக்கண வகையாற் கூறப்படுவ தன்றெனப் பரிமேலழகர் விளக்கியுள்ளார். அவற்றுள் முதலாவதாகிய அறம் என்பது, நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப் படினும், ஒழுக்கத்தையே சிறப்பாக அறம் என எடுத்து வள்ளுவர் தமது நூலில் வற்புறுத்தியுள்ளார். ஒழுக்கமாவது தத்தமக்குரிய நிலையினின்று, அதற்குரிய அறங்களின் வழுவாது ஒழுகுதல். அறத்தையும் இல்லறம், துறவறம் என இரண்டு பெரும் பிரிவுகளாகக்கொண்டு, சிறப்பாக இல்லறத்தையே முதற்கண் எடுத்து, ஐந்தாவதாகிய "இல்வாழ்க்கை" என்னும் அதிகாரம் தொடங்கி, இருபத்து நான்காவதாகிய 'புகழ்' வரை, இருபது அதிகாரங்களால் இல்லற வாழ்க்கையைப்பற்றி வள்ளுவர் கூறியுள்ளார். ஆகவே இப்பகுதிக்கு "இல்லறவியல்' என்று பெயர் வந்தது. ஆயினும் இல்லறத்தைப்பற்றி இவ்விருபது அதிகாரங்களில் மட்டுமே கூறப்பட்டது என்று எண்ணிவிடக்கூடாது. காமத்துப்பால் முழுமையும் இல்லறத்தார்க்கு உரியதாகவே அமைக்கப்பட்டிருக்கின்றது. பொருட்பாலினும் பல்வேறு குறிப்புகள் இல்லறத்தார்க்குரியனவாகக் காணப்படுகின்றன. பெண்வழிச் சேறல், குடிசெயல்வகை முதலிய அதிகாரங்கள் இல்லறத்தார்க்கே எழுதப்பட்டன

என்பதைச் சொல்லவேண்டுவதின்று. இன்னும் சற்று நுணுகிப் பார்ப்போமானால், திருக்குறள் நூல்முழுதுமே இல்வாழ்வானுக்கு இன்றியமையாத ஒரு சிறந்த வாழ்க்கைத்துணை நூலாகக் காட்சியளிக்கும்.

இல்லறம் என்னும் நல்லறம் மனையாளோடு கூடி வாழும் வாழ்க்கை. அஃதாவது, இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற நெறிக்கண் நின்று, அதற்குத் துணையாகிய கற்புடை மனைவியோடும் செய்யப்படுவதே இல்லறம். இவ்வுலகத்திலே இல்லற வாழ்க்கையைச் சரிவர நடத்தி ஒருவன் எப்படி வாழவேண்டுமோ அப்படி வாழ்வானாயின் அவன் சாதாரண மனித நிலையினின்றும் மாறி அமர நிலையை எய்துவான் என்கிறார் வள்ளுவர்.

“ வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப்படும். ”

இல்லாளோடும் கூடி வாழ்தலின் சிறப்பை, “ இல்வாழ்க்கை ” என்ற அதிகாரத்தில் வள்ளுவர் வகுத்தோதுகின்றார். இல்வாழ்க்கை எப்படி அமைய வேண்டும்? ஒருவன் இல்வாழ்க்கை, தன் மனைவிமேல் செய்யத்தகும் அன்பினையும், பிறரோடு பகுத்துண்டலாகிய அறத்தினையும் உடையதாக இருக்கவேண்டும். மனைவிமேற் படரும் அன்பே இல்வாழ்க்கையின் பண்பு. பிற உயிர்கள் மேல் தொடரும் அறமே இல்வாழ்க்கையின் பயன். மனைவிமேற் காட்டும் அன்பே இல்லறத்தின் மாண்பு. தன்னிடம் இருக்கும் பொருளைப் பிறர்க்கும் உண்ணக் கொடுத்துத் தானும் உண்பதே இல்லறத்தின் குறிக்கோள், அதன் முக்கிய நோக்கம். கணவனும் மனைவியும் உள்ளம் கலந்து அன்பு கொள்ளாதவழி, பிற உயிர்கள்மேற் செய்யப்படும் அறம் தோன்றாதாகலின், அன்பே இல்வாழ்க்கையின்

பண்பாயிற்று. கணவனும் மனைவியும் கருத்தொரு மிக்கும் அன்பாகிய பண்பினால் விளைய நிற்பது அறம். ஆகையால் அதுவே பயனாயிற்று.

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது."

ஆகவே இல்லறத்தின் முக்கிய நோக்கம் மனைவி மாட்டும் பிற உயிர்கள் மாட்டும் அன்பு செலுத்துதல். மனையாளை நேசித்து மனையிலிருந்து வாழ்ந்துவிட்டால் மட்டும் இல்வாழ்க்கை சிறந்துவிடாது. இல்வாழ்க்கை அறவாழ்க்கையதாகிப் பிற உயிர்களுக்கு நன்மை பயப்பதாகவும் இருக்கவேண்டும். தானும் தன் மனைவி மக்களும் வாழ்ந்தால் போதும் என்ற குறுகிய நோக்கம் இல்வாழ்வான் இதயத்தில் நுழைந்துவிடக் கூடாது. உணவுப் பொருள்களை ஏராளமாக வீட்டில் குவித்து அடைத்து மறைத்து வைத்துக்கொண்டே பிறர்க்கு இம்மியும் ஈயாது தானே உண்டுகொழுத்து உல்லாச மாய்த் திரியும் செல்வன் உளனாயின், அவன் உண்மை யில் இல்லறவாழ்க்கையை உடையவன் ஆகமாட்டான். அவன் பிச்சைக்காரனிலும் கேடுகெட்ட பிச்சைக்காரன் என்கிறார் திருவள்ளுவர்.

'இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல்.'

இல்லறத்தானை நம்பி, அவன் உதவியை நாடி வாழ்வார் இவ்வுலகத்தில் பலராவர். பிறர்க்கு உணவருத்திப் பசியினைப் போக்குவதற்கு இல்வாழ் வானே பெரிதும் பொருத்தமுடையவனாவான். பிரம சரிய விரதம் பூண்டவர்களுக்கும் வனத்திற்சென்று தவம் செய்வோருக்கும், பற்றினை உதறிய முற்றத் துறந்த முனிவர்களுக்கும் இல்வாழ்வானே உணவு கொடுத்து ஆதரவளிக்க வல்லவன். இதுவே இல்லறத் தின் முதற்கடமை. இதனை இல்லறத்தான் சரிவர

நடத்தாது போனுல், துறவிகளின் தவநிலை கவலைக் கிடமான அவலநிலையாகிவிடும். யாவரும் மேற் கொள்ளவேண்டும் தவநிலையை இல்வாழ்வான் கை விட்டதே, துறவிகளின் தவம் இனிது நடந்தேறு வதற்குத்தான் போலும் என்று வியக்கிருர் திருவள்ளு வர். ஏனெனில் எல்லாரும் தவநிலையை மேற்கொண்டு விட்டால் அவரைத் தாங்குவார் ஒருவரும் இலராவர். அது கருதியே இல்லறத்தார் தவம் செய்ய மறந்தார்கள் போலும் என்று நயம்படக் கூறுகிருர் திருவள்ளுவர்.

"துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம்."

இதனுல் துறவறத்தார்க்கு உண்டியும், மருந்தும் உறையுளும் போல்வன அளித்துதவித் துணையாக இருக்கவேண்டுவது இல்லறத்தார் கடமையாயிற்று. இதுமட்டுமா? இல்வாழ்வான்—ஏழை பங்காளனுய், ஆபத்துக்குதவுபவனுய், அகதிக்குறு துணையாய், பரோபகாரியாய்த் திகழவும் வேண்டும். களைகணுன வரால் துறக்கப்பட்ட அநாதைகளுக்கும், நல்கூர்ந்தார்க் கும் இல்வாழ்வான் துணையாக நின்று அவரவர்களுக்கு வேண்டுவன கொடுத்து ஆதரித்தல் வேண்டும்; ஒருவருமின்றித் தன்னை வந்தடைந்து பின் மாண்டு போனவர்களுக்கு நீர்க்கடன் ஆற்றி, அவர் உயிர்களை நல்லுலகின்கட் செலுத்தவேண்டும். பிதிரர், தேவர், விருந்தினர், சுற்றத்தார், தான் என்ற ஐவரிடத்தும் செய்யவேண்டும் அறநெறியை வழுவாமற் செய்ய வேண்டும். இவற்றைச் செம்மைபெற நடத்துவதற்குப் பொருள் வேண்டும். அதற்காகத் தீயவழிகளிலே சென்று பொருள்திரட்ட முற்படுதல் கூடாது. இல்வாழ் வான் நல்லவழியிலே பொருளீட்டி அதைப் பிறர்க்கும் பகிர்ந்து கொடுத்துத் தானும் உண்ணவேண்டும்.

பிறர்பொருளைக் கொள்ளையடித்துப் பகுத்துண்ணு வானுயின், அதன் புண்ணியமெல்லாம் அப்பொருளுக்கு உண்மையாக உரியவர்களைச்சென்று சேரும். அதன் பாவமட்டுமே இவனுக்கு எஞ்சி நிற்கும். ஆதலால் பழியஞ்சிப் பொருளீட்டிப் பிறர்க்கு உதவ வேண்டும் என்கிறுர் திருவள்ளுவர்.

''பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்.''

இல்வாழ்க்கைக்கு நல்ல மனைவி மிக அவசியம். இல்லறம் நடத்துவதற்குரிய வாழ்க்கைத் துணைவியாகும் மனைவி யின் சிறப்பையெல்லாம் வாழ்க்கைத் துணைநலம் என்ற அதிகாரத்தில் காணலாம். மனைவியாவாள் மனையறத் திற்குத்தக்க நற்குண நற்செயல்களையுடையளாய், கற்பு என்னும் திண்மைபெற்றவளாய், கணவனையே தெய்வமாகத் தொழுபவளாய், கணவனுடையதும், தன்னுடைய்துமான புகழையும், நன்மதிப்பையும், உடல் நலத்தையும் சோர்விலாது காப்பவளாய் அமைய வேண்டும். அத்தகைய மனையாளை எய்துவதைவிட வேறு சிறந்த பொருள் ஒருவனுக்கு இவ்வுலகத்தில் இல்லை. கற்புடைய மாதரைத் தெய்வமும் பணிந்து ஏவல்கேட்டு நிற்கும். தேவர் உலகமும் அவர்களுக்கு எளிதிற் சித்திக்கும். மனையறத்திற்குத்தக்க இத் தகைய நற்குண நற்செய்கைகள் ஒருவன் மனைவியிடத் தில் இல்லாவிடில், அவன் இல்வாழ்க்கை, வேறு எத் தகைய செல்வம் இருந்த போதிலும், சிறப்புருது. மாட்சிமையில்லாத மனைவியை உடையவன் வெளியில் தலைதூக்கி நடக்கவும் இயலாது இழிவெய்துவான். சிறந்த மனைவி வாழும் மனையில் எல்லாப்பொருளும் நிறைந்திருக்கும். கணவன் கேட்டதற்கு இல்லையென்ற சொல்லே மனைவி வாயில் வராது. இல்லறத்தில் கணவன், கடவுளை மறவாதும், மனைவி தன் கணவனே

கடவுள் என்பதை மறவாதும் வாழ்க்கையை நடத்தி வரவேண்டும். ("He for God only: She for God in him.")

"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை."

இக்குறளுக்கு ஒரு விளக்கவுரை தருவதுபோல் இளங்கோவடிகள் கீழ்வரும் வெண்பாவைப் பாடினுர்.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வந் தொழுந்தகைமை திண்ணிதால்—தெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணகமா தர்க்கு விருந்து."

இதனுல் வேறு தெய்வத்தை வணங்காளாய்த் தன் கணவனை வணங்குவாளைத் தெய்வமும் வணங்கும் தன்மை கண்ணகி வாழ்க்கையிலிருந்து உறுதி பெறுகின்றது. ஆயினும் கண்ணகி சீறிக்கனன்று மதுரையை எரித்ததுபோல் பெண்ணினல்லார் தங்கள் அரிய சக்தியைக்கொண்டு அழிவுச்செயல்களைச் செய்துவிடாது, ஆக்கவேலைகளில் முனையவேண்டும் என்னும் நினைப்பால், வறங்கூர்ந்தகாலை வான்பொழிய வைப்பார் என்ருர் திருவள்ளுவர். கண்ணினின்றும் கணப்பொழுதில் கனமழை சொரியவல்ல காரிகை மாதரார் விண்ணினின்றும் வேண்டுமழை பொழியச்செய்வர் என்ற உண்மை போதரும். பெய் என்று கூறியவுடன் மழைபெய்யும் என்றது ஓர் எடுத்துக் காட்டேயாகும். நினைத்தது நினைத்தபடி நிகழச்செய்வர் கற்புடைப் பெண்டிர் என்றவாறு.

கணவனைத் தெய்வமாகக் கருதி வழிபடும் நெறியிலும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு முறைகள் உள. அவற்றைக் கீழ்வரும் பாடலால் அறியலாம்:

"கடிமனை விளக்கல் சரியை. கணவர் உண்ணும்
படிஅறு சுவையூட்டல் கிரியை பதியோடு ஒன்றி
ஒடிவிலா இன்பம் துய்த்தல் யோகம் உரையில் நிற்றல்
துடியிடை மடவார்க் கெல்லாம் ஞானமென் றுரைப்பர் தொல்லோர்."

இவ்வாறு இல்வாழ்க்கையின் மங்கலம் மனையாளுடைய நற்குண நற்செய்கைகள் ஆகும். ஆயின் இல்வாழ்க்கையின் அணிகலம் யாது? வாழ்க்கைத் துணைவிக்கு மிகுதியான பொன்னாலும் மணியாலும் நகைகளைப் பூட்டிச் செல்வத்துள் மூழ்கவைப்பது அணிகலம் ஆகாது: இல்வாழ்க்கையும் சிறக்காது. இல்வாழ்க்கையின் உண்மையான அணிகலம் நல்ல குழந்தைகளைப் பெற்றெடுப்பதுதான். குழந்தைகள் என்றால் ஆண் குழந்தைகளைமட்டும் குறிக்கும் என்பது தவறு. பெண் குழந்தைகளையும் சேர்த்தே திருவள்ளுவர் பொதுப்பட 'நன் மக்கட்பேறு' என்று கூறினார்.

"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு."

அங்ஙனமாயின், 'புதல்வரைப் பெறுதல்' என்று தனியாகவே ஓர் அதிகாரம் இருக்கிறதே என்ற கேள்வி எழலாம். புதல்வரைப்பெறுதல் என்பதற்குப் பதிலாக மக்கட்பேறு என்ற பாடமும் ஏட்டுச் சுவடிகளில் காணப்படுகிறது. பின்னதே சிறந்த பாடமாகும். பெண் மகவை யொழித்து ஆண் குழந்தையைக் குறிப்பிட வேண்டின், திருவள்ளுவர் மகன் என்று ஐயமறக் கூறிவிடுவார். அவ்விதம் வந்த குறள்கள் மூன்றுள (67, 69, 70,) மக்கள் என்ற சொல் ஆண்குழந்தைகளையே குறிக்கும் என்ற கொள்கையைக் கண்டிப்பவர்போல் சிவப்பிரகாசர் பாடிய பாடல் ஒன்றுளது. அது வருமாறு:

"கற்றார் அறிகுவர் மக்கள்தம் பேறெனக் கட்டுரைத்த
சொற்றான் ஒருபெண் ஒழித்ததென் பாரொடு தொல்லுலகில்
நற்றாண் மகப்பெறு கென்றுசி சொல்பவர் நாணஉனைப்
பெற்றான் மலையரை யன்தூன்றை வாழும் பெரியம்மையே."

சமூக வளர்ச்சிக்கு இல்லற வாழ்க்கையில் நாட்டமும் நன்மக்களைப் பெற்றெடுத்தலில் தேட்டமும் இன்றி யமையாதனவாகும். துறவற வாழ்க்கையைவிட இல்லறவாழ்க்கையை இனிதெனக்கண்டார் திருவள்ளு வர்; அதனை மேலெனவும் கொண்டார்; எல்லாச்செல்வங் களுள்ளும் மக்கட் செல்வத்தையே சிறந்ததாகக் கருதினர். குழந்தைகளுள் ஆண் என்றும் பெண் என்றும் அவர் வேறுபடுத்தியதே இல்லை. ஆண்பிள்ளை யேயாயினும், பெண் மகவேயாயினும் அவர்கள் நம் அன்பிற்கு உரியவராவர். பால்மணம் மாருப் பச்சிளங் குழந்தையிடத்தே பெற்ருேர் உள்ளம் கழிபேரின்பம் காண்குறும். உண்ணும்பொழுது குழந்தையை அருகில் வைத்து உண்ணும் இன்பம் வேறு எவ்வுலகிலேதான் ஒருவனுக்குக் கிடைக்கப்போகிறது? தன் அல்லிமலர்க் கரங்களால் சோற்றைக் கிண்டியும், கீழே சிதறியும், மேலே வாரி இறைத்தும் குழந்தை செய்யும் சிறு தொழில்கள் கண்கொள்ளாக் காட்சியாகும். அது குறுகக்குறுக நடந்துவந்து, தலையை அசைத்து, உதட்டை நெளித்துக் கன்னங்குளியச் சிரித்துத் தன் குஞ்சுக்கைகளால் துழாவித்துழாவி அளாவியிடுவது கூழேயாயினும் தேவாமிர்தத்தினும் மேலாகச் சுவைத்து அதன் பெற்ருேர் இனிமை காணலாம் என் கிருர் திருவள்ளுவர் :

"அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்."

குழந்தையின் மழலைமொழிகள் பெற்ருேர்களை உவகையால் மயக்கிக் கவலையைப் போக்கிவிடும். குழந்தையின் கொஞ்சும் குதலைச் சின்மொழிகள் மதியை மயக்கி மனத்தைப் பிணிக்கவல்லன. மழலைகேட்டு மகிழாத செவிகளுக்குத்தாம் குழல் இசையும் யாழ்

இசையும் மேலாகத்தோன்றும் என்று அழகுறக் கூறியுள்ளார் திருவள்ளுவர்:

"குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச் சொற்கோளா தவர்."

கணவன் மனைவியரிடையே காதலை வளர்ப்பதற்கும், கருத்தினைப் பிணிப்பதற்கும் குழந்தை வேண்டப்படுவதாகும். மக்களைப் பெற்றுவிட்டால் மட்டும்போதாது. அவர்களை நல்ல முறையிலே வளர்த்து அறிவு புகட்ட வேண்டுவதும் பெற்றோர் கடமையாகும். அதிலும் முக்கியமாய் ஆண்மகனுக்குக் கல்வி வருவித்து அவையிலே முதலிடம் பெறும்படியாகச் செய்ய வேண்டுவது தந்தையின் கடமையாகும்:

"தந்தை மகற்காற்று நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்,"

தன் மகன் அறிவுடையவனா, இல்லையா என்பதை அறியாத தாய் இல்லை. "தாய்க்கும் ஒளித்த சூல் உண்டா?" என்ற பழமொழியும் கேட்டிருக்கிறோம். தன் மகன் அறிவுள்ள உத்தமன் என்பதைத் தாயானவள் தெரிந்திருந்தாலும், உலகமும் அவனைப் பாராட்டும் பொழுதுதான் அவளுக்குப் பெருமகிழ்ச்சி உண்டாகுமாம். "காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு" என்பர். ஆதலால் தன் பாராட்டுதலுக்கு உகந்தவனாய் மட்டும் தன் பிள்ளை இருந்துவிட்டால் அவளுக்குப் போதாது. பிறரும் அவ்வாறு அவனைப் போற்றும் பொழுதுதான் அவள் மனம் இன்பம் அடையும். இதனை வள்ளுவர்,

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்."

என்றார்.

இல்வாழ்க்கையை மேற்கொண்டவன் பழிபாவங்களுக்கு அஞ்சிப் பொய்தீர் ஒழுக்க நெறிநின்று, தன்

கடமையை ஆற்றுவதில் சோர்வுபடாது அறத்தைச் செய்து வரவேண்டும். அப்பொழுதுதான், அவன் குழந்தையும் குட்டியும் பெற்றெடுத்துப் பெருவாழ்வு எய்துவான். ஒருவனுடைய குடும்பமானது வாழையடி வாழையாகப் பெருகி ஓங்கி வளரவேண்டும் என்ற கொள்கையை உடையவர் திருவள்ளுவர். ஆதலால், அவர் ஆங்காங்குக் குடும்பம் சந்ததியற்று அழிந்து போவதற்கு ஏதுவாய குற்றங்களை எடுத்துக்காட்டி, அவற்றை அஞ்சிக்களைந்தெடுக்க வேண்டும் என்று வற்புறுத்தி எச்சரித்துச் செல்கிறார். கீழ்க்கண்ட குறள்கள் அவற்றுட் சிலவாகும்.

'' கொடுப்ப தழுக்க றுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும். ''

'' குடியென்னுங் குன்றா விளக்கம் மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும்.''

'' நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும். ''

'' தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப் படும். ''

குடும்ப நாசத்திற்குக் காரணமாகவுள்ள தீமைகளைக் குறித்ததுபோல், குடும்ப நலத்திற்கும், ஆக்கத்திற்கும் வளர்ச்சிக்கும் ஏதுவாய பல நன்மைகளையும் மறக்காமல் திருவள்ளுவர் குறித்துச் செல்வது நாம் அறியத் தக்கதாகும்.

'' பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்.''

'' செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி
எச்சத்திற்(கு) ஏமாப் புடைத்து.''

'' மனந்தூயார்க்(கு) எச்சம்நன்(று) ஆகும் இனந்தூயார்க்(கு)
இல்லைநன்(று) ஆகா வினை.''

இதனால், குடும்பம் பெருகி வளரும்படி இல்வாழ்வான் நடந்துகொள்ளவேண்டும்என்றவள்ளுவரின்முதன்மை யான எண்ணம் நன்கு விளங்குவதாகும். தலைமுறை

தலைமுறையாக ஒருவன் குடும்பம் தட்டின்றித் தழைத் தோங்கி வருவது அவனுக்கும் நல்லது; நாட்டிற்கும் நல்லது. "I was ever of opinion that the honest man who married and brought up a large family, did more service than he who continued single and only talked of population" என்று ஆங்கிலப் பேரறிஞர் கோல்டு சுமித் கூறினுர். அஃதாவது, தனிமனிதனுய் இருந்து கொண்டு மக்களின் பொதுநலத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பதைவிட, நேர்மையான மனமுடைய ஒருவன், மணம் செய்து மக்களைப்பெற்றுக் குடும் பத்தைக் கவனித்து வருவது மேலான சிறந்த தொண்டாகும் என்பதாம். இவ்வாறு இல்லற நெறி யிலே நின்று, மனைவி மக்களுடன் வாழ்ந்து, பிறர்க்கு உதவியாளனுக வேண்டிப் பொருளீட்டி உலகியலை நடத்தி வருபவனே, சமுதாயமும் சீர்குலையாதபடி செய்வதற்குத் தகுந்த பாத்திரவானுவான். அரசியல் அலைக்கழிவுருது அமைதியுடன் ஆற்றப்படுவதற்கும் இல்லறத்தைக் கண்ணும் கருத்துமாய் நடத்தி வருப வனே இன்றியமையாதவனுவான். அத்தகைய வர்களையே அரசியலார் தேர்ந்தெடுத்து அரசியற் காரியங்களில் அமர்த்துவிக்க வேண்டும் என்பதைத் தெய்வப்புலவர் எதிர் மறைமுகத்தால் கூறியுள்ளது இங்கே கருதற்பாலது. அஃதாவது குடும்ப வாழ்க்கை, சொத்து, சுகம், மனைவி, மக்கள் ஒன்றும் இல்லாது, யாதொரு பற்றுதலுமின்றித் தன்னை எளிதிலும், விரை விலும் எதற்கும் விற்றற்குரியனுய் நிற்கும் குடும்ப வாழ்க்கை அற்றவன் எவனையும், அரசியற் காரியங் களுக்குத் தேருது விடுக்க என்று எச்சரிக்கிருர் வள்ளுவர்:--

"அற்ருரைத் தேறுதல் ஓம்புக மற்றவர்
பற்றிலர் நாணுர் பழி."

பொருளும், சுற்றமும் குடும்பமும் இல்லாதோரை 'அற்ருர்' என்ருர். உலகத்தார் பழிப்பன ஒழிதற்கும். புகழ்வன செய்தற்கும் ஏதுவாகிய உலக நடையியல்பு இல்லற வாழ்க்கையில்லார்க்கு இல்லையாம். இத் தகையார் பழிபாவங்களுக்கு அஞ்சமாட்டார்கள். தம்மைச்சேர்ந்தவர்களாகிய உற்ருர் துயருறுதலாகாதே என்ற கவலை அவர்களுக்குக் கிடையாது. நன்மையே வரினும். தீமையேவரினும் அவர்கள் இழக்கக் கூடியது ஒன்றும் இல்லை. ஆதலால் அவர்கள் எதற்கும் துணிந் திருப்பார்கள்; புரட்சி வீரர்களாய்ப் புறப்பட்டு விடுவார்கள் பொதுநலம் அவர்கள் கைப்பட்டால் உருப்படாமல் சிதைந்து சின்ன பின்னமாகும். நீதியோ, நியாயமோ, அவர்கள் நிழலடியிலும் நிற்காது. இதற்குக் காரணம், 'அவர் பற்றிலர்', அதனுல் "பழி நாணுர்" என்ருர் திருவள்ளுவர். உண்மையைக்கண்டு மறைக் காது, பொய்க்காது, அறத்திற்காகப் பாடுபடும் உத்த மச்சான்ருேர்கள் இல்லறத்தாரே யாவர் என்ற கொள்கை தமிழ் நாட்டில் தொன்று தொட்டு நிலவி வந்திருக்கிறது.

குழந்தை குட்டிகளை உடையோர், தீவினைக்கஞ்சி நல்லதையே எப்பொழுதும் நாடி நிற்பர்; கரிபொய்க்க மாட்டார்கள். இது கருதியே, மதுரைத்தெருவில் கணவனை இழந்து கண்ணீர் பெருக்கிக் கதறிய கண்ணகி, "இங்கு மக்களைப் பெற்ற மாண்புடையாளர் இல்லையா? அவர்கள் இருந்துமா இந்த அநீதி நடந்தது?" என்று கேட்டாள்:

"சான்ருேரும் உண்டுகொல் சான்ருேரும் உண்டுகொல்
ஈன்றகுழவி எடுத்து வளர்க்குறூஉம்
சான்ருேரும் உண்டுகொல் சான்ருேரும் உண்டு கொல்!"

இல்லற வாழ்க்கையாகிய சகடம் இனிது நடந்தேறு வதற்கு இல்வாழ்வான் சில சிறந்த பண்புகளை உடைய

வனுகத் திகழவேண்டும். அவற்றை நிரல்படக்கோத்துத் தனித்தனி அதிகாரமாகத் திருவள்ளுவர் இனிது கூறியுள்ளார். அவையாவன: அன்புடைமை, விருந்தோம்பல், இனியவை கூறல், செய்ந்நன்றி யறிதல், நடுவு நிலைமை, அடக்க முடைமை, ஒழுக்கமுடைமை, பிறனில் விழையாமை, பொறையுடைமை, அழுக்காரு மை, வெஃகாமை, புறங்கூருமை, பயனில சொல்லாமை, தீவினையச்சம், ஒப்புரவறிதல், ஈகை என்பனவாகும். இவற்றுள் முக்கியமாக அன்பும், விருந்தோம்பலும், இங்கே குறிப்பிடத்தக்கன. இல்லறமாகிய இன்பக்கனி, அன்பிலே தோன்றி, அன்பிலே தழைத்து, அன்பிலே கனிவதொன்ருகும். இல்லறம் என்னும் மகிழ்ச்சிக்கோட்டைக்கு அன்பையே அடிப்படையாக அமைத்தல் வேண்டும். இல்வாழ்க்கையை முறையாக நடத்தி மனைவியோடும், மக்களோடும், ஒக்கலோடும் கூடியின்புற்ருர், விருந்தோம்பல் முதலாகிய வேள்வித் தொழிலால் தேவராகி, மறுமைக்கண்ணும், துறக்க இன்பத்தைத்துய்த்து வாழ்வார் என்பது வள்ளுவர் துணிவு. தவத்தால் துன்புற்று எய்தும் துறக்க இன்பத்தினை, ஈண்டு இன்புற்ற நிலையிலேயே எய்துதல் அன்பினுல் மட்டுமே முடியும். வேருகாத அன்புடைய ஆடவனும் பெண்ணும் கூடியல்லது இல்வாழ்க்கை இயலாதாகையால் அன்புடைமை முதன்மையாக வேண்டப்பட்டது. இதனை வள்ளுவர்,

> "அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்(து)
> இன்புற்ருர் எய்துஞ் சிறப்பு."

என்று கூறியுள்ளார்.

விருந்தினரைப்பேணி அவர்க்கு உபகாரம் செய்தற் பொருட்டேதான், வனம் செல்லாது மனைவியோடும் இல்லின்கண் இருந்து பொருள்களைப்போற்றி இல்லறம்

நடத்தப்படுகிறது என்பதை இல்வாழ்வான் நன்கு உணரவேண்டும். விருந்தோம்பல் ஒன்றுமே இல்வாழ் வானுடைய தலைசிறந்த முதன்மையான குறிக்கோள் என்கிறார் திருவள்ளுவர்.

"இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு."

கோவலன், பரத்தை வயப்பட்டு நெறியைத் துறந்து, மனைவியை மறந்து வெளியுறைந்த காலத்தில் இல்லறம் நடத்தமுடியாது போனதால் இல்லற வாழ்க் கையின் சிறந்த பயனைத் தான் இழந்த செய்தியைக் கண்ணகி பின்னர் நினைந்து கூறி வருந்தியதைப் படிப் போர் மனம் என்றும் பரிந்துருகா நிற்கும்.

"அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை—"

மனைவிக்கு இலக்கணம்கூறி அவள் கடமைகளை எடுத்து விரித்துக்கூறிய திருவள்ளுவர், கணவர் கடமைகளை ஏன் தனியாக எடுத்துக்கூறவில்லை என்று எண்ணுவோரும் உண்டு. திருவள்ளுவர் அவற்றை யும் எடுத்துக்கூறித்தான் இருக்கிறார். திருக்குறள் முழுதுமே மக்கள் கடமைகளை எடுத்துக் கூறுவதால், கணவர் கடமைகளையும் கூறியதாகவே நாம் கொள்ள வேண்டும். உதாரணமாக,

"ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு."

என்ற குறளை நோக்கலாம். பெண்கள் கொலுவீற் றிருக்கக் கற்பு என்னும் கோயில் அமைத்த திருவள்ளு வர், ஆடவரை அக்கோயிலின் சிற்பிகளாகச் செய்திருக் கிறார்.

கவராத மனத்தினையுடைய மகளிர், நிறையின் வழுவாது தம்மைத்தாம் எவ்வாறு காத்துக்கொள்ள

வேண்டுமோ, அவ்வாறு ஆடவரும் நிறையின் வழுவாது தம்மைத்தாம் காத்துக்கொள்ளுதல் வேண்டும். அவ்வாறு காத்துக்கொள்ளும் மகளிரிடத்தில் உண்டாவது கற்பு, ஆடவரிடத்தில் உண்டாவது பெருமை. இந்தக் கற்பும் பெருமையும் ஒன்றையொன்று தூண்டி இயக்கி ஒளி கொடுத்து உயிர் பெறுவனவாகும். அவை இரண்டும் இல்லற வாழ்க்கையின் இருதலையும் இயங்கும் சுடர்விடு சோதிகள். அவற்றில் ஒன்று அணைந்தால் மற்றொன்றும் மங்கிவிடும். திருவள்ளுவர் உவமையும் பொருளுமாக இவ்விரு உண்மைகளையும் ஒற்றுமைப்படுத்திக்கூறும் திறன் வியக்கற்பாலது கற்பு என்னும் பெண்களுடைய திண்ணிய சுவர், ஆண்களுடைய பெருமை என்னும் கற்களைக்கொண்டு, அன்பு என்னும் சாந்தாலே அமைக்கப்படவேண்டும். அச்சுவர் சரிந்து விழுமேயானால், கல்லிலும் சாந்திலுமே ஏதோ குறையிருக்க வேண்டும்.

ஒரு வயலுக்குரியவன் தன் நிலத்தைப் பராமரிப்பது போல், கணவனும் மனைவியைக் கவனித்து வர வேண்டும். நிலத்தின் பயிருக்கு நிலத்துக்காரனை அடையாளம் தெரியும். அவன் நாள் தோறும் வந்து நான்கு எல்லைகளையும் சுற்றிப்பார்த்துப் பயிரைக் கவனித்தால், பசியபயிர்கள் செழித்து வளரும். இவனும் உரியகாலத்தில் செய்ய வேண்டிய பேணுதல்களைத் தட்டின்றிச் செய்ய முடியும். பயிர்கள் பொதி பொதியாய்க் கதிர் தள்ளி முப்போகம் பொழியும் உள்ளவன் இல்லாவிடில் ஒரு முழம் கட்டை என்பார்கள். பயிருக்கு உரியவன், தன் நிலம் எங்கிருக்கிறது, எவ்வாறு இருக்கிறது என்றே கவனியாது, கூலிக்காரரிடம் குத்தகைக்கு அடைத்து விட்டு, வீட்டில் தூங்கிக்கொண்டிருந்தால் நிலம் என்னும் நல்லாள் பலன் தரமாட்டாள். நிலத்துக்காரன் போகம் இழப்பான்.

நல்ல விளைவு தராது நிலமே கெட்டுவிடும். அந்த விதத்தில்தான் நிலம் தன் சொந்தக்காரனிடம் கோபித்துக்கொள்ளும். ஆகவே நிலத்தை உணக்குதல், எரு விடுதல், நீர் பாய்ச்சுதல், களைகட்டுதல், வரப்புத் தறித்து மிதித்தல், நீர்வடித்தல், காவல் செய்தல் முதலிய பராமரிப்புகள் அனைத்தையும் காலம் தவறுமல், நிலத்துக்குச் சொந்தக்காரன் தானே நேரில்சென்று கவனிக்கவேண்டும் தவறினுல் நிலவளம் கெட்டு விளைவு குன்றும். அதுபோல் கணவனும் மனைவியிடம் அன்புகாட்டி அவள் மனம் அறிந்து நலத்தைப்பேணுது விட்டால், மனையாளும் ஊடிவிடுவாள். எழில் நலம் வாடிவிடுவாள். கணவன் போகம் இழப்பான். வீட்டினுள்ளே என்ன நடக்கிறது என்பதையே கவனியாது வெளிக்கூடத்திலே காலம்கழிக்கும் ஆண்பிள்ளைகளும் உண்டு. இவர்களுக்கு மனைவியின் உடல்நலம் எவ்வாறு இருக்கிறது, அவள் தேவைகள் குறைகள் யாவை, அவள் வேண்டுவது யாது, உண்டாளா, உறங்கினுளா என்ற கவலையே கிடையாது; உள்ளே சென்று விசாரிக்கவும் மாட்டார்கள். இன்பவுரைகூறி அன்பு காட்டுவதற்கு அவகாசமே இருக்காது. இதனுல் மனைவியின் நிலை மாறிவிடும். கட்டுக்கிடைத் துணி போல் அவள் கசங்கிவிடுவாள். வாழ்க்கை சாரமற்று வறிதாகப் போய்விடும். அவள் உள்ளவெழுச்சியும் மனக்கொந்தளிப்பும் மங்கிவிடும்; உற்சாகம் சிறிதுமின்றி, ஓயாமல் மூலைதேடி முடங்கிக்கொள்வாள். இல்லாத நோய்கள் எல்லாம் 'இருக்கிறேம்' என்று எழுந்துவிடும். ஆடும் சரக்கு அறுபத்து நாலும் வீடு நிறைந்து இருந்தாலும் போதா. தாலிகட்டிய கணவன், அன்பு வேலியைக்கோலி ஆதரம் காட்டுவதையே அகமுடையாள்வேண்டி நிற்பாள். "நீ சாப்பிட்டாயா?" என்று அவன் ஒருவார்த்தை கேட்டால் அவள் உள்ளம்

குளிர்ந்துவிடும்; 'நீ விரும்பிய பொருள் இதோகொண்டு வந்தேன்' என்று கணவன் கொடுத்தால், அவன் தன் மேற்கொண்டுள்ள அன்பையும் நன்மதிப்பையும் அறிந்து பெருமை கொள்வாள். அவனை மகிழ்விப்பதற்குப் புதிய புதிய துறைகள் கண்டு இன்பம் ஊட்டுவாள். அவன் தன்னை மறவாது நினைவில் வைத்திருக்கிறான், அவன் மனக்கோயிலில் தனக்கு இடம் உண்டு என்ற உறுதி அவள் உயிரைத் தளிர்க்கச் செய்யும். என்றும் கணவனுடன் கொஞ்சிக் குலாவி மகிழ்வதே அவள் நெஞ்சு நிறைந்த விருப்பம். ஆகவே, கணவன் மனைவியை நேரிற்கவனித்து அன்புகாட்டுதல் இல்லறத்திற்கு இன்றியமையாது வேண்டப்படும். அது கணவனுடைய கடமை. இல்லாவிடில் மனைவி மனம் ஒடிந்து மாறிவிடுவாள்: கணவனும் போகம் இழப்பான்.

"செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்(து)
இல்லாளின் ஊடி விடும்."

இவ்வருமைத் திருக்குறளில் 'ஊடிவிடும்' என்ற முடிபின் நயம் சிந்திக்கற்பாலது. நிலத்திற்கு உரியவன் நேரிற்சென்று கவனியாது விட்டால், 'தூங்கினவன் காணி, விழித்தவன் கையில்' என்பதுபோல் பக்கத்து நிலத்தார்கள் கொஞ்சம் கொஞ்சமாய்த் தங்கள் நிலத்தோடு இவன் நிலத்தைச் சேர்த்துக் கொள்வார்கள். சோம்பியிருந்தவன் நிலம் அவனை விட்டுப்போய்விடும். அதுபோல் தலையளிசெய்யாது தளரவிட்டமனையாளும், கணவனிடம் ஊடிப்பின் விடும்; அதாவது, அவனிடம் கோபித்துக்கொண்டு பின் அவனைவிட்டு நீங்குவாள்.

இவ்வாறு மனைவிமாட்டுக்காதலுடையனாய் வாழும் கடப்பாடுடைய இல்லறத்தான் காமத்தனாய் வாழுதல் மிகப்பொல்லாது. காதல் காமமாக மாறும்பொழுது, அஃது ஆக்கம் சிதைத்து அழிவினைத் தந்துவிடும்.

காமத்தால் தன் வழியொழுகற்பாலளாய இல்லாள் வழியே தான் ஒழுகத்தொடங்கி, இம்மையும் மறுமையும் ஒருங்கே கணவன் இழந்துவிடுவான். மனைவிக்கு அன்பு செலுத்த வேண்டுமேயொழிய அடிமைப்பட்டு விடக்கூடாது. ஆதலால் திருவள்ளுவர் 'பெண்வழிச் சேறல்' என்னும் அதிகாரத்தில் பெண்ணேவல் செய் தொழுகும் பேதை இல்லற இன்பத்தை இழப்பான் என்பதை நன்கு எடுத்துக் கூறினர். இல்லறத்தான் பிறன் மனைவியை விரும்புதலும், வரைவின் மகளிர் பால் வாரம் வைத்தலும், அவன் மனையாள்பாற் கொள்ளவேண்டும் அன்பினுக்கும் ஊறுசெய்து அவனையும் அழித்துவிடுமாகையால், இக்குற்றங்களும் தன்கண் வாராமல் பாதுகாத்துக்கொள்ள வேண்டுவது அவன் கடமையாகும். இவற்றைப் 'பிறனில் விழையாமை', 'வரைவின் மகளிர்' என்ற அதிகாரங்களில் விரிவாகக் காணலாம். இவை இல்லறவியலிலே அமைந்திராவிடினும் இல்வாழ்வானுக்காகவே எழுதப் பட்டவை என்பது நன்கு உணரப்படும்.

ஒருவன் எந்த வருணத்திலே பிறந்தவனாய் இருப் பினும் தான்பிறந்த குடியின் நிலையை உயர்த்திச் செழிக்கச்செய்ய வேண்டுவது அவசியம். அதிலும் இல்லறத்தானுக்கே இதுமுதற்கடமையாகும். இதனைக் 'குடிமை', 'குடிசெயல் வகை' என்ற அதிகாரங்களில் வள்ளுவர் இனிது புகலக் காணலாம். அவ்விதம் தன் குடியை உயர்த்துவதற்காகப் பாடுபடுபவனை அவன் சுற்றத்தார் சூழ்ந்து புகழ்வதோடல்லாமல், தெய்வமும் வேட்டியை இறுக்கியிழுத்துக் கட்டிக்கொண்டுவந்து அவனுக்கு ஒத்தாசையாய் முன்னின்று உதவிபுரியும் என்கிருர் திருவள்ளுவர்.

"குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்."

இவ்விதம் வாழும் இல்லறவாழ்க்கை மேலா? அல்லது உலகப்பற்றினைவிட்டுத் துறவறம் மேற்கொள்வது மேலா? என்ற கேள்வி நெடுநாளாகக் கேட்கப்பட்டு வருகிறது. இதற்குத் திருவள்ளுவர் கூறும் விடை யாது? திருவள்ளுவர் விடையும் ஒரு கேள்வி உருவத்தில் மாறி நம்மிடம் வருகிறது. ஒருவன் பழியஞ்சினவனுய், அன்புடைமையையும், பகுத்துண்டலையும் மேற்கொண்டு இல்லறம் நடத்துவானுயின், அவன் அவ்வறத்தால் பெறமுடியாததாய்த் துறவறநெறியிற் சென்று பெறக்கூடியது வேறு யாதுளது? அவன் துறவற நெறியிற்புகுந்து பெறக்கூடியதையெல்லாம் இல்லறத்தின் வழியாகவே எளிதில் அடைந்துவிடலாம் என்பதுதான் இதன் கருத்து.

"அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ(து) எவன்?"

ஒன்றுமில்லை என்பதே இதன்விடை. இதுமட்டுமா? உலக இன்பங்களை யெல்லாம் வெறுத்து, உடலினை வருத்திப் புலன்களை விடமுயல்வார் எல்லாரையும் விட, உலக இன்பங்களை இகழாது நுகர்ந்து கொண்டே, இல்வாழ்க்கையை அதற்குரிய இயல்போடுங்கூடி நடத்துபவன் மேலானவனேயாவான் அல்லனே? இதனையும் வள்ளுவர் கூறியுள்ளார்.

"இயல்பினுன் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை."

தவவலிமையை உடையவர்களுடைய ஆற்றல், அல்லது வலிமை, அல்லது சிறப்பு யாதென்றுல், தம்மையுற்ற பசியைப் பொறுத்தல். இல்வாழ்வானுடைய ஆற்றல் அல்லது சிறப்பு யாதென்றுல், பிறர் பசியைப் போக்குதல். பிறர் பசியைப் போக்கத் தவம் செய்வோரால் இயலாது. தம் பசியைத்

தாங்குவதே அவர்களுக்குப் பெரும் பாடாய் முடியும். ஆகவே தாமும் பசித்துப் பிறர் பசியையும் போக்க மாட்டாதவர்கள் துறவிகள். இல்லறத்தாரோ என்ருல், தாமும் பசியாது, பிறர் பசியையும், ஏன், அத்துறவி களின் பசியையுங்கூட, தீர்த்து வைக்கும் ஆற்றல் பெற்றவர்கள். ஆதலால் துறவறத்தாரைவிட இல்லறத் தாரே சிறப்பு உடையவர்கள் என்பது நன்கு துணியப் படும் அல்லவா? இதனைத் திருவள்ளுவரும்,

“ ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலிற் பின்.”

என்று கூறியுள்ளார்.

ஆதலால் துறவறத்தார்களும் இல்லறத்தாரின் உதவியை நாடியே தம் நிலையையும் உயிரையும் காப்பாற்ற வேண்டியிருக்கிறது என்பது சொல்லாமலே பெறப்படும். இவ்வாறு தவம் செய்வாரையும் அவரவர்கள் நெறியிலே தயங்காது நின்று ஒழுகப் பண்ணித் தாமும் தம்முடைய அறத்தில் தவருத இல்வாழ்க்கையை உடையார் அத்துறவிகளின் நிலையைவிட மிகப்பெரியதொரு பொறுப்பைத் தாங்கி நடத்தும் பெருமையும் சிறப்பும் உடையரே யாவர்.

“ ஆற்றின் ஒழுக்கி அறன்இழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து.”

இத்தகைய காரணங்களால், இல்லறம் துறவறம் என்ற இருவகை அறத்திலும், நூல்களாலும் மற்றும் அறிந்தோராலும் அறன் என்று சிறப்பித்துச் சொல்லப் படுவது இல்லறமே என்று முடிவுகட்டுகிருர் திருவள்ளு வர். துறவறம் மனதையும் பொறிகளையும் ஒறுத் தடக்கவல்ல அருமைப்பாடுடையது. துறவற நெறி யில் பிறர் குற்றங்குறை கூருதபடி நடந்துகொள்வது மிகக்கடினம். அவ்வாறு பிறரால் பழிக்கப்படாதபடி பெரிதும் வருந்தி ஒருவகையாகத் துறவறத்தை நடத்த

முடியுமானுல், ஐம்புல இன்பங்களே ஆரத்துய்த்து எளிதில் நடத்தக்கூடிய இல்லறத்தோடு ஒருபடித்தாக வைத்து அதனே எண்ணலாம் என்கிருர் திருவள்ளுவர் :

"அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று."

இத்தகைய சிறப்புவாய்ந்த இல்வாழ்க்கையைப் பிறர் பழிப்புக்கு இடம் கொடாமல் நடத்திஞல் எவ்வளவு நன்ருக இருக்கும்!

---

# கணவனின் கடமை

பெண்ணின் பெருமையைப் பற்றியும் மனைவியின் கடமைகளைப்பற்றியும் திருக்குறளில் பலவாகக் கூறப் பட்டிருக்கிறதேயன்றிக் கணவனின் கடமையைப்பற்றி ஒன்றும் காணப்படவில்லையே என்று என்னை என் நண்பர் ஒரு நாள் கேட்டார். திருவள்ளுவர் கணவனைப் பற்றியும் கூறித்தான் இருக்கிறார். திருக்குறள் நூல் முழுவதுமே கணவனுக்கும் மனைவிக்கும் சேர்த்துத் தான் கூறப்பட்டிருக்கிறது. தனக்கினிய மனையாளை மணந்து உலகில் வாழ்வாங்கு வாழ்பவனுக்கு வைகுந்தம் என்னும் பரமபதமும் பெரிதில்லை என்கிறார் திருவள்ளுவ தேவர் :—

> " தாம் வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
> தாமரைக் கண்ணான் உலகு."

மனைவி கணவனுக்குச் செய்யும் கடமைகள் போல கணவன் மனைவிக்குச் செய்யவேண்டிய கடமைகளும் பல உண்டு. அக்கடமைகளைக் கைதவறவிட்டால் உரிமைகளையும் இழக்க வேண்டியதுதான். அவனுக் கும் சில வரம்புகள் உண்டு. அத்துமீறி அடிவைத் தால் அல்லல் வந்தடுப்பது திண்ணம். ஓர் இளைஞன் ஒரு பெண்ணை மணந்து கொள்வது என்பதைப் பலர் விளையாட்டாக நினைக்கிறார்கள். ஏதோ கடைக்குச் சென்று மிட்டாய் வாங்கி வருவதுபோல் நினைக் கிறார்கள். அப்படி வாங்கிவரும் மிட்டாயைக்கூட கவனமாகவே கையாள வேண்டியிருக்கிறது. அதிக மாகத் தின்றால் வயிற்றுக்கு நோய் செய்யும். தின்னாது வைத்துவிட்டால் கெட்டுவிடும். காவாதுவிட்டால் எறும்பு அரித்து விடும் அல்லது எலி கொண்டு போய் விடும். ஒரு மிட்டாய்க்கு இத்தனைபாடு என்றால் பெண்ணைப்பற்றி என்ன சொல்வது? ஒரு மங்கையை

மனே புகுத்துவது என்ருல் ஆயிரம் குதிரை வேக முடைய மின்சார சக்தியை வீட்டினுள்ளே விளையாட விடுவது என்பதை ஆடவன் உணர வேணடும்.

அற்பச் சங்கதி என்று கணவர்கள் விட்டுவிடும் எத்தனேயோ காரியங்கள் மனேவிமார்களுக்குப் பெரிய காரியங்களாய்த்தோன்றும். ஒரு புகழ்ச்சியுரை அல்லது ஒரு பாராட்டுச் சொல், மணத்தின் புதிதில் தாம் வாங்கிக்கொடுத்துப் பின் சலித்து மறந்துபோன ஒரு மிட்டாய் அல்லது தின்பண்டம், அன்பின் அணைப்பு அல்லது ஓர் ஆதரவுப்பேச்சு, ஒரு பிறந்தநாட் பரிசு அல்லது காதலிற் கனிந்த மொழி; ஆ! இவற்றில் ஒன்று போதுமே உடைந்த மனங்களில் உவகையைப் பாய்ச்சுவதற்கு! இவற்றைக் கணவர்கள் கவனிக்கிருர்களா? எத்தனே கணவர்கள் தம்முடைய மனேவியரின் மருண்ட பார்வையையும், நெளிந்து இருண்ட கூந்தலேயும் பாராட்ட மறந்துவிடுகிருர்கள்? அவர்கள் உடுத்தும் புடவையைக் கண்டாவது, "இது உனக்கு மிகவும் பிடித்திருக்கிறது" என்று ஒரு வார்த்தையைச் சொல்லி வைக்கக்கூடாதா? வாயைத்திறந்தால்முத்தா உதிர்ந்து விடும்? இவையெல்லாம் பெண்களுக்கு எவ்வளவு வீண் வருத்தத்தையும் கவலேயையும் உண்டுபண்ணக்கூடும் என்பதைக் கணவர்கள் எண்ணுவதேயில்லே. சிலருக்குத் தமது மனேவியைப்பற்றிக் கவனிக்கவே நேரம் இருக்காது. அல்லது அவள் எப்படியிருந்தால் என்னவென்று அக்கரை கொள்வதில்லே. அதனுல் அவளும் நமக்கு என்ன வேண்டியிருக்கிறது என்று சலித்து ஒன்றையும் கவனியாது இருந்துவிடுவாள். அதனுல் அவள் அசிங்கமாய்க் கவர்ச்சியின்றி, உடல் பருத்து உருமாறிப் போவதும் உண்டு.

புகழ்ச்சியுரை சொல்வது இருக்கட்டும், இகழ்ந்து பேசுவதையாவது நிறுத்தக்கூடாதா? நகையுள்ளும்

இன்னுது இகழ்ச்சி என்பதை மறக்கலாமா? வாயினுற் சுட்டவடு ஆறவே செய்யாதே. சிலர் தங்கள் மனைவி யின் அருமைப் பெயரைச் சொல்லி அழைப்பதற்கும் கூசுகின்றனர். சிலர் அப்படி அழைப்பது பாவம் என்று நினைக்கின்றனர். பெயர் கொண்டழைத்தால் தங்கள் பெருமை குறைந்து விடுமாம். 'ஏய்' என்றும், 'டேய்' என்றும், 'உன்னைத்தானே' என்றும், உறுமியும்' கூச்சலிட்டும், மௌனமாய் விரலை நொடித்தும் கூப்பிடு கிறார்கள். கணவன் பெயரைச் சொல்லலாகாது என்ற விரதத்தால் மனைவி மரியாதைசெலுத்துகிறுள். அவள் பெயரைக்கூருது கணவன் அவமரியாதை செய்கிறுன். இத்தகையோர் 'ஏய்! ஓய்!' என்று வண்டி ஓட்டுதல் போல் பெண்டிரை ஓட்டும் பேதையரே யாவர்.

பெண், வீட்டை விளக்கி அலங்கரிக்கிறுள். அது பெண்களுக்குள்ள ஒரு சிறந்த குணம். எதையும் சளபுளவென்று வைத்திருக்கவே அவர்களுக்குப் பிடிக்காது. எதிலும் ஓர் ஒழுங்கு, அழகு, சுத்தம் இவற்றைக் காணவே விழைவார்கள். அவர்கள் இவ் வுலகில் வாழ்க்கையை நடத்தி ஒல்லும் வகையெல்லாம் கணவனுடன் இன்பத்தை நுகர்ந்து உலகியலை நடத்து வதற்கே வந்தவர்கள். ஆடவரிற்சிலர் நடப்பதுபோல், உலகைத் துறந்து காட்டை அடைந்தும், ஓட்டை யேந்தி முகட்டைப் பார்த்தும், வீட்டை விழைந்து விண்ணினையெட்டி அண்ணுந்து பார்த்துப் புண்ணுய்க் குலைவதற்குப் பிறந்தவர்கள் இல்லை பெண்கள். ஆகவே அவர்கள் வாழும் குரம்பைக் குடிலையும் பெருக்கித் தீற்றி மினுக்கி வைப்பார்கள். மனையாள் வாசல் முற்றத்தில் சித்திரக்கோலம் நித்தமும் வரைகிறுள். அளவுகோல் இல்லை, ரப்பர் இல்லை, வட்டங்கள், வளைவு கள் கோணங்கள் எல்லாம் நூல் ஒழுங்கிலே நொடிப் பொழுதில் காட்சியளிக்கின்றன. காலை வேளையில்,

ஆடவன் படுக்கையைவிட்டு எழுந்துங்கூட இருக்க மாட்டான். எழுந்தாலும் குனியவும் நிமிரவும் அவனுலே முடியாது. குறுக்குக் கடுக்கக் குனிந்துகொண்டு குலப் பெண் கோலமிடுகிருள். எவ்வளவோ சிரமமான வேலே. கோலம் நன்ருயிருக்கிறது என்று அவன் சொல்லிவிட்டால் போதும். அவள் மனம் குளிர்ந்து விடும். சிரமம் போன இடமே தெரியாது. மறுநாள் அதைவிடவும் நன்ருகக் கோலமிடத் துணிவாள். பலருக்கு அக்கோலத்தைக் காணவே கண் இல்லாது போய்விடும். அதுகூட பரவாயில்லே. இன்னும் சிலர் அதை இகழ்ந்து கேலிசெய்யத் தலேப்படுவார்கள். "இது என்ன கோலம்? அலங்கோலம்! கோழிகிண்டின மாதிரி இருக்கிறதே" என்று கணவன்சொல்லிவிட்டால், அன்று முழுவதும் மனேயாள் சிரிக்கப் போவதில்லே. பௌர்ணமி தினத்தன்று அமாவாசையை வீட்டினுள் அழைத்தது போலாகிவிடும்.

கணவனுக்கு அறுசுவையுண்டி ஆக்கிப்போடு வதில் மனேயாளேப்போல் வேறு யாரும் அக்கறை எடுத்துக்கொள்ள முடியாது. கணவனுக்குப் பிரிய மான கறிவகைகளேத் தெரிந்துகொண்டு சமையல் செய்கிருள். தனக்கு வேண்டுவது என்று ஒன்றும் அவள் வைக்கப் போவதில்லே. கணவன் வீட்டில் இல்லாத நாளில் அடுப்புப் பற்றவைப்பதற்குக்கூட அலுத்துப்போவாள். கணவன் உண்பான் என்ருலே ஒரு தனி உற்சாகம்தான். அவள் மெல்விரல் சிவப்பப் பல்வேறு பசுங்காய்களே அரிமணேயில் திருத்திக்கொள் கிருள். அவள் திருமுகம் வியர்க்கவும் செங்கண் சிவக்கவும் அடுப்பை மூட்டுகிருள். புகைசூழ இருப்பினும் நகை முகம் மாருது சமையல் செய்கிருள். சமைத்தது ஆறிப்போகுமே என்று அன்பாய் வந்து அன்பனே அழைக்கிருள். சுவை கெடாது உணவைக்

கணவன் விரும்பி நிறைய உண்ணவேண்டும். அவன் உடல் செழிக்கச்செழிக்க வளரவேண்டும். தன் கைப் பட்டதால் கறிவகைகள் மதுரம் பொழிந்தன என்று தன் கண்ணாளன் கட்டுரைக்க வேண்டும் என்ற உணர்ச்சிகள் அவளையறியாமலே அவள் நெஞ்சில் நின்று நடனம் புரிகின்றன. அவள் வாழ்வதே அவனைத் திருப்தியளிப்பதற்குத்தான் அவள் அவ்வாறு திருப்தி பெறுவதே அவள் வாழ்க்கையின் முடிந்த பயன். உணவு மிகவும் பிடித்திருக்கிறது என்று அவன் ஒரு வார்த்தை சொல்லிவிட்டால் போதும். ஒரே மகிழ்ச்சி தான். மேல்வலியாமலும் வாய்வலியாமலும் உண்ணப் புகுகின்ற ஆண்பிள்ளை அவள் கையறிமடைமையைக் கடிந்து இகழ்ந்து குற்றம்கூறப் புகுவானேயானல் அவளுக்கு ஆத்திரம் பொங்கிக்கொண்டுவரும். ஊக்கம் குன்றி ஏக்கம் நிறைந்து ஏம்பலிப்பாள். உள்ளதும் கெட்டுவிடும். சமையல் முறையைச் சீர்திருத்த வேண்டுமானல், சொல்லும் முறையில் இதமாகச் சொல்லிப் படிப்படியாய்த் திருத்தலாம். தக்குப்புக் கென்று கணவன் தாண்டவம் ஆடினல், மனைவி திக்குமுக்காடித் திகைத்துப் போவாள். அவள் மனம் கலங்கி மதிகலங்கி உடல் குன்றிவிடும்.

தனக்கென்று ஒரு பெண்டாட்டி இருந்தால் "சொடக்" என்று ஓர் அடி அடிக்கலாம் என்ற சொல் வழக்கு நம்நாட்டில் உலாவி வருகிறது. இதைப்போல் பைத்தியக்கார நினைப்புவேறு இல்லை. கணவன் மனைவி யரிடையே கடிசொல்லும் கோபமும் இகழ்ச்சியும் ஒரு பொழுதும் எக்காரணத்தைக்கொண்டும் இடைபுகுதல் கூடாது. அவர்களிடையே இன்பமும், மென்மையும், அன்பும், ஆதரவுமே எக்காலத்தும் குதிகொண்டு இலங்கிக் கொண்டிருக்க வேண்டும். ஏறுக்குமாருகக் கணவன் கடிந்து பேசுவதுடன் அடிக்கவும் தலைப்

பட்டால், மனைவி ஆதரவிழந்த அனாதையாகிவிடு கிறாள். பாவம், அபலை! அணைத்தற்குரியவனே அடிக்கத் தலைப்பட்டால் அவளை அஞ்சல் என்பார் யார் இந்த உலகில்? அன்பு ஊறவேண்டிய இடத்தில் அச்சம் உண்டாகிறது. ஓயாத வேலையாய் அகமுடையான் இவ்வாறு அடித்துத் துன்புறுத்தினால் அவள் மனம் முறிந்துவிடும். உயிரே போய்விடும்.

"விளியுமென் இன்னுயிர் வேறல்லம் என்பார்
அளியின்மை யாற்ற நினைந்து."

மணம் எதற்காகச் செய்யப்படுகிறது என்பதை நாம் முதலில் தெரிந்துகொள்ள வேண்டும். மணமகன் நோக்கங்கள் பலவாய் இருக்கலாம். அவற்றுள் இல்லற இன்பமும் ஒன்றுதான். இருந்தாலும் வேறு நோக்கங் களாலும் உந்தப்படலாம். பெற்றோர்களின் தள்ளா முதுமையால் உதவிக்கு ஆள்வேண்டியும், சமையலுக் குத்தக்க ஆள் இல்லை என்றும், வேட்டகத்திலிருந்து பொருளுதவி கிடைக்கும் என்றுஎதிர்பார்த்தும் இப்படி யாகப்பல எண்ணங்கள்கொண்டு அவன் திருமணத்தை நாடலாம். ஆனால், மணவாட்டியின் எண்ணம் ஒன்றே ஒன்றுதான். அது பொன்னையும், பொருளையும், சேவையையும் கருதியதன்று. ஆயுள் முழுவதும் தன்னைக் கைவிடாது அன்பிற்கலந்த பிரியா இன்பம் கொடுக்கவல்ல ஒரு வாழ்க்கைத் துணைவனை அடைகிறோம் என்ற ஒரே எண்ணம்தான். கணவன் காட்டும் அன்புக்காக எப்பணியையும் அவள் செய்ய விரும்புகிறாளே ஒழிய, வேலைசெய்யும் தொண்டச்சியாக அவள் புக்ககம் நுழையவில்லை.

ஒரு வயலுக்கு உரியவன் தன் நிலத்தைப் பராமரிப்பதுபோல், கணவனும் மனைவியைக்கவனித்து வரவேண்டும். நிலத்தின் பயிருக்கு நிலத்துக்காரனை அடையாளம் தெரியும். அவன் நாள்தோறும் வந்து

நான்கெல்லைகளையும் சுற்றிப் பார்த்து பயிரைக் கவனித்தால், பச்சைப் பயிர்கள் பசுமை பூத்துத் தளிர்க்கும். இவனும் உரிய காலத்திற்செய்யவேண்டிய பேணுதல்களைத் தட்டின்றிச் செய்துவருவான். பயிர்கள் பொதிபொதியாய்க் கதிர்தள்ளி முப்போகம் பொழியும். உள்ளவன் இல்லாவிடில் ஒரு முழம் கட்டை, என்பார்கள். பயிருக்குரியவன் நிலம் எங்கிருக்கிறது, எவ்வாறு இருக்கிறது என்றே கவனியாது, கூலிக் காரரிடம் குத்தகைக்கு அடைத்துவிட்டு, வீட்டில் தூங்கிக்கொண்டிருந்தால், நிலம் என்னும் நல்லாள் பலன் தரமாட்டாள். நிலத்துக்காரன்போகம் இழப்பான். நல்ல விளைவு தராது நிலமே கெட்டுவிடும். அந்த விதத்தில்தான் நிலம் தன் சொந்தக்காரனிடம் கோபித்துக்கொள்ளும். ஆகவே நிலத்தை உணக்குதல் எரு விடுதல், நீர்பாய்ச்சுதல், களைகட்டுதல், வரப்புத்தறித்து மிதித்தல், நீர்வடித்தல், காவல் செய்தல் முதலிய பராமரிப்புகள் அனைத்தையும் காலம் தவருமல் நிலத்துக்குச் சொந்தக்காரன் தானே நேரில் சென்று கவனிக்க வேண்டும். தவறினுல் நிலவளம் கெட்டு விளைவு குன்றும். அதுபோல், கணவனும் மனைவியிடம் அன்புகாட்டி அவள்மனம் அறிந்து நலத்தைப்பேணுது விட்டால், மனையாளும் ஊடிவிடுவாள், எழில் நலம் வாடிவிடுவாள். கணவன் போகம் இழப்பான். வீட்டினுள்ளே என்ன நடக்கிறது என்பதையே கவனியாது வெளிக்கூடத்திலே காலம் கழிக்கும் ஆண் பிள்ளைகள் உண்டு. இவர்களுக்கு, மனைவியின் உடல்நலம் எவ்வாறு இருக்கிறது, அவள் தேவைகள், குறைகள் யாவை, அவள் வேண்டுவது யாது, உண்டாளா, உறங்கினுளா என்றகவலையே கிடையாது. உள்ளே சென்று விசாரிப்பதும் கிடையாது. இன்பவுரைகூறி அன்பு காட்டுவதற்கு அவகாசமே

இருக்காது. இதனால் மனைவியின் நிலை மாறிவிடும். கட்டுக்கிடைத்துணிபோல் கசங்கிவிடுவாள். வாழ்க்கை சாரமற்று வறிதாகப் போய்விடும். அவள் உள்ள வெழுச்சியும் மனக்கொந்தளிப்பும் மங்கிவிடும். உற்சாகம் சிறிதுமின்றி ஓயாமல் மூலைதேடி முடங்கிக் கொள்வாள். இல்லாத நோய்கள் எல்லாம் இருக்கிறேம் என்று எழுந்துவிடும். ஆடும் சரக்கு அறுபத்துநாலும் வீடு நிறைந்து இருந்துவிட்டாலும் போதாது. தாலிகட்டிய கணவன் அன்பு வேலியைக் கோலி ஆதரம் காட்டுவதே அகமுடையாள் வேண்டுவது. 'நீ சாப்பிட்டாயா?' என்று அவன் ஒரு வார்த்தை கேட்டால் அவள் உள்ளம் குளிர்ந்துவிடும். "நீ விரும்பிய பொருள் இதோ கொண்டு வந்தேன்" என்று கணவன் கொடுத்தால், அவனது நன்மதிப்பை அறிந்து பெருமை கொள்வாள். அவனை மகிழ்விப்பதற்குப் புதிய புதிய துறைகள் கண்டு இன்பம் ஊட்டுவாள். அவன் தன்னை மறவாது நினைப்பில் வைத்திருக்கிறான், அவன் மனக் கோயிலில் தனக்கு இடம் உண்டு என்ற உறுதி அவள் உயிரைத் தளிர்க்கச்செய்யும். என்றும் கணவனுடன் கொஞ்சிக் குலாவி மகிழ்வதே அவள் நெஞ்சு நிறைந்த விருப்பம். ஆகவே கணவன் மனைவியை நேரிற் கவனித்து அன்பு காட்டுதல் அவசியம். அது கணவனுடைய கடமை. இல்லாவிடில் மனைவி மனம் ஓடிந்து மாறிவிடுவாள். கணவனும்போகம் இழப்பான்:

"செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்
தில்லாளின் ஊடி விடும்."

இவ்வருமைத் திருக்குறளில் 'ஊடிவிடும்' என்ற முடிபின் நயம் சிந்திக்கற்பாலது. நிலத்திற்கு உரியவன் நேரிற்சென்று கவனியாதுவிட்டால், தூங்கினவன் காணி இருந்தவன் கையில் என்பதுபோல், பக்கத்து நிலத்தார்கள் கொஞ்சம் கொஞ்சமாய்த் தங்கள் நிலத்தோடு சேர்த்துக் கொள்வார்கள். சோம்பி

யிருந்தவன் நிலம் அவனைவிட்டுப் போய்விடும். அது போல், தலையளிசெய்யாது தளரவிட்ட மனையாளும், கணவனிடம் ஊடிப்பின்விடும்; அதாவது, அவனிடம் கோபித்துக்கொண்டு அவனைவிட்டு நீங்குவாள்.

இவ்வாறு, முதலிலேயே சொன்னபடி, திருவள்ளுவர் கணவனுக்குக்காட்டிக்கொடுத்த வைகுந்தம் உண்மையில் திருமாலின் பரமபதத்தைவிடச் சிறக்க வேண்டுமானால், கணவன் தன் கடமைகளைச் சரிவரச் செய்து தீரவேண்டும். கணவன் கடமையில் வழுக்கினால் வைகுந்தம், வை (=கூரிய) குந்தம் (வேல்) ஆகிக் குத்திவிடும். அல்லது, வை (= வஞ்சிக்கும்) குந்தம் (குதிரை) ஆகிக் கீழே தள்ளி விடும். அல்லது, வை (வைக்கோல்) குந்தம் (படப்பு) ஆகி எரிந்துவிடும். அல்லது, வை (வைத்த) குந்தம் (கண்நோய்) ஆகித் துன்புறுத்தும். அல்லது, வை (இட்ட) குந்தம் (கற்பாஷாணம்) ஆகிக் கொன்றுவிடும். அல்லது, வை (தனக்கென்று ஒதுக்கிவைத்த) குந்தம் (துக்கம் தரும் பொருள்) ஆகி ஓயாது தொல்லைப்படுத்தும்.

---

# அபலையா? சபலையா?

ஆங்கிலக் கவி ஷேக்ஸ்பியருக்கு எப்பொழுதும் பெண்களை ஏளனம் செய்வதுதான் வேலை. என்ன மனிதர் அவர்? பெண்மையின் உண்மையைத்தெரிந்து கொள்ளாதவர். இல்லாவிடில், "சபலமே! உன் பெயர் தான் பெண்!" ("Frailty! thy name is woman." Hamlet) என்று சொல்ல அவருக்கு வாய்வருமா? இதில் நமது திருவள்ளுவர் மிகவும் நல்லவர் என்றே எனக்குப் பட்டது. "பெண்ணிற் பெருந்தக்க யாவுள?" என்று கேட்டவர் அவர் அல்லவா? ஆனால் அவர் அதோடு நிறுத்தியிருக்கலாம். அதற்கு மேலாக, "கற்பென்னும் திண்மையுண்டாகப் பெறின்" என்று வேறு சொல்லி வைத்தார். அனுபவம் நிறைந்த என் நண்பர் ஒருவர் அதற்கு ஒரு திருத்தம்கூடக் கொண்டுவந்தது எனக்கு நினைவிருக்கிறது. அதாவது, "உண்டாகப் பெறின்" என்பது "உண்டாக்கப் பெறின்" என்றிருந்தால் நன்றாயிருந்திருக்கும் என்று அவர் சொல்வதுண்டு. ஆனால் நான் இன்னொரு குறளைப் படித்தபொழுது, வள்ளுவரிடத்தில் எனக்குச் சிறிது வருத்தமே தோன்றியது.

"இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்."

என்று ஏன் அவர் சொல்லவேண்டும்? "எல்லாம் தெரிந்தவர், உலகியல் அறிவின் உச்சத்தில் நின்று ஒளி விடுகின்ற உத்தமப் பெரியார், பெண்களின் மணியாய்ப் பெரும் புகழையெல்லாம் வாரித் தனதாக்கிக் கொண்ட வாசுகியம்மையாரை வரித்த மணவாளர், அத்தகையவர் இப்படியும் பெண் உலகைப் பழி கூறலாமா?" என்று ஒரு நாள் என் நண்பர் என்னிடம் நொந்துகொண்டார்.

ஆனுல் பலரும் இங்கு மகளிர் என்றது பொருட் பெண்டிரையே குறித்ததாகக் கொள்வர். நான் இதைக் கூறியதும் என் நண்பர் பேரிரைச்சலுடன் பேசத் தொடங்கினுர்: "ஏன் இப்படிப் பூசி மெழுகப் பார்க்கிறீர்கள்? அதுவெல்லாம் இல்லவே இல்லே. வள்ளுவர் இதில் மகளிரைப் பொதுவாகக் குறித்தாரேயன்றிப் பொதுமகளிரைத்தாம் குறித்தார் எனல் பொருந்தாது. 'பொது மகளிர் என்னுது மகளிர் எனப் பொதுவகையால் கூறியது குல மகளிரும் குணம் கெடுதல்கூடும் என்பது குறிப்பு என்று அறிக' என்று உரையாசிரியர் காளிங்கர் விளக்கியுள்ளார். பரிமேலழகரே என்ன கூறுகிருர் தெரியுமா? "தமக்குற்ருர் போன்று உருதாரோடு உளதாய நட்பு, இடம்பெற்ருல் பெண்பாலார் மனம் போல வேறுபடும்" என்று கூறியதோடு அமையாது, வளேயாபதி என்னும் நூலிலிருந்து ஒரு மேற்கோளே எடுத்துக்காட்டி இவ்வுண்மையை வலியுறுத்துகிருர். 'பெண் மனம் பேதின்று ஒருப்படுப்பேன் என்னும் எண்ணி லொருவன்' என்று வளேயாபதி கூறுகிறது. பெண்களுக்குப் பேதைப் புத்தி அல்லது சபலம் என்பது கிடையாது என்பவன் அறிவில்லாதவனும்" என்று என் நண்பர் பேசிக்கொண்டே போனுர்.

நான் என் நண்பருக்குப் பின்வருமாறு சமாதானம் கூறினேன்:

"திருவள்ளுவரைப் போல் பெண்களுக்கு உயர்விடம் கொடுத்துச் சிறப்பித்தவர்கள் வேறுயாரும் இல்லே. தாங்கள் திருக்குறளே நன்கு உணர்ந்து சுவைக்க வேண்டுமானுல், உரையாசிரியர்கள் கூறுவதைமட்டும் கொண்டு, தங்கள் சிந்தனே, அறிவு, அனுபவங்களேப் பயன்படுத்தாமல் இருந்துவிடக் கூடாது. தமிழ்ப்புலவர்கள் பலர் வள்ளுவர் குறள்களிற்

பலவற்றைத்தங்கள் நூல்களிலே எடுத்து வழங்கி, வளம் மிக்க விளக்கவுரைகளும் கண்டுள்ளார்கள். அவற்றையும் தாங்கள்கருத்தில் இருத்துதல்வேண்டும். தமிழ்மொழிக்குக் கதி என்று சொல்லக்கூடியவர்கள் கம்பரும் திருவள்ளுவரும். கம்பர் தமது மாபெருங் காப்பியத்திலே தொட்ட தொட்ட இடமெல்லாம் திருக்குறளையும், குறளின் கருத்துக்களையும் பொதிய வைத்துப் பொன்னில் அழுத்திய அரதனம்போல் அழகு செய்திருக்கிறுர். திருக்குறளுக்கு ஒரு பாஷ்யம் வகுத்தது போல் சில இடங்களில் விளக்கங்கள் கொடுத் திருக்கிறுர். அவை போன்றவைகளையும் தாங்கள் சிந்தித்துக் குறளைப்பற்றிப் பேசவேண்டும்'' என்றேன்.

''அப்படியென்ருல் 'மகளிர் மனம்போல வேறுபடும்' என்பதைப்பற்றிக் கம்பர் ஏதாவதுசொல்லியிருக்கிருரா? என்று கேட்டார் என் நண்பர்.

''ஆம். மகளிர் என்பது இங்கே விலைமாதரைத்தாம் குறிக்கும் என்று கம்பர் கருதுகின்ருர்'' என்றேன்.

''கம்பர் பெயரைச் சொன்னுல் நான் கலங்கி விடுவேனு? எங்கே கூறியிக்கிருர்? எப்படிக் கூறி யிருக்கிருர்? சொல்லும்'' என்ருர் என் நண்பர்.

''தங்களைக் கலங்கச் செய்வதற்காக நான் கம்பரை யெடுத்துக் கூறவில்லை. கலக்கம் தீர்ப்பதற்காகவே கூறுகிறேன். கேளுங்கள்! பொன்மானைத் தொடர்ந்து பொன்மார்பனுன இராமன் போனுன். அவன் குதித்தெழுந்த கடுவேகத்தை எப்படிக் கணிப்பது! வாமனுவதாரத்தில் மூன்று உலகத்தையும் நின்றெடுத் தளந்த திருவடியை நீட்டினுன். மீட்டும் அடியெடுத்து வைப்பதற்கு வேறு அண்டங்கள் இருந்தால் அல்லவோ சொல்லலாம்! இராமனே இறைவன் ஆதலால், எங்கும்

நீக்கமற நிறைந்திருக்கின்ற தனது தன்மையைச் சிறிது காட்டினுன். மானே முன்னும் பின்னும் போகவிடாது மறித்து மடக்கினுன். ஆனுல் மான் என்ன செய்தது? அது மாயமான் ஆதலால், மலேயின் சிகரங்களுக்குத் தாவியது. அங்கிருந்து மேக மண்டலங்களிடைக் குதித்தது. அதைத் தொடர்ந்து சென்ருல், ஓடி மறைந்துவிடும். சரி, சனியன் தொலேந்தது என்று தொடராது நின்ருல், கிட்டத்தில் வந்து எட்டிப் பிடித்து விடலாம் போல், வாலே ஆட்டும். பதுங்குவதுபோல் பாய்ந்துவிடும். ஒதுங்குவதுபோல் ஓடிவிடும். நிற்கிறது போலவேயிருக்கும், நீட்டிவிடும் கம்பியை. இவ்வாறு இராமனே எய்க்க இளேக்க இழுத்துத் திணற அடித்துவிட்டது அந்த மான். அதன் தன்மை எதுபோல் இருந்த தென்ருல், மகளிர் மனம் போல இருந்தது என்றுதான் சொல்ல வேண்டும். எந்த மகளிர்? விலேமகளிர். பரத்தர் கொடுக்கும் பணத்தின் அளவுக்கு ஏற்பப் பரத்தையர் தங்கள் அன்பைக் காட்டுவர். பணம் மிகுந்திடில் மிகுத்தும், சுருங்கிடில் சுருக்கியும் தங்கள் அன்பைக் காட்டுவார்கள் கணிகையர். வேசையர் தங்கள் நேசத்தைக் கொடுப்பது போல நீட்டுவார்களேயன்றிக் கொடுக்கவும் செய்யார் கள். அழகு கூட்டி அன்பு காட்டி ஆசைமூட்டி அகத்தை வாட்டி அழிவின் எல்லேக்கே ஓட்டிவிடு வார்கள். அவர்கள் மனத்தை அளக்க யாராலும் முடியாது. அவர்கள் அகத்தினுள்ளே அந்தராத்மாவாக இருக்கும் ஆண்டவனுக்குக்கூட அவர்கள் மனநிலே இன்னது என்று தெரிய முடியாது. ஒரு நிலேயில்லாத் திரி நிலேயுடைய பதியிலாரின் பாழ்மனம் மாயமானின் செலவுக்குப் பொருத்தமான உவமையாயிற்று. 'மகளிர் மனம்போல வேறுபடும்' என்ற குறளடியை மனத்தில் கொண்டே கல்வியிற் பெரிய கம்பர், இவ்வுபமேய

முகத்தால், அக் குறளடியை விளக்கினுர். இந்தப் பாடல்களேயும் பாருங்கள் :—

"நீட்டிஞன் உலக மூன்றும் நின்றெடுத் தளந்த பாதம்
மீட்டும் நாம் உரைத்தற் கம்மா வேறுமோர் அண்டம் உண்டோ
ஓட்டிஞன் தொடர்ந்த தன்னை ஒழிவற நிறைந்த தன்மை
காட்டிஞன் அன்றி அன்று அக்கடுமையார் கணிக்கற் பாலார்."

"குன்றிடை யிவரும் மேகக் குழுவிடைக் குதிக்குங்கூடச்
சென்றிடின் அகலுந் தாழில் தீண்டலாந் தகைமைத் தாகும்
நின்றதே போல நீங்கும் நிதிவழி நேயம் நீட்டும்
மன்றலங் கோதை மாதர் மனம் எனப் போயிற்றம்மா."

"குலமகளிர் உட்பட எல்லா மகளிர் மனமும் வேறுபடுவதாயிருந்தால், 'நிதிவழி நேயநீட்டு மன்றலங்கோதை மாதர் மனம்' என்று பொருட் பெண்டிரைச் சுட்டிக் கம்பர் பாடியிருக்கமாட்டார். அந்தக் குறளுக்கு ஏற்படக்கூடும் ஐயத்தைக் களேய வேண்டியே கம்பர் இவ்வித விளக்கம் கொடுத்தார். இல்லாவிடில் யாதொரு அடையும் இன்றி மகளிர் மனம் அல்லது மாதர் மனம் என்றே பாடியிருப்பார். பரிதியார் உரையிலும் இருமனப் பெண்டிரின் மனம் என்றே இக் குறளுக்கு விளக்கம் தரப்பட்டிருக்கிறது. இப்பொழுது தங்கள் ஐயம் தீர்ந்ததா?" என்றேன்.

"நீங்கள் ஏதோ சொல்கிறீர்கள். இன்னும் சிலர் வேறுவிதமாய்ச் சொல்கிறுர்கள். மகளிர் மனம் தம் கணவரைத் தம் வயப்படுத்துவதிலேயே நாட்டமாய் இருக்கும். யானேயைப் போலவே குறி பார்த்திருந்து, சீர்த்த இடத்திலே மகளிர் ஆடவரைத் தம் வழி யொழுகும்படிச் செய்துவிடுவார்கள். அங்ஙனம் செய்வதனுல், குலமகளிர் கற்புக்கும் ஒரு பழுது வராது. ஏனெனில், தம் கணவரைத் தம் வழியொழுகச் செய்வது ஆடவரை நல் வழிப்படுத்துவதற்கேயாகும் என்கிறுர்கள். என்ன விசித்திரமான தத்துவ விளக்கம் பார்த்தீர்களா? பேதைப் பெண்கள் மேதை ஆடவரை

எப்படி நல்வழிப்படுத்துவார்களோ, தெரியவில்லை. பெண்வழிச் சேறலை எதிர்த்துத் திருவள்ளுவர் பத்துக் குறள் பாடியிருக்கிறார். படித்துப் பாரும்." என்று சொல்லிக் கொண்டே நண்பர் நகர்ந்து விட்டார்.

இவ்வாறு பெரியோர்கள் பேதைமை என்பதை மாதர்களுக்கு ஓர் அணிகலமாகவே சூட்டி மகிழ்ந்தனர். எண்ணறக்கற்று எழுத்தறப் படித்தாலும் பெண்ணறிவென்பது பெரும் பேதைமைத்தே என்று பறை சாற்றுகின்றனர். பெண் புத்தி பின்புத்தி என்று முன் புத்தியாய் மொழிகிறது ஆண் புத்தி. யோசிக்கும் வேளையில் இரு புத்தியும் ஒரு புத்தியாகத்தான் நமக்குப் படும்.

ஆனால் ஒரு நல்ல, அரிய செய்தியை நாம் மனம் பற்ற வேண்டியது அவசியம். பெண்கள் கொலு வீற்றிருக்கக் கற்பு என்னும் கோயில் அமைத்த திருவள்ளுவர், ஆண்களை அக்கோயிலின் சிற்பிகளாகச் செய்திருக்கிறார்.

"ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு."

என்ற பொய்யா மொழியை உற்று நோக்குக. கவராத மனத்தினையுடைய மகளிர் நிறையின் வழுவாது தம்மைத்தாம் எவ்வாறு காத்துக்கொள்ள வேண்டுமோ, அதுபோல், ஆடவரும் நிறையின் வழுவாது தம்மைத் தாம் காத்துக்கொள்ளுதல் வேண்டும். அதற்கு மனம் மொழி மெய்களை ஒடுக்குதல் வேண்டும். அவ்விதம் காத்துக்கொள்ளும் மகளிரிடத்தில் உண்டாவது கற்பு. ஆடவரிடத்தில் உண்டாவது பெருமை. இந்தக் கற்பும் பெருமையும் ஒன்றையொன்று தூண்டி, இயக்கி, ஒளி கொடுத்து உயிர் பெறுவனவாகும். அவை இரண்டும் இல்லற வாழ்க்கையின் இருதலையும் விளங்கும் சுடர்விடு

சோதிகள். அவற்றில் ஒன்றுஅணைந்தால், மற்றொன்றும் மங்கிவிடும். திருவள்ளுவர் உவமையும் பொருளுமாக இவ்விரு உண்மைகளையும் ஒற்றுமைப்படுத்திக் கூறும் திறன் வியக்கற்பாலதேயாம். இவ்வுண்மையை ஓராது பெண்களைமட்டும் பழி தூற்றிக் கொண்டிருப்பதால் பயன் இல்லை.

சபலை சபலையென்று பெண்களை அபலைகளாக ஆக்குவது அறிவின் செயலாகுமா? ஆண்மையின் அழகாகுமா? உண்மையில் பெண்கள் அப்படிச் சபலம் படைத்தவர்கள் தாமா? அவர்கள் புத்தி மாறிக் கொண்டேதான் இருக்குமா? அவர்கள் மனம், என்ன, பாதரசமா? அவ்விதமாயின் அதற்குக் காரணம் ஆடவரே தாமன்றோ? மனம் என்பது ஒன்றேதான். மகளிர் மனம் என்றும் ஆடவர் மனம் என்றும் வேறு வேறு கிடையாது.

"மஞ்சர்க்கு மாதரார்க்கு மனம்மென்ப தொன்றேயன்றோ"

என்பது கம்பநாடரின் கவின்மொழி. தோகைக்கும் தோன்றற்கும் இன்ப துன்பங்கள் ஒன்றாகவே வரும். கற்பு என்ற பெண்களுடைய திண்ணிய சுவர் ஆண்களுடைய பெருமை என்னும் கற்களைக்கொண்டு அன்பென்னும் சாந்தாலே அமைக்கப்பட வேண்டும். அச்சுவர் சரிந்து விழுமேயானால் கல்லிலும் சாந்திலும் தாம் ஏதோ குறையிருக்க வேண்டும். ஆண் மகன் சபலன் ஆனால், பெண் மகள் சபலைதான்.

---

## மனைவி

பெண்ணுவாள் தெய்வப் பிறவியில்லை. மனிதப் பிறவிதான். உலகமே இன்னதென்று அறியாதபேதை. பெற்றோர், உற்றோர், ஊரார், சமூகம், சமயம், மரபு என்னும் கட்டுப்பாடுகளுக்கு அடங்கித் தனக்கென ஓர் உரிமையுமின்றி வளர்ந்தவள். அச்சத்தால் அடங்கி, நாணத்தால் நலிந்து, மெல்லென்ற உடலுடன் வளர்ந்தவள். அவள் தவறுகள் செய்வது இயல்பே. அவற்றைத் தாங்கிக் காப்பது ஆடவன் கடன். நயத்தாலும், இதத்தாலும் அவளை நல்வழிப்படுத்த வேண்டியது நாயகனின் பொறுப்பு. "கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன்" என்று நம் நாட்டு மங்கையர் பக்தி செலுத்துவது உண்மைதான். ஆயினும் ஓர் ஆடவனும், பெண்ணும் முதலில் கண்டு பழகும்போதே அத்தகைய பக்தி தோன்றிவிடாது. அன்புகூட நாளடைவிலேதான் தோற்றம் செய்யும். மலரைப் பூ என்கிறோம். பூ என்ற சொல்லில் உள்ள வன்மை அன்பு என்பதில் இல்லை. ஆகவே அன்பு பூவைவிடவும் மெல்லிது. இத்தகைய மெல்லிய பொருள் மிகச் சிலருக்கே சித்திக்கும் என்கிறார் திருவள்ளுவர் :—

"மலரினு மெல்லிது காமம் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்."

முதலில் உருவழகு, உறுப்பழகுகளால் ஏற்படும் காமக் குறிப்புதான் காணப்படும். அதுவே இயற்கையின் நியதி. ஊசி காந்தத்தைக் கண்டணுகல் போல, தோற்றப் பொலிவால் பிறக்கும் கவர்ச்சியே ஆணையும், பெண்ணையும் முதலில் இழுத்துச் சேர்த்து வைக்கிறது. பின்னர் உணர்ச்சி வயப்பட்டு, ஒருவரையின்றி ஒருவர் இருத்தல் முடியாது என்னும் நிலையில் ஒத்துப்பழகி அன்பு காட்டி ஒன்றுபடும் வாழ்க்கையிலே,

காதலின் கனிரசம் மழையாய்ப்பொழிகிறது. மடவாளின் கற்பு முல்லை மாண்புறக் கொழுந்துவிட்டு வளர்கிறது. கணவனும் பெருமை அடைகிறுன். இவ்வாறு சதிபதிகள் கூடியே விலங்குத்தனமாய் வெளிப்படும் காமத்தைத் தெய்வீகக் காதலாய்த் திகழச் செய்ய வேண்டும்.

அப்பொழுது எழுமையும் தொடர்வதோர் உழுவலன்பு எழுகிறது. பிரிவாரே என்று கலங்கிய மனைவிக்குக் கணவன் "இந்தப் பிறப்பிலே பிரிய மாட்டேன்" என்ருன். அங்ஙனமாயின் மறுபிறப்பில் பிரிவாரே என்று மனைவி அழத்தொடங்கிவிட்டாள்:—

> "இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனக்
> கண்ணிறை நீர்கொண் டனள்."

இத்தகைய உழுவலன்புத் தொடர்பு என்றும் அருது, பிறவிதொறும் சென்று சென்று இணைந்து நிற்கும். இம்மைப் பிறப்பிலன்றி மறுமைப் பிறப்பிலும் கணவன் கணவனுகவும், மனைவி மனைவியாகவும் இருக்க வேண்டும் என்று உண்மைக் காதலர் விழைவர். இதற்குக் கணவனும் மனைவியும் கைகலந்து, மெய் கலந்து, உள்ளங் கலந்து வாழவேண்டும், ஒருவர் மட்டும் காதலித்துப்பயன் இல்லை. அது துன்பமாகவே முடியும்:—

> "ஒருதலையா னின்னது காமங்காப் போல
> இருதலை யானு மினிது."

பலர் தமது மனைவியரிடத்துள்ள அழகையும் கவர்ச்சியையும் கண்டு அவர்களிடம் புகழ்ந்து கூறுவதில்லை. வேறு பெண்களிடத்துள்ள அழகுதான் அவர்களுக்குப் புலனுகிக் கொண்டிருக்கும். இன்னும் சிலர் இரதிபோல் இலங்கும் மனைவியை 'ஏ அவலட்சணமே' என்று அழைப்பதில் ஓர் இன்பம் இருப்பதாக நினைக்கின்றனர். அந்தச் சொல் அவள் உள்ளத்தை எவ்வாறு சுட்டறுக்கும் தெரியுமா? அஃது

அவளைக் கேட்டால் அல்லவோ தெரியும்? இவ்வாறு கணவன் சொல்லிச் சொல்லியே ஓர் இலட்சணமான பெண் உண்மையில் அவலட்சணமாக மாறிவிட்டாள். ஏனெனில், கணவனுடைய அன்பில்லாத செயல்களும் கொடுஞ் சொற்களும் அவள் உள்ளத்தை உடைத்து மனவெழுச்சியை மாய்த்துவிட்டன.

"பெறினென்னும் பெற்றக்கா லென்னு முறினென்னும்
உள்ளம் உடைந்துக்கக் கால்."

எவனொருவன் தன் மனைவியின் தோற்றப் பொலிவிலும், ஆடை அணிகளிலும் கவலை எடுத்துக் கொள்கிறானோ, அவன் அவளை இளமையுடனும் கட்டுடனும் நெடுநாள் வைத்து இன்புறுவான். அவளுக்குத் தன்னை அறியாமலே ஒரு பெருமையும் பூரிப்பும் ஏற்பட்டுவிடும். ஏனெனில், தன் நலங்களைக் கவனித்து ஆவன செய்து ஆதரவளிப்பதற்கு ஓர் ஆடவன் இருக்கிறான். அவன் தன்னிடத்தில் பெருமையும் பூரிப்பும் கொள்கிறான் என்னும் உணர்ச்சி அவளுக்கு ஊறுகிறது. அத்தகைய உணர்ச்சிதான் ஒரு பெண்ணுக்கு உயிர். தன் கணவனுக்காக வேண்டி ஆனமட்டும் அவள் தன்னை மேன்மைப்படுத்திக் கொள்வாள். ஆனால் கண்ணிருந்தும் காணாக் கணவனாயிருந்துவிட்டால், அவள் தன்னை என்ன அழகுபடுத்தித் தான் என் செய்ய? சிலருக்கு மோகம் முப்பது நாள், ஆசை அறுபது நாள் என்று அலுப்புத்தட்டிவிடுகிறது. மணம்செய்த சில ஆண்டுகளுக்குள் மணமக்களிடையே நிகழவேண்டிய உற்சாகமும் குதூகலிப்பும் குறைந்து விடும். நெருங்கிப்பழகும் இயல்புமாறி, நெடுந்தொலை விடுதலை என்று ஆகிவிடும். இதைப்பெண் ஒருநாளும் விரும்பமாட்டாள். கணவன் காதலில் குன்றுவதைக் கண்டால்,

"நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை."

என்று நலிந்து மெலிந்து சலித்துப்போவாள்.

பெண் ஓர் உணர்ச்சியற்ற மரக்கட்டை, சமையற்காரி, வீட்டைப் பேணும் வேலைக்காரி, பிள்ளையை வளர்க்கும் ஒரு சள்ளை இயந்திரம் என்று கணவன் கருதுதல் தீது. சிலர் மனைவியரிடத்தில் எப்பொழுதும் கடுகடுத்த முகமும் சுடுசுடுத்த சொல்லுமாய்ச் சீறிச் சீறி விழுவர். அன்பு விளைய வேண்டிய இடத்தில் கொடுமை பொங்கிக் கொதிப்பதையும் சகித்துக் கொண்டு ஒரு பெண் உயிர் வாழ்வதாயிருந்தால் அது மிகக் கடினம்தான் என்கிறார் திருவள்ளுவரும் :—

"வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கண ரில்."

மீளா அடிமையாய் வந்து வாழ்க்கைப் பட்டவள் மனைவி. அவனது வாழ்க்கைத் துணைவி. காதலோடு கணவனைக் கைப்பிடித்தவள். அவன் காரியம் யாவினும் கை கொடுப்பவள். நலந்தீங்கிலும் சரி பங்கு கொள்பவள். அவளோடு அவன் பழகப் பழக, அவன் நினைத்ததெல்லாம் உடனுக்குடன் கைகூடுவது போன்ற இன்பம் பிறக்கும்.

"வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள்."

நவ நவமான உணர்ச்சி அலைகள் பின்னியெழும். உவகையின் ஊற்று வெள்ளமாய்ப் பொங்கும். அவளை அறியஅறிய இன்னும் அறிய வேண்டும் என்ற ஆர்வம் தோன்றி நிற்கும். புதிதான மகிழ்ச்சியின் சாயைகள் வாழ்நாள் நெடுகிலும் வட்டமிட்டு ஓடிவரும் :—

"அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு."

நெடுநாள் இல்லறஇன்பத்தை இடையீடின்றி அடைய விரும்புகிறவன் தன் இதயத் தலைநகரின் அரியணைமீது அவளுக்கு உயர்விடம் கொடுத்துவிட-

வேண்டும். அவளுக்குத் தெரியாத இரகசியங்கள் அவன் அகத்தில் ஒளித்தல் கூடாது. அவள் பேச்சிலும் இன்பம், மூச்சிலும் இன்பம், நடையிலும் உடையிலும் இன்பம், உடல் நெளிப்பிலும் முகக் களிப்பிலும் இன்பம், அவள் பார்வையிலும் சீர்மையிலும் இன்பம், அவள் ஊடலும் கூடலும் இன்பம், ஒரே இன்பமயம்.

"ஊடலுணர்தல் புணர்தல் இவை காமங்
கூடியார் பெற்ற பயன்."

மனைவி கணவனின் மனக்கவலையை மாற்றும் மதனரஞ்சனி, அமுதசுரபி, காமதேனு, கற்பக தரு, தனது ஆருயிர் என்பதை ஆடவன் அறிந்து வாழ்க்கை முழுதும் வளம்பெற இன்பம் பெருக்கி வாழலாம். அவளது மேனி தொட்ட தொட்ட இடமெல்லாம் அமுத ஊற்று. கணவன் உயிரைத்தளிர்க்கச்செய்து செழிப் பூட்டும் தேவாமிர்தம் மனைவி.

"உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள்."

தன் வாழ்க்கைத் துணைவி மேற் செய்யத்தகும் அன்பினை ஒருவன் சரிவரக் கடைப்பிடித்து ஒழுகலே இல்வாழ்க்கையின் பண்பாகும். தமக்குள்ளதைப் பிறர்க்கும் பகுத்துண்டலே நாம் இவ்வுலகில் செய்யக் கூடிய அறமாவது. அத்தகைய அறமே இல் வாழ்க்கையின் பயன் என்கிருர் திருவள்ளுவர். கணவனும் இல்லாளும்நெஞ்சொத்தவர்களாய் வாழ்ந்து தாம் இந்தப் பண்பையும் பயனையும் எய்தல் வேண்டும்.

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது."

இவ்வாறு மனைவிபால் அன்புடையனுய் ஒருவன், பழியஞ்சிப் பகுத்துண்டலையும் மேற்கொண்டு அறத் தின் வழியே தன் வாழ்க்கையைச் செலுத்துவானுயின் அவன் துறவியையும் மிக்கதோர் அறவியான் ஆகின்

ருன். தானும் பசித்துப் பிறர் பசியையும் போக்க மாட்டாத துறவறத்தானைவிட, தானும் நன்கு உண்டு பிறர் பசியையும் களைபவன் சிறந்தவனுவதில் என்ன தடை?

"அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ (து) எவன்."

கணவன் அன்பைப் பெருமையால் விருந்தெதிர் கோடலை இழந்து வருந்திய கண்ணகியின் துயரை அறியாதார் இல்லை. மனமொத்த மனையாளிடம் துய்க்கும் இன்பத்திற்கு வைகுந்த இன்பமும் நிகரில்லை என்று கூறிய திருவள்ளுவர், வேறு பொருத்தமான தோர் உவமையைக் கூறி அவ்வின்பத்தை விளக்க முயன்ருர். கடைசியில் வேறு ஒன்றும் கிடையாமை யால், இல்வாழ்க்கையின் பண்பினுல் அடையும் இன்பத் திற்கு அதன் பயனுல் அடையும் இன்பமே ஒப்பானது என்று கூறி முடித்தார் :—

"தம்இல் இருந்து தமதுபாத் துண்டற்ருல்
அம்மா அரிவை முயக்கு."

---

# பெண்மையின் உண்மை

"வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை சாதல்
அதற்கன்னள் நீங்கும் இடத்து."

காதல் என்பது பெண்களுக்கு இன்றியமையாத தொரு தத்துவம். ஒன்று காதல் அல்லது சாதல் என்பது அவர்களுக்கே பொருந்தும். ஆடவர்களுக்குக் கூட அது அவ்வளவாக இல்லை. ஆண் மகனுக்கு வெளியில் எவ்வளவோவேலை இருக்கிறது. அவனுடைய தொழிலைப் பார்க்கவேண்டும். நிலுவைகளைப் பிரிக்க வேண்டும்; பிறருக்குத் தான் கடமைப்பட்டு ஏற்றுக் கொண்ட காரியங்களை முடித்துக் கொடுக்க வேண்டும். சோற்றுப் பாட்டுக்கு வழிதேட வேண்டும். இப்படி அவனுக்கு எத்தனையோ கவலைகள் இருக்கும். ஆனால் மனையில் அடங்கி வீட்டு வேலைசெய்யும் பெண்ணுக்கோ ஒரே கவலைதான். அது அவளுடைய கணவன், குழந்தைகள், இல்வாழ்க்கை. அவள் செய்யும் ஒவ்வொரு சிறு வேலையும் காதலுக்காக அவள் புரியும் அன்புத் தொண்டு. அது கூறாமலே அவள் செலுத்தும் காதலின் காணிக்கை, அன்பின் அர்ப்பணம், பதியின் வழிபாடு. ஒரு பெண்ணின் பெறுதற்கரிய மானிடப் பிறவியில் கிடைத்தற்கு அரிதாயிருப்பவன் கணவன் ஒருவனேயாகும். அவன்தான் பெண்ணுக்கு அன்பும் ஆதரவும் அளிக்கவேண்டும். அவன் திருச்சன்னிதியில் அவளுக்கு வேறு ஒளிப்பும் இல்லை, மறைப்பும் இல்லை. தனது நாணத்தையும் கைவிட்டு அவள் அவனையே நோக்கி நிற்கிறாள். அவன் முன்னிலையில் அவளுக்கு யாதொரு மூடுமறைப்பும் கிடையாது. அகமும் புறமும் திறந்த காட்சி, அழுக்கற்ற மனம், இழுக்கற்ற நடை, அன்பு ததும்பும் கண்கள், அமுதம் நிறைந்த செவ்வாயில் அகத்தைக் குழைவிக்கும் ஆர்வமொழி

இன்னுரைகள்; தன் துயர்காணுள், தன்னலமற்ருள். தலைவன் தாளேயே தலைப்பட்டுக் கிடக்கிருள்.

"பொன்னருங் கலனுந் தூசும் புறத்துள துறத்தல் வம்போ
நன்னுத லொருத்தி தன்பா லகத்துள நாணு நீத்தாள்
உன்னருந் துறவுபூண்ட வுரனுடை யொருவனே போல்
தன்னையுந் துறக்குந் தன்மை காமத்தே தங்கிற்றன்றே."

இறைவன் திரு முன்னர் ஆன்மா இந்நிலை அடைவதற்கு எத்தனையோ பிறவி எடுத்துழலவேண்டி யிருக்கிறது. அதனை ஒரு பெண் தன் இளமைப் பருவத்திலேயே எளிதாக எய்திவிடுகிருள். ஆனுல் அவளுடைய பக்திப்பெருக்கு கடவுளிடத்திற்பாயாது, இங்குக் கணவனிடத்தில் வளேந்து கிடக்கிறது.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றெழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை."

இவ்வாறு பெண்மை வளேந்து தழுவுவது ஆண்மைக்கு ஒரு தனி எழிலேயும் ஏற்றத்தையும் ஊட்டுகிறது. அவ்வாண்மையை ஆளும் தலைமகன் கண்மூடித்தனமாய் இருந்துவிடக்கூடாது. பள்ளத்தில் இழிபுனல்போல் தன்மாட்டுப் பரந்துவரும் பெண்மை யினைத்தான் பொருட்படுத்தாது உதறிவிடலாகாது. கடவுட் கற்புடைய ஒரு மாதைத் தேவர்களும் பாராட்டித் தொழுவர் என்பது உண்மைதான். அவள் ஏனைக் கற்புடைய மகளிராலும் நன்கு மதிக்கப்படுவாள். அங்ஙனமிருப்பினும் தான் விரும்பும் கணவனுல் அவள் விரும்பப்படாது போனுல், அவளேத் தீவினையாட்டி என்று தான் சொல்லவேண்டும். கற்புடை மனைவியா யிருந்தும் கணவனுல் விரும்பப்படாது போனுல், ஏனையோருடைய நன்கு மதிப்பால் யாதொரு பயனும் இல்லாது போய்விடுகிறது. கண்ணகியின் வாழ்க்கை பாழ்பட்டு அழிந்ததை யாவரும் அறிவர். அத்தகைய கற்புடைப் பெண்டிரின் நல்வினை யின்மைக்குத் திருவள்ளுவரும் வருந்துகிருர்.

"விழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின்."

மனையாள் செய்யும் ஒவ்வொரு காரியமும் தன் மணவாளன் மனதில் மகிழ்ச்சியைப் பெருக்கி அவனால் நன்மதிப்பைப் பெறுவதற்கேயாகும். தன் கணவனின் நன்மதிப்பே தனக்கு இவ்வுலகில் வேண்டுவது என்று ஒவ்வொரு பெண்ணும் நம்புகிறாள்; அதற்காகப்பெரும் பாடுபடுகிறாள். இவ்வுலகிற் காணப்படும் கோடானு கோடி மக்களிடையே தனக்குக் கிடைப்பது ஒரே கணவன். அவன் ஒருவனே தான் தெரிந்து பழகுதற்குரிய ஆண்மையுடையவன். ஆண்மையைத் தழுவியே பெண்மை இவ்வுலகிற் சிறக்கவேண்டி யிருக்கிறது. அதுவே இயற்கையின் நியதி. கணவனை இழந்தோர்க்கு வேறு காட்டுவதற்கு யாரும் இல்லை. அவனே அவளுக்குத்தஞ்சம். அவனையின்றி அவளுக்கு உய்வில்லை. கொஞ்சிக்கூடி மகிழ்வதற்கு வாய்த்த வாழ்க்கைத்துணைவன் அவன் ஒருவனே. அவனே பேசிப் பறைந்து பண்பாடவும், உறவாடியுற்று ஊடாடவும் கைக்குக் கிடைத்த கண்கண்ட தெய்வம். அதனால் நாள் முழுதும் அவன் நகை முகம் காணவே நங்கை நயந்து நிற்பாள். செய்தற்கரிய தியாகம் செய்தவள் மனைவி. தன்னை வளர்த்த பெற்றோரைத் துறந்தவள். தன் இளமை நலம் தவழ்ந்த இன்பச்சூழல் வளத்தையெல்லாம் மறந்தவள். தன் நலமும் கெட்டு இன்னார் மனைவி என்ற புதுப்பெயரும் பூண்டவள். அன்பே உள்ளத்தேந்தி, ஆர்வம் முகத்தில் தேக்கி, இன்பம் முகந்து கணவனையே எதிர்நோக்கி நிற்கிறாள். அவள்நிலை கணவனுடைய இன்பத்திலும் துன்பத்தி லும் சரிபங்கு கொள்ளத் துணிந்திசைந்த நிலை. அவள் அவனிடத்தில் வேண்டுவது ஓர் இனிய முகநோக்கு,

அன்பு அளேஇய ஆர்வமொழிகள். கணவன் வாயிலிருந்து வரும் ஒவ்வொரு புகழ்ச்சி யுரையும் அவள் காதுக்கு இன்பம்: அவன் அவளிடம் கொண்ட மதிப்பிற்கு ஓர் அளவு கோல். கணவனின் அன்பையும் மதிப்பையும் களங்கமின்றிப் பெறுகின்ற காரிகைக்கு இவ்வுலகில் வேறு ஒன்றும் வேண்டத் தேவையில்லே. கணவன் மதிப்பைப்பெற்ற மங்கை தன் வாழ்வை உயர்வாகவும் குற்றயற்றதாகவும் எண்ணிப்பெருமிதம் கொள்வாள் :—

"வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு."

கணவனுடைய தாழ்ந்த குடிசையும் மனேவிக்குத் தங்க மாளிகைதான். அவன் அன்புடன் தேடிக் கொடுப்பது உப்பில்லா வெறுங் கூழேயாயினும் அது அவளுக்குத் தேவாமிர்தம். அவன் கொடுக்கும் காடிக்கஞ்சியும் கோடிப்பொன்னுக்கு நேர். தந்தை வீட்டுச் செல்வ வாழ்க்கையைவிட அன்புடைக் கணவனின் எளிய வாழ்க்கையை மேலாகக் கொள்கிருள் மனேவி. இதைவிடச் சிறந்த அன்பின் தியாகம் எங்கும் காணமுடியாது. இவ்வளவு தகுதியும் ஏற்று இருக்கக் கூடியவள் இல்லாள். அவள் அந்நிலேயை எளிதில் அடைவதற்கு உதவி செய்வது கணவனின் அன்புதான். அவன் அவளே அருகில் அழைத்து, அன்பால் அணேத்துத் தலேயளி செய்கின்ருனே, அதுதான் பெண்ணே வசப்படுத்தும் பெரியமந்திரம். அவன் கூறும் இன்னுரை அவளுக்கு வீணு கானம்தான். புகழ்ந்துவிட்டாலோ சொல்லவே வேண்டாம். அவளேச் சுருட்டி மடக்கிச் சொர்க்கத் திலேயே இருத்திவிடும். வேண்டும் பருவத்தில் மழை பொழிந்து பைங்கூழ்களே வளர்த்து உலக மக்களேச்

செழிப்புறுத்துவது போல், கணவனின் அன்புச்செயல்களும் ஆர்வ மொழிகளும் மனைவியை மனங்குளிரச் செய்து மகிழ்விக்கும் :—

"வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி."

மன வெழுச்சியிற் குன்றாது நாளும் மகிழ்ச்சியூட்டும் மணாளனே மங்கை விரும்புவது. அவளைத் தெருட்டியும் மருட்டியும், பழகிப்பரிந்து, ஊடியும் கூடியும் விளையாடியே வாழ்க்கையில் மிதந்து செல்வதற்கேற்றவலிமையும், வளமையும், இனிமையும் கணவனிடம் தட்டின்றி அமைய வேண்டும். அவனுடைய முகமலர்ச்சியும் உடலின் திண்மையும் பெண்ணுக்கு இன்பவாழ்க்கை யளிக்கும் உறுதி முத்திரைச் சின்னமாகும். உடனே அவனிடத்தில் அவளுக்கு ஒரு நம்பிக்கை பிறக்கிறது. தன்னை அறியாமலே அவளுக்கு ஒரு விருப்பம் எழுகிறது. அவனுடைய அகன்றமார்பும் உயர்ந்த தோள்களும் அவளைக் காந்தம்போற் கவர்கின்றன. அவனுடைய இனியவார்த்தைகளும் அன்பின் செயல்களும் அவன் ஓர் அயலான் என்ற பயத்தை அவளுக்கு அறவே களைந்து விடுகின்றன. தான் இதுகாறும் விரும்பிக் கொண்டிருந்த, இன்னதென்று அறியாத, ஒரு பொருளை வாரி வழங்க வந்த வள்ளலே கணவன் என்பதை மனைவி எடுத்த எடுப்பிலேயே உணர்ந்து கொள்கிறாள். தன்நிறையைக் கணவன் உண்மையிலே கவர்ந்துவிட்டானாயினும், உடனுக்குடன் நாணுத்தளையிட்டுத் தன்னை நிறுத்திக் கொள்கிறாள் பெண். பெண்ணுக்குள்ள அடக்கம் ஆடவனிடத்தில் இல்லை. அவனிடத்தில் ஆத்திரமும் துடிப்புமே அதிகம் காணப்படும். பெண்ணுக்கும் அவை உண்டெனினும் அகத்தே

அடக்கிக் கொள்ளுகிருள். அவ்வாற்றல் உண்மையில் பெண்ணுக்கு ஓர் உயர்வைக் கொடுக்கிறது :—

"கடலன்ன காம முழந்து மடலேருப்
பெண்ணிற் பெருந்தக்க தில்."

என்ருர் திருவள்ளுவரும்.

ஆடவனைப்போல் பெண்ணனவள் தன் ஆசையை அதிகம் காட்டிக்கொள்ளமாட்டாள். உள்ளே எரிமலை புகையினும் வெளியில் தண்டலைச் சோலைபோல் தழைத்து நிற்பாள். தான் விரும்பும் பொருளைக் காதலனிடமிருந்து பெறுவதற்குத் தக்கதொருவிலைப் பொருள் தன்மாட்டு இருப்பதையும் செவ்வனே தெரிந்து கொள்கிருள். தன்னிடமுள்ள இன்பப் பொருளை நாடித் தன் கணவன் ஏங்கித் துடித்துத் தன் முன்னே தவித்து நிற்பதைக்காண விழைகிருள். கணவன் தன்னிடத்துக்காட்டும் வேட்கை வேகத்தைக் கண்டு அவனிடம் பரிவு கொள்வாள். அதனை மேன் மேலும் காண்பதில் அவளுக்கு விருப்பம் அதிகம். தான் அவனுக்கு ஓர் இன்றியமையாத பொருள் என்பதைக் காணக்காண மனைவியின் மனம் பொங்கி நிற்கும். அத்தகைய சான்றுகளைக் கணவன் முட்டின்றித் தந்துதவ வேண்டும். அத்தகைய சான்றுகளைப்பெறும் நிமித்தம் ஓர் இரவு முழுதும்கூட அவள் ஊடிக் கொண்டதுபோல் சற்று ஒதுங்கியிருந்து பார்ப்பாள். தன்பொருட்டாக அவனைப் புழுப்போலத் துடிக்கவிட்டு வேடிக்கை காண்பாள். அதனுல் அவள் அடையும் ஆனந்தம் சொல்ல முடியாது.

"புல்லா திராஅப் புலத்தை அவருறும்
அல்லனோய் காண்கஞ் சிறிது,"

இவையனைத்தும் அவன் தன் மீது கொண்டுள்ள அன்பு வெளிப்படுவதைக் காண்பதற்கேயாகும்.அதைக்

காணக்காண அவளுக்கு ஒரேமகிழ்ச்சி. அவளை இன்றித் தான் வாழ முடியாது என்று கணவன் சொல்லிப் பணிந்து விட்டால் போதும். அவளுடைய திண்ணிய பெண்மை இளகிவிடும். அவள் மனம் உருகிவிடும். இன்பத்தில் ஆழ்ந்து போவாள். அவனுக்கு மீளா அடிமையாவாள். அவள் கோபம் எல்லாம் பறந்துவிடும் :—

"பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை."

# தும்மலும் விம்மலும்

ஆண்பிள்ளை என்று இருப்பவன் வீட்டினுள்ளேயே அடைபட்டிருக்க முடியுமா? வெளியே ஓடியாடித் திரிந்து நாலு வகையாலும் பணம் சம்பாதித்துக் கொண்டு வந்தால்தானே வீட்டிலுள்ளவர்கள் வயிறு புடைக்கத் தின்று மகிழலாம். "வீட்டில் பொருள் இருந்தால் வெண்கலப்பெண்டாட்டி, இல்லாதுபோனல் வெறும்பயல் பெண்டாட்டி." என்று வீதியில் யாரோ பேசிக்கொண்டு போனார்கள். இதைக் கேட்டான் வீட்டிலிருந்த கணவன். உடனே மூட்டையைக்கட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டான். கணவனைப் பிரிந்த மனைவி வீட்டிலே தனித்திருந்து வருந்தினாள். இடைவிடாது கணவன் நினைவே இடித்துக்கொண்டு வந்தது. அலமரலுற்றாள், அவலித்தாள், அரற்றினாள், உலறினாள், அலறினாள், விழுந்தாள், விம்மினாள், வெதும்பினாள், வெருவினாள், எழுந்தாள், ஏங்கினாள், இரங்கினாள், தொழுதாள், சோர்ந்தாள், தளர்ந்தாள், துளங்கினாள், நடுங்கினாள், புலம்பினாள், துயர் உழந்தாள், நெட்டுயிர்த்தாள், அழுதாள், இடையிருள் யாமத்தும் இடிந்து இனைந்து உருகினாள், முக்கினாள், முனகினாள். ஆகா! இத்தனை தொழில்களும் காமத்தின் சேட்டையல்லவா? அவள் செயல்களைக்கண்ட அவள் தோழி எத்தனையோ புத்திமதிகளை எடுத்துக் கூறினாள். பெண்ணானவளுக்கு அடக்கம் வேண்டும். கணவன் பிரிந்து போயிருந்தால் என்ன? அதற்காக இப்படியா கவல்வது? போனவன் திரும்பிவரும்வரை பொறுத்திருப்பதுதானே பூவையர்க்கு அழகு? ஆசையைக் கட்டுப்படுத்துவது அரிவையரின் அறிவாய் இருக்க வேண்டாமா? அதற்குள் காமத்துயரால் கதிகலங்கி இப்படிக் கண்ணீரும் கம்பலையுமாய் நிற்பது

பெண்மைக்கு அடுக்குமா? காமத்தை வெளிக்காட்டாது காப்பதன்றோ காரிகையர் பெருமை? கண்டவர்கள் தாம் என்ன சொல்லமாட்டார்கள்? என்ன நினைக்க மாட்டார்கள்? வெளிக்குத் தெரிந்தால் வெட்கக்கேடு அல்லவா? இதைத் தலைவி யோசிக்க வேண்டாமா? இப்படி அடுக்கிக்கொண்டே போனாள் தோழி. தலைவிக்கோ தாங்க முடியவில்லை.

மனைவி பேசுகிறாள் :—"என் பிரியமுள்ள சகியே! காமத்தை வெளிக்காட்டக்கூடாது என்று நீ சொல்வது சரிதான். அது எனக்கும் தெரியும். ஆனால் என்னால் அடக்க முடியவில்லையே. ஒருத்திக்குத் தும்மல் வருகிறது என்று வைத்துக் கொள்வோம். அதைப் பிறருக்குத் தெரியாதவாறு அவளால் அடக்கிவிட முடியுமா? அவள் எவ்வளவுதான் தும்மலைத் தடுத்து நிறுத்தப் பார்த்தாலும், அது அடங்காது சட்டென்று நாலு பேர் அறிய வெளியே குதித்து வந்துவிடும். அதுபோலத்தான் காமமும் என்பதை நீ அறிந்து கொள். என் கணவன்மேல் நான்கொண்ட ஆசையை என்னதான் மறைத்துப் பார்த்தாலும், அது என்னையும் மீறிக்கொண்டு வெளித் தோன்றிவிடுகிறது. நான் என்ன செய்வேன்? தும்மல் அடங்காதது போலக் காமமும் அடங்குகின்ற வழியைக் காணேன். என் குறிப்பின்றியும் என் ஆசை புறத்தே புறப்பட்டு விடுகிறது, வெளியே புலப்பட்டு விடுகிறது" என்று கவன்றுரைத்தாள். வள்ளுவர் குறள் வருமாறு :—

"மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போல் தோன்றி விடும்."

ஆம்; தும்மலை யாரால் தடுத்து நிறுத்த முடியும்? ஆயிரம் குதிரை வேகத்தில் ஓடும் எந்திரத்தையாவது நிறுத்திவிடலாம். தும்மலை நிறுத்த முடியாது. அதை

இரகசியமாய் மூடிமறைத்து வைக்கவும் முடியாது. தலையை ஓர் ஆட்டு ஆட்டி, உடம்பையே ஒரு குலுக்குக் குலுக்கி விடுகிறது தும்மல். அண்டை வீடு அடுத்த வீடு எல்லாம் கேட்கும்படி இரைச்சலையும் கிளப்பி விடுகிறது. கண் கலங்கிச் சிவந்து காட்டுகிறது. கண்ணீரும் கண்டுவிடும். உள்ளே மூச்சுத்திணறித் திட்டுமுட்டடிக்கும். அந்த நேரத்தில் வேறொன்றிலும் புத்தி செல்லாது. புறப்பட்ட தும்மல் தோன்றி வந்து நின்ற பிறகுதான் ஓர் அமைதி உண்டாகும். இவ்வாறு கணவனை நினைந்து ஆசை வயப்பட்ட மனைவிக்குத் தும்மலைக் கூறியவுடன், தும்மலே வந்துவிடுவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. ஆனால் தும்மலும் வெளியே வருவதாய் இல்லை. நம் நாட்டிலே பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாய் ஒரு நம்பிக்கை உண்டு. அது இன்றும் எங்கும் நிலவி வருகிறது. அதுதான் அயல் ஊரிலிருப்பவர் தம்மை நினைப்பின் தும்மல் வருதல் இயற்கை என்ற நம்பிக்கை. உடம்பில் நீரேற்றுக்கொண்டால் அதன் அறிகுறியாகத் தும்மல் தோன்றும் என்பது உடற்கூற்று வண்ணம் உணர்ந்தோர் அறிவர். நினைப்பினால் தும்மல் வரும் என்பது அதற்கும் அப்பாற்பட்டதாகிய ஒரு கொள்கை. ஒருவர் ஒருவரை நினைத்தால், நினைக்கப்பட்டவருக்கு உடனே தும்மல் கண்டுவிடும். இதற்கு நினைப்பது மட்டும் உண்மையானதாகவும் தீவிரமானதாகவும் இருக்கவேண்டும். பிரிந்திருக்கும் தலைவிக்கோ தும்மல் தோன்றும் போலிருக்கிறது. அவள் கணவன் அயலிடத்தில் இருப்பதால் அவளைப்பற்றி நினைத்தல் கூடும். அப்படி அவன் நினைத்திருந்தால் அவளுக்கும் தும்மல் வந்திருக்கும். ஆனால் அவளுக்குத் தும்மல் வந்தபாடும் இல்லை. தும்மல் அரும்புகிறதுபோற் காண்கிறது. ஆனால் மலரவில்லை. இலேசாக உணர்ச்சி

பிறக்கிறதேயொழிய அது முற்றுப்பெற்று ஈச்சுக் கொட்டி வெளியேவரக்காணேம். ஒருவேளை அவள் கணவன் அவளை நினைப்பது போன்று நினையாமல் இருக்கிறுன் போலும். இவ்வாறு நினைக்கலுற்ருள் தலைவி. அவன் உண்மையிலேயே அவளைப்பற்றி நினைத்தால் தும்மல்தான் வந்திருக்குமே. அது வருவதுபோன்று வராதிருப்பதால் தலைவனும் தன்னை நினைப்பதுபோன்று நினையாமலே இருக்கிறுன் என்ற சந்தேகம் தோன்றித் தலைவியைப் பெரிதும் வருத்துகிறது. வெளியே இருக்கும் ஆண்பிள்ளை தன்னைப்பற்றி அரைகுறையாகவே நினைப்பதாய் இருந்தால், வீட்டிலிருக்கும் பெண்ணுக்கு அது எத்துணை மனவருத்தத்தை உண்டுபண்ணும்? "என் தும்மலானது வருவது போலத் தோன்றிப் பின் உள்ளடங்கி விடுகிறதே. ஆதலால் என் காதலர் என்னை இப்பொழுது சிறிது நினைப்பவர் போன்று நினைத்துப் பின்னும் நினையார் ஆயினர் போலும்!" என்று தயங்கி மயங்கலானுள் தலைவி.

"நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும்."

(சினைப்பது-அரும்புவது)

இவ்வாறு நெடுநாள் தன்னைப் பிரிந்து தவிக்க விட்டதும் அல்லாமல், தன்னை நன்கு நினைப்பதுகூடச் செய்யாதிருக்கிறுன் கணவன் என்ருல் மனைவி மனம் கேட்குமா? அவள் அடைந்த துயரத்திற்கு அள வில்லை. அவன் திரும்பி வந்தால் பேசக்கூடாது என்று முடிவு செய்து விட்டாள். கணவனும் வந்து விட்டான். மனைவி பேசவில்லை. ஊடலின் வேகம் தணிந்தால் ஒரு வேளை பேசுவாள் என்று பார்த்தான். பேச்சுக்கே இட மில்லாதிருந்தது. பேசாத பெண்ணைப் பேச வைப்பது

எப்படி என்று அவன் மூளையைப் போட்டுக்குழப்பினுன். எத்தனையோ முறைகளைக் கையாண்டு பார்த்தான். ஒன்ருலும் அவன் எண்ணம் பலிக்கவில்லை. கடைசியாக அவன் ஒரு தந்திரம் செய்தான். தும்மலைப்பற்றிய நினைவு அவனுக்கு வந்தது. கணவன் தும்மினுல் மனைவி "நீடு வாழ்க" என்று வாய் திறந்து வாழ்த்தியே ஆக வேண்டும். அவ்விதமே அவள் பேசத்தொடங்கி விட்டால் அவள் கோபமும் போய்விடும். அது நமது நாட்டு நெடு நாளைய வழக்கம். தும்மலை ஒரு நல்ல சகுனமாக அல்லது அறிகுறியாக மக்கள் கொள்வதில்லை. தும்மல் யாருக்குத் தோன்றுகிறதோ அவருக்கு உடம்பிலே ஏதோ ஒரு கோளாறு ஏற்படுகிறது என்பது உறுதி. காற்றுக் குழாயினுள் ஏதாவது நீர்த்துளி அல்லது வேறு நுண்பொருள் புகுந்துவிட்டால், அதை அப்புறப்படுத்தித் துப்புரவு செய்வதற்கு இயற்கை செய்யும் முயற்சிதான் தும்மலாய்த் தோன்றுகிறது என்று உடற்கூற்று வண்ணம் உணர்ந்தோர் உரைப்பார்கள். தும்மலை உடல் நலத்திற்கு ஊறு விளைக்கும் உற்பாதமாகவே பழங்காலத்தில் கருதி வந்தனர். இதனைத் திருஞான சம்பந்தர் தேவாரப்பாடல்களாலும் அறியலாம்:

"தும்மலோ டருந்துயர் தோன்றிடினும்
அம்மலர் அடியலால் அரற்ருது என் நாக்
கை மல்கு வரிசிலைக் கணையொன்றினுல்
முப் மதிள் எரியெழ முனிந்தவனே
இதுவோ எமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோ வுனதின் னருள் ஆவடுதுறை அரனே."

இப்பாடலில் சம்பந்தப்பிள்ளையார் அருந்துயரோடு தும்மலை இணைத்துப் பாடுகிருர். தும்மல் அடைந்த காலத்தில் இறைவன் திருவடியை நாவால் உரைப்பேன் என்கிருர். தும்மலும் இருமலும் நரக வேதனைபோன்று இடர் விளைவிக்கக் கூடியன. அவற்றிலிருந்து நம்மைக்

காப்பது நமச்சிவாயம் தான் என்றும் காழி வள்ளலார் பாடியுள்ளார்:

"தும்மல் இருமல் தொடர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்த்(து) எய்தும் போழ்தினும்
அம்மையி னுந்துணை அஞ்செ ழுத்துமே."

இவ்வாறு, தும்மலைப் பின்வரும் நோய்க்கு முன்னெழும் ஒரு தீய அடையாளமாகவே மக்கள் மதித்தனர். அதனால் தும்மல் யாருக்காவது தோன்றினால், உடனே அதற்குப் பரிகாரமாக இறைவனைத் தொழுது, "நீடுவாழ்க" என்று பக்கத்தில் உள்ள உறவு முறையார் கூறுவது வழக்கம். இக்காலத்திலும் சிறு குழந்தைகள் தும்மினால் உடனே "நூறு" என்று பெரியவர்கள் வாழ்த்தும் வழக்கம் தமிழ் நாட்டில் இருந்து வருகிறது. பழங்காலத்தில் கணவன் தும்மினால், உடனே மனைவியானவள் தன் மங்கல நாணைத் தொட்டு மனத்தாலும் வாயாலும் "நெடிது-வாழ்க" என்று வாழ்த்துவது வழக்கமாக இருந்து வந்திருக்கிறது. இக்காலத்தில் 'நூறு' என்று வாழ்த்துவதன் பொருள் "நீ நோய் நொடியின்றி, யாதொரு கெடுதலுமின்றி நூறு ஆண்டுகளும் நல்லபடியே வாழ வேண்டும்" என்பது தான். இதன் பொருள் இன்னதென்று தெரியாமலே இக்காலத்தில் சொல்லி வருகின்றனர்; "நூத்துக்கிருந்து சோத்துக்கு அலை" என்று வேடிக்கையாகச் சொல்வதும் உண்டு சோற்றுக்கு அலைந்தாலும் நூற்றுக்கு இருக்க யார் தாம் விரும்பமாட்டார்?

எனவே தும்மலின் எண்ணம் சமய சஞ்சீவியாகத் தலைவன் நினைவிற்கு வந்தது. பொட்டென்று உடனே அவன் ஒரு தும்மல் போட்டான். மனைவியும் உடனே "நீடு வாழ்க" என்று வாழ்த்தி விட்டாள்:

" ஊடி யிருந்தேமாத் தும்மினர் யாம் தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து."

(தம்மோடு புலந்து உரையாடாது இருந்தேமாக, அவ் விடத்து யாம் தம்மை நெடிது வாழ்வீர் என்று சொல் வோம் என்பதனை அறிந்து தும்மினர்).

இவ்வாறு வாயைத்திறந்து வாழ்த்திய தலைவிக்குச் சட்டென்று இன்னொரு சந்தேகம் தோன்றி விட்டது. அவன் தன்னைப் பேச வைப்பதற்காக, வேண்டுமென்று பொய்த் தும்மல் தோற்றியிருக்க முடியாது. அது மெய்யான தும்மலாகவே காணப்பட்டது. அதனால் யாரோ அவனை நினைத்ததனால் உண்டான தும்மலாகத் தான் இருக்கவேண்டும் தன் முன்னிலையில் அப் பொழுது அங்கு அவன் இருந்ததனால், அவள் அவனை நினைத்தாள் என்று சொல்ல முடியாது. தொலைவிடத் திலுள்ள வேறு ஒருவர் நினைத்துத்தான் அவன் தும்மி யிருக்கிறான். அப்படித் தலைவனை நினைக்கக் கூடியவர் களாக அவள் அறிந்த வரையில் வேறு எவரும் கிடையாது. அவளுக்குத் தெரியாத வேறொரு பெண்ணோ தலைவனை நினைத்திருக்க வேண்டும். இதனால் தலைவியை மறைத்துத் தலைவன் வேறு எந்தப் பெண்ணுடனோ திருட்டுக் காதல் கொண்டிருக்கிறான் என்பது நன்கு புலனாகிறது அல்லவா? தன்னைப் போன்ற வேறொருபெண் அவனை நினைத்ததால் தான் அவனுக்குத் தும்மல் வந்திருக்கிறது என்று இவ்வாறு தலைவி எண்ணத் தொடங்கியதும், தலைவன் பரத்தமை கொண்டு ஒழுகுகிறான் என்றும், பல பெண்களுடன் கள்ளத்தொடர்பு கொண்டிருக்கிறான் என்றும் பொறாமை எண்ணங்கள் பல அவளைப் பிடுங்கித்தின்ன ஆரம்பித்தன. அன்புடையார் நினைத்த வழி நினைத் தவர்க்குத் தும்மல் தோன்றும் என்பது மகளிர் வழக்கு.

அவள் வாழ்த்தியவுடன் கோபம் தணிந்துவிட்டது என்று மனம் மகிழ்ந்த கணவன் திடுக்கிடும்படியாக, "எந்தப் பெண் உம்மை நினைத்ததனால் நீர் இப்படித் தும்மினீர்? உம்மை நினைக்கும்படியாக என்னைத்தவிர வேறு பெண்களும் உளரோ?" என்று கேட்டுக் கொண்டே முத்துமுத்தாகக் கண்ணீர் வடித்து ஏங்கி அழத் தொடங்கி விட்டாள் தலைவி. இதனைத்தலைவன் கூற்றாக வள்ளுவர் கூறுதல் காண்க:—

> "வழுத்தினாள் தும்மினேன் ஆக அழித்தழுதாள்
> யாருள்ளித் தும்மினீர் என்று."

தலைவனுக்குக் கிணறு வெட்டப்பூதம் புறப்பட்டது போலாகி விட்டது. முன்னாவது பேசாமல் மட்டும் இருந்தாள். இப்பொழுது அழவும் ஆரம்பித்து விட்டாள் தலைவி. தலைவன் என்னதான் செய்யமுடியும்? அவள் அழுவதை எவ்வாறு நிறுத்துவது? அவள் ஐயத்தை எவ்வாறு அகற்றுவது? ஐயோ! துன்பத்தின் மேல் துன்பமாக இன்னொரு சங்கடமும் அவனுக்கு இப்பொழுது ஏற்பட்டுவிட்டது. உண்மையாகவே மற்றுமோர் தும்மல் அவனுக்கு வந்துவிடும் போல் இருந்தது. அவன் தும்மலை நினைக்க நினைக்க அது ஒழியாது வந்து விடுவது போலவே காணப்பட்டது. தும்மலுக்கு வேண்டிய ஆர்ப்பாட்டங்கள் எல்லாம் அவன் உடம்பினுள்ளே கூடித்திரளலாயின. அவன் மூக்கின் நுனி வரையிலே வந்து விட்டது தும்மல் என்று சொல்லலாம். என்ன செய்வான், பாவம்! இப்பொழுதும் ஒரு தும்மல் காண்பதாயிருந்தால் தலைவியின் சந்தேகம் வலுத்து விடும். இன்னும் அதிகமாக ஆவலித்து அழத் தொடங்கி விடுவாள். வெளியே அவனுக்கு உகந்தவளாய் வேறொரு பெண் இருப்பதாகவும் உறுதிப்படுத்திவிடுவாள். இந்த நிலைவராதபடி அவன் காத்தாக வேண்டும். மேலே எழுந்து வருகின்ற

தும்மலை எவ்வாறு தடுக்க முடியும்? நாக்கை அழுத்தி மூக்கை விரித்து மூச்சை யிழுத்துத் தலையை அசைத்து ஆச் என்று தும்மினுல் போச்சே காரியம். விளக்கெண்ணெய் குடிக்கப்போகிறவன் மனமும் முகமும் எவ்வாறு இருக்குமோ அவ்வாறே பரிதாபக் காட்சி யளித்தான் தலைவன். வருகின்ற தும்மலை வெளியே விடாது உள்ளேயே முக்கி முக்கி விழுங்கிக்கொண்டிருந்தான். அவன் தும்மலோடு போராடிக்கொண்டு துயரப் படுவதைத் தலைவி கண்டு விட்டாள். "உமக்கு வேண்டிய ஆசை நாயகிகள் உம்மை நினைப்பதை எனக்குத் தெரிந்துவிடக்கூடாது என்று மறைக்க முயல்கிறீரோ? தும்மலை அடக்கப் பார்க்கிறீரோ? எனக்குத் தெரியாமலா போய்விடும்?" என்று கூறிக் கொண்டே பொங்கிப் பொங்கி அழுதாள்:—

> "தும்முச் செறுப்ப அழுதாள் நுமர் உள்ளல்
> எம்மை மறைத்திரோ என்று."

அவனும் தும்மினுன். அவளும் விம்மினுள்.

---

# இறவும் பிறவும்

ஒரு சிங்காரப் பூங்காவிலே காமனும் இரதியும் போன்ற காதலர் இருவர் கருத்தொருமித்துக் கலந்து மகிழ்ந்திருந்தனர். இளந்தென்றல் கவரி வீசிக் களிப்பூட்டியது. பன்னீர்ச் சிவிறி கொண்டு ஒருவர் மேல் ஒருவர் தெளித்தனர். சந்தனம் பூசிக்களித்தனர். மலர் கொய்து சூடினர். கைகோத்து ஆடினர். கனிகள் சுவைத்துத் தேறலைப் பருகினர். காதலிற் கசிந்து கனிந்து குழைந்து கரைந்து உருகினர். இருவருக்கும் நேரம்போவதே தெரியாதிருந்தது. பல ஆண்டுகளுக்குக் குழந்தைப் பேறே இல்லாமல் தன் இளமையைக்காத்து இன்பம் துய்க்க அவள் எண்ணினாள். நெடுநாள் நிலைத்திருக்க ஒரு காயகற்பம்தேட அவன் எண்ணினான். அத்தகைய மருந்தைக்கொண்டு பெருநிதியமும் திரட்டி விட அவள் எண்ணினாள். பணம் வந்ததும் ஓர் எழுநிலை மாடம் எழுப்பலாம் என்று அவன் எண்ணினான். அதன் உப்பரிகையிலே நிலவில் நின்று நடனம் ஆடித் தன் காதலனைக் காலில்விழ வைக்கலாம் என்று அவள் எண்ணினாள். இவ்வாறு அவர்கள் இருவரும் மனக் கோட்டைகள் கட்டி மெருகு கொடுத்துக்கொண்டிருக் கையில், ஆடவன் திடீரென்று கீழே விழுந்தான். வாயில் நுரை நுரையாகக் கக்கினான். உடலில் இழுப்பும் வலிப்பும் தோன்றிக் கணப்பொழுதில் பிணமாக மாறிவிட்டான். பெண்ணானவள் அவலக் குரல் எழுப்பி ஓவென்று அலறினாள். "ஐயோ! நான் எண்ணியிருந்தவெல்லாம் மண்ணில் விழுந்து தகர்ந்தனவே!" என்று கதறினாள்.

> "ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
> கோடியும் அல்ல பல."

என்ற குரல் எழுந்தது. திருவள்ளுவர் அங்குத் தோன்றினார்.

பேதைப் பெண் பேசத் தொடங்கினாள். "சுவாமி! நானும் என் கணவனும் நல்வாழ்வு வாழவே எண்ணி னோம். ஆனால் வாயைத் திறவாமல் மறுவார்த்தை பறையாமல் இறந்துவிட்டார் என் நாதர்."

"பெண்ணே! நீ எண்ணும் எண்ணங்களுக்கு ஏற்பச் செய்யும் கருமங்கள் ஒத்திருந்தனவா? என்பதை எண்ணிப்பார். நேற்று கழிந்தது, இன்று நடந்தது, நாளை செல்லும். நமக்குப் பொழுது இனிது போகா நின்றது என்று இன்புறுவது மயக்கம். நல்ல நாள் இனி வரும் என்று நினைப்பது தவறு. ஒவ்வொருவருக்கும் இனி வரவிருக்கும் நாளைவிட இன்று கிடைத்திருக்கும் நாளே மிகமிகச் சிறந்த நன்னாள். இதுபோன்ற நாள் மறுமுறை வராது. நாள் கழிந்தது என்று கூறுவ தெல்லாம் அவ்வளவுக்கும் நம் உயிர் குறைந்துவிட்டது என்பதை நாம் உணர வேண்டும். ஒவ்வொரு நாளும் நாம் உயிர் வாழ்வதைக் குறைக்கும் ஓர் அரிவாள். அந்த அரிவாளின் வாயிலே நம் உயிர் கிடக்கிறது அரிவாள் அறுத்துக்கொண்டே போகிறது. நாம் அதை அஞ்சி உணர்ந்து அதற்கேற்ப ஒழுகாமல் மயங்கி மகிழ்கிறோம். இறுதியில் ஏமாந்து கவலைப் படுகிறோம். இதை உணர்வார் இல்லையே!"

"நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்."

"சுவாமி! நேற்று மாலையில் இரவு வரும்வரை இங்கு என்னுடன் என் மணவாளன் விளையாடியிருந்தார். அதுபோல் இன்றும் பகற்பொழுதை இங்குக் கழிக்க எண்ணினோம். ஒரு விநாடிக்குமுன் என்னிடம் சிரித்துப்பேசினார். இப்பொழுது அசைவற்ற பிணமாகி விட்டாரே. என்ன அநியாயம் இது!"

" அம்மா! அதுதானே இவ்வுலகத்தின் இயற்கை. இன்றைக்கிருந்தாரை நாளைக்கிருப்பர் என்று எண்ணு தற்கில்லை. இன்று உள்ளேன் நாளை இல்லேன் என்பது தான் உலகியல். நேற்றிருந்தார், சோலை வீற்றிருந்தார்; சாற்றிருந்த பானம் ஏற்றிருந்தார்; இன்று கூற்றருந்தக் குடி மாற்றிப்போனார், என்பதுதானே இவ்வுலகியலின் பெருமை."

" நெருநல் உளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு."

" அப்படி நிலையாதிருப்பது உலகின் சிறுமை யல்லவா? சுவாமி! அதைப் பெருமை என்று எப்படிக் கூறலாம்?"

" அம்மா! இது மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமை. இங்குப் பெருமை என்பது மிகுதியைக் குறிக்கிறது. நேற்றுப் பிறந்தான், இன்று இறந்தான் என்னும் நிலையாமையே இந்த உலகெங்கும் பெருகிக் காணப்படுவதால், அதுவே இவ்வுலகின் பெருமை யாயிற்று."

" சுவாமி! உலகைப்படைத்த கடவுள் சாவையும் ஏன் படைத்தார்? மரணம் என்பது ஒரு கொடுமையான முடிவு."

" பெண்ணே! வாழ்க்கை மோகத்தினால் தப்பாது வரவிருக்கும் சாவிற்கு அஞ்சுகின்றாய். சாகவே துணிந்து நில். பின் வாழ்வு வரினும் தாழ்வு வரினும் கலக்கம் தோன்றாது. நீ பெரிதும் இனிதாகக் கருதும் வாழ்வுதான் எத்தகையது? எண்ணிப்பார். இந்த வாழ்வு போனால் போகட்டுமே. இதை அறிவிலிகள் தாம் கட்டிக்கொண்டு அழுவார்கள். வாழ்வு என்பது இந்த உடலினுள்ளே மாறி மாறி எழுகின்றஒரு மூச்சு.

அது சுழி மாறிப்போனாலும் போச்சு. ஒவ்வொரு விநாடியும் அது இந்த உடலை வருத்திக்கொண்டிருக்கிறது. இந்த உயிர் வாழ்க்கையை வானத்தின் நாள் கோள்கள் சதுரங்கம் வைத்து விளையாடுகின்றன. நீ அஞ்சிக்கொண்டு கூற்றுவனைவிட்டுத் தப்பிப்பிழைத்து ஓடுவதாக எண்ணி, அவன் வாயிலேயே போய் விழுகிறாய். பெரும் பாவங்களைச் செய்தே உலகில் செல்வமும் புகழும்தேடவேண்டியிருக்கிறது. இவ்வுடல் பலமற்றதாகவும் இருககிறது. ஒரு பூச்சி புழுவினுடைய மெல்லிய கொடுக்கு அதனைப் படாதபாடு படுத்தி நடுங்க வைத்துவிடுகிறது. ஒரு நெல்வால் ஊன்றினும் இவ்வுடல் வேதனைப் படுகிறது. இவ்வுடல் தானாகவும் வளர்வதற்கில்லை. மண்ணிலே தோன்றும் எண்ணிறந்த தானியங்களைத் தின்றே அது வளரவேண்டும். இவ்வாழ்க்கை இன்பம் அளிப்பதாகவும் இல்லை. நம்மிடம் இல்லாத பொருள்களுக்கு ஏங்கித்தவித்து உழைக்கிறோம். நம்மிடம் உள்ள பொருள்களின் பெருமையை மறந்து விடுகிறோம். வாழ்க்கை ஒரு நிலையாகவும் இல்லை. சந்திரன் தேய்ந்து மாறுவது போல் நம் குணம் செயல்களும் மாறுகின்றன. ஒருவனுக்குச் செல்வம் ஏற ஏற, ஆசை மேலீட்டால் வறுமையும் மிகுந்து கொண்டு வருகிறது. குங்குமம் சுமந்தெய்த்த கழுதை போல, கூற்றுவன் வந்து பாரத்தை இறக்கும்வரை, இவன் தள்ளாடித் தள்ளாடி, விடாமல் சுமந்து திரிகிறான். உனக்கு உண்மை நட்பாளரும். இவ்வாழ்க்கையில் கிடையாது. உன் வயிற்றில் உதித்து உன்னை அம்மா என்று அழைக்கும் பிள்ளைகள்கூட, ஊருக்கு வரும்வாந்திபேதி உன்னை அழைத்துப் போகவில்லையே என்று திட்டுகிறார்கள். உன் இளமையும் உன்னை ஏய்த்துவிடுகிறது. முதுமை முடுகி வருகிறது. தள்ளாத காலத்தில் உன் பணத்தை

வைத்துக்கொண்டு நீ என்ன செய்ய முடியும்? அதன் பயனுல்வரும் இன்பத்தை நுகர்தற்கு வேண்டிய ஆற்றலும், மிடுக்கும், அழகும், செழிப்பும் உனக்கு வாய்ப்பதில்லை. இன்பமும் துன்பமாக மாறுகிறது. விழலுக்கு இறைத்த நீர் போல், நீ பொருள் திரட்டுதற்கு ஆயுள் முழுவதும் பட்ட பாடெல்லாம் வீணுகிறது. படைத்த பொருள்களை நுகர்தற்கு வேண்டிய ஊழ் வேண்டுமே! அதற்கு என்ன செய்வாய்? ஏரி நிறைந்தனைய செல்வம் இருக்கிறது. அதை வாரி உண்ண முடியாதபடி வயிற்று வலியும் வந்து விடுகிறது. உன் கையில் செல்வம் இருந்தும் அது உனக்கு ஆகாத செல்வமாகிறது. அதைப் பூதம் காப்பதுபோல், காவற் சேவகனுய் நீ இருந்து அதற்கு உடையவன் கையில் கொடுத்து இறப்பதுதான் உன் தலையிலிட்ட எழுத்து. அதற்கும் மிஞ்சி நீ ஒரு பிடி சோறு எடுத்து உண்டால் வயிற்றைக் குடலோடு துடக்கி முடக்கித் தொந்தரவுக்கு ஆளாகிருய். பெண்ணே! நன்று யோசித்துப்பார். இத்தகைய வாழ்வை நம்பியா நீ மரணத்துக்கு அஞ்சுகிருய்?"

"வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்தல் அரிது."

"சுவாமி! என்ன இருந்தாலும், சாவு மிகக் கொடியது. அது மிகவும் பயங்கரமானது!"

"பேதாய்! பிறப்பைவிட இறப்பு அவ்வளவு பொல்லாததில்லை. இரவில் வானத்தின் நிலையைப்பற்றி எவ்விதம் அறிய முடியாதிருக்கிருேமோ அதுபோலவே, இறத்தலைப்பற்றியும் நாம் அறிய முடியாதிருக்கிருேம். உலகியல் அமைப்பை உள்ளவாறு காணும் மனப்பான்மை மட்டும் நமக்கு இருக்குமானுல் மரணம் கருணை வாய்ந்தது என்பதை எளிதில் கண்டு கொள்வோம்."

"ஐயா! தயவு பண்ணிச் சொல்லுங்கள். இன்னும் சொல்லுங்கள். எல்லாம் நல்லதற்குத் தான் என்று சொல்லும் போலி வேதாந்தத்தைக் கேட்டு என் மனம் புளித்துப் போயிருக்கிறது. தாங்களாவது நடைமுறைக்கு ஏற்புடையதாய், அறிவோடும் கூடியதாய் ஏதாவது சொல்லுங்கள். சாவு எப்படி மிக நல்லதாய் இருக்க முடியும்? தப்பு."

"பெண்ணே! தலை நாள் நடந்தது எதுவும் மறு நாள் உனக்கு நினைவிருக்காது என்று வைத்துக் கொள்வோம். நேற்றைப்பற்றிய நினைவு சிறிதுமின்றி நீ காலையில் எழுந்திருப்பாய். நிறைந்த சக்தி இருப்பதை நீ தெரிவாய். புல்லின் தலையில் பனித் துளி அரும்பி நிற்கும். ஞாயிற்றின் கதிர்கள் கவினொளி வீசிக் கதகதப் பூட்டும். புள்ளினம் பாடும். இயற்கை அற்புதமானது என்றே கொள்வாய். பின்னர் கதிரவன் உச்சிக்கு ஏறிச் செல்வான். உனக்குச் சிறிது களைப்புத் தட்டும்.

"உச்சிப்பொழுது வந்ததும் நீ களைத்துப்போவாய். பிறகு மேகங்கள் வந்து பகலவனை மறைத்து விடும். இடியும் கடுகி வரும், காற்றும் கலந்து சுழற்றும் உன்னோடு உறவாடியிருந்த வானம் இப்பொழுது உறுமி நின்று அச்சுறுத்தும். வானத்தின் துளைகள் எல்லாம் திறந்து கொண்டனபோல் சரமாரியாய் நீர் பொழியும். வெள்ளத்தில் மூழ்கி விடுவோமோ என்று நீ பிரமிப்பாய். வானின் வயிற்றைக் கிழித்துக் கொண்டு மின்னற் கொடிகள் ஊடுருவிப்பாயும், செவிடுபடும்படி இடி முழக்கம் செய்யும். நீ அச்சத்தில் ஆழ்ந்து போவாய்.

"பிறகு மேகங்கள் அகன்று செல்லும். சூரியன் மீண்டும் வெளியில் வருவான். காற்றும் தூயதாகி அமைதியுற எங்கும் இலங்கி விடும். நீ மீண்டும்

நம்பிக்கையைப் பெறுவாய். நீள நீளமாய் நிழல் சாய்வதைப் பார்ப்பாய். சூரியன் மறைவான். எங்கும் இருள் வந்து கவியும். நீ ஒரு விளக்கின் அருகிலே ஒண்டிக் கிடந்து அடுத்து வருவது என்னென்று நோக்கி யிருப்பாய். களைப்புத் தோன்றும். அச்சமும் ஒரு பக்கம் இருக்கும். ஆரம்பத்தில் அழகுடன் மலர்ந்த இயற்கை பின்னர் உன்னை மோசம் செய்து விட்டது என்றே நீ கருதுவாய். உன் நம்பிக்கையை இழந்து விடாது வைத்திருக்கத்தான் நீ முயன்று பார்ப்பாய். முடிவில் தோல்வி தான் உனக்குக் கிடைக்கும்.

"விளக்கைச் சுற்றிக் குந்தியிருக்கும் உனக்கு வேண்டிய அருமையானவர்கள் எல்லாரும் இளைப்பின் களைப்படைந்து காணப்படுவர். அவர்கள் தலைகளும் ஆட்டம் கொடுக்கும். கீழே படுப்பார்கள். கண் இமைகள் பொருந்தும். திடீரென்று தன்னுணர்வை இழந்து விடுவார்கள். உனக்கும் கீழே படுக்க வேண்டும் என்ற எண்ணம் வரும். படுத்தால் தன்னுணர்வை இழக்க வேண்டிய நிலை உனக்கும் வரும் என்பதைத் தெரிவாய்.

"நான் சொல்லும் இவைகள் எல்லாம் உனக்கு இப்பொழுது ஏருது. ஏனெனில் இக்குறிகள் யாவும் அன்றுட வாழ்க்கையில் உள்ளவையே என்பது உனக்குத்தெரியும். இவ்விதம் தன்னுணர்வை இழப்பது உறக்கம் தான் என்பது உனக்குத் தெரியும். அவ்விதம் உறங்கினுல், மீண்டும் சில மணி நேரங்களில், நன்கு களை தீர்ந்து துயில் எழுவாய் என்பதும் உனக்குத் தெரியும். பொழுது புலர்ந்ததும் புள்ளினம் பாடிட சூரியன் உதித்து வருவான் என்பது தெளிவு. வானம் குமுறி இடி முழக்கம் செய்ததெல்லாம் இயற்கை யமைப்புத் திட்டத்திலே ஒரு பகுதி. கடலில் இருந்து நீரை முகந்து மலை முகடுகளிற் கொண்டுபோய்

அங்கிருந்து ஆறும் அருவியுமாய் இறங்கிக் கால்வாய் களாய்ச் சென்று வெளியிடங்களில் பயிர் பச்சைகளைத் தோன்றச் செய்வதற்கான வழிதான் அது. புதிய வலிமைபெற்று மறுநாள் நீ விளங்க வேண்டியேஇரவில் உனக்கு இயற்கை துயிலைத் தருகிறது. அத்தகைய துயிலைத் தடுத்து நெடு நேரம் இரவில் நீ கண் விழித்தல் கூடாது. இயற்கை உன் நலத்திற்காகவே உன்னுடன் ஒத்துழைக்கிறது. இவ்வுண்மைகளை நீ தெரிந்துகொண்டிருப்பதால் உனக்குத் தினசரி வாழ்க்கையிலே வியப்பில்லை. கலக்கம் இல்லை. ஆனால் இவ்விதம் தொடர்புபடுத்தி அறியும் அனுபவ அறிவு இல்லாதுபோனால் என்ன ஆகும்? ஒரே இருளாகத்தான் இருக்கும். அதுபோலவேதான் நாம் உயிர் வாழும் நிலையும் இருக்கிறது. பிறப்பு முதல் இறப்பு வரை நடப்பனவே நாம் கண்டவை. அவற்றிற்கு முன்னும் பின்னும் உள்ளவை நம் அறிவுக்கு எட்டாதவை. ஆதலால் சாவும் நமது உயிர் வாழ்வுக்கு இயற்கை உதவும் உறக்கம்தான். அதை நாம் விருப்போடு ஏற்போமாக."

"உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு."

"சுவாமி! இறப்பைத் தடுப்பதற்கு வழியே இல்லையா?"

"பெண்ணே! ஏன் வழியில்லை? நீ அரிய நோன்பு களைச் செய்து கடுந் தவங்கள் இயற்றினால் உனக்குச் சாவைத் தடுக்கும் ஆற்றல் உண்டாகும்."

"கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு."

"சுவாமி! அப்படியானால் இவ்வுலகில் நாம் வேண்டுவது என்ன?

"பெண்ணே! நீ இந்த உலகில் எதையாவது விரும்பினுல், அதைப் பெறுவதற்குப் பிறந்துதானே ஆகவேண்டும்? பிறந்தால் மீண்டும் இறக்கவும் வேண்டும். இந்த உலகில் நாம் வேண்டத் தக்கது ஒன்றும் இல்லை. ஏனெனில் இந்த உலகிலுள்ள எதுவும் நிலையில்லாதது. ஆதலால் இவ்வுலகில் பிறவாதிருத்தலையே நாம் விரும்ப வேண்டும். ஆசையை அறவே ஒழிப்பதுதான் அதற்கு வழி. என்று நீ இவ்வுலகில் ஒன்றும் இல்லை, இது நமக்கு வேண்டாம் என்று உறுதி கொண்டு அதற்கு ஏற்ப ஒழுகிறையோ, அன்றே பிறப்பு இறப்புக்களின் வேதனையும் நீங்கிவிடும்."

> "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
> வேண்டாமை வேண்ட வரும்."

"சுவாமி! இளமைக் காலம் முழுதும் இவ்வுலகில் அனுபவிக்கக்கூடிய இன்பங்களையெல்லாம் விடாது நுகர்ந்து, பின் முதிய பருவத்தில், தான தருமங்கள், செபதபங்கள், நியம நிட்டைகள், யோகவிரதங்கள் எல்லாம் செய்யலாம் என்றுதான் இருந்தோம்."

"பெண்ணே! நல்ல காரியங்களை நாளைக்குப் பார்க்கலாம் என்று ஒத்திப்போடுவது கூடாது. நாளை நாள் நம்முடைய நாளா? நமனுடைய நாளா? என்று ஒருவருக்கும் தெரியாது. நல்ல உடல் நலக் கட்டோடு இருந்த உன் காதலன் திடீரென்று மாண்டதை நீ கண்ணெதிரே இப்பொழுதுதானே கண்டாய். ஆகவே நம் உயிருக்கு உறுதியளிக்கும் நல்வினைகளை இன்றே இப்பொழுதே தட்டின்றித் துணிந்து செய்யவேண்டும்."

> "நாச்செற்று விக்குள் மேல் வாராமுன் நல்வினை
> மேற் சென்று செய்யப் படும்."

திருவள்ளுவர் மறைந்தார். அவர் கூறிய "நல்வினையை உடனே செய்" என்ற குறள் ஒலி நாற்றிசையும் ஒலிக்கத் தொடங்கியது. பெண் துறவு பூண்டாள்.

---

# வாழ்வது எப்படி?

வாழ்வது எப்படி என்பதைப்பற்றி ஏவ்பரி, டேவன் போர்ட் ஆடம்ஸ், ஜேம்ஸ் ஆலன் போன்ற பல மேல் நாட்டு ஆசிரியர்கள் பல நூல்கள் ஆங்கிலத்தில் எழுதியுள்ளார்கள். அவைகளை நம் மாணவர்கள் படித்து விட்டு, " அடாடா! தமிழில் ஏன் இப்படி நூல்கள் எழுதப்படவில்லை?" என்று வருந்துவார்கள். ஆனால் அப்படி நாம் ஒன்றும் வருந்த வேண்டியதில்லை. நமது திருக்குறள் நூல் இருக்கிறது. வாழ்வது எப்படி என்பதை வகுத்துக் காட்டுவதற்கவே அந்நூல் எழுதப்பட்டது. அந்நூலினைக் கசடறக் கற்று அதன் படி ஒருவன் நடந்தால், இம்மண்ணுலகையும் விண்ணுலகாக மாற்றி மனிதன் அமர வாழ்வை இங்கே இப்பொழுதே, இவ்விடத்திலேயே எய்தலாம். இதை மனத்துட் கொண்டே திருவள்ளுவர் பாடினார்:—

" வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்."

பொதுவாக உலகத்தில் வாழ வேண்டிய சிறந்த வாழ்க்கை முறையை, High Thinking and Simple Living என்று ஆங்கிலத்தில் சொல்லுவர்ர்கள். அதனைத் தமிழில் நாம், உயர்வாய் உள்ளலும் எளிதாய் வாழ்தலும் என்று சொல்லலாம். எளிய வாழ்க்கை என்பது ஏழை வாழ்க்கையன்று. வறுமையில் வாடி வதங்குவது வாழ்க்கையாகாது. வறுமைக் கோயிலில் வரங்கிடந்து வழி வழியடியார்களாய் வாழ்த்தி வணங்கி வழியற்றுப் போனோம். வறுமையால் இரந்துண்டு தான் ஒருவன் வாழவேண்டும் என்று படைப்புக்கடவுள் விதிப்பானேல் அக்கடவுள் கெட்டொழிவதாக என்ற திருவள்ளுவர் வாக்கு நெடுங்காலத்திற்கு முன்னரே எழுந்துள்ளது.

" இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக உலகியற்றி யான்."

பலர் வறுமையைத்தீர்ப்பதற்குப் பிச்சை எடுப்பதை ஒரு தொழிலாக மேற்கொள்கின்றனர். இது தவறு. இது நெறியும் நேர்மையும் ஆகாது. இரப்பது என்பது ஓராது செய்யப்படுவதால், இது முருட்டுத்தனம் அல்லது தடித்தனம் என்று கண்டிக்கிருர் . திருவள்ளுவர்:—

" இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில். "

யாசிப்பது மிகவும் இளிவந்த செயல். வறுமையைத் தீர்ப்பதற்குரிய நெறி முயற்சி ஒன்று தான். முயற்சி திருவினையாக்கும். முயற்சி மெய் வருந்தக் கூலி தரும். மண் மகளாகிய நம் அன்னை தன் வயிற்றினகத்தே நமக்கு வேண்டிய பொருள் களை யெல்லாம் வைத்திருக்கிருள். அவள் முன்னே 'எனக்கு ஒன்றும் இல்லையே' என்று கை மடிந்து ஒருவன் வாடி நிலங் கவிழ்ந்திருப்பானுனல், நிலமகளே அவனைப் பார்த்துச் சிரிப்பாள் என்கிருர் திருவள்ளுவர் :—

" இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்
நிலமென்னு நல்லாள் நகும்."

இன்னுர் இனியார் என்றில்லாமல், யாவர்க்கும் தன்னை நாடிவந்து தன் மேனியைத் தொட்டவர்க்கு வேண்டும் பொருள்களை விரும்பிக் கொடுப்பதால் நிலம் என்னும் நல்லாள் என்று கூறினுர். நெற்றி வேர்வை நிலத்தில் விழப்பாடுபட்டவர் பயன் பெறுவது நிச்சயம். தான் உண்பது சாவா மருந்தாயினும் அதனைப் பிச்சை எடுத்து உண்பதானல் அது நஞ்சுதான். தான் உண் பது காடிக் கஞ்சியாயிருப்பினும் அது தான் உழைத்து சம்பாதித்ததாயிருந்தால் தேவாமிர்தம்தான். தன் முயற்சியால் வந்ததை உண்பதே மேல் என்கிருர் வள்ளுவர்:—

"தெண்ணீர் அடுபுற்கை யாயினுந் தாள்தந்த
துண்ணலின் ஊங்கினிய தில்."

மக்கள் யாவரும் இன்பம் துய்த்தற் பொருட்டே இவ்வுலகிடைத் தோன்றியுள்ளனர். இவ்வுலகில் இன்பம் காணுத ஒருவன் வேறு எவ்வுலகிற் சென்று தான் அதை அடையப் போகிறுன்? மனிதனைத் துன்புறுத்துவதற்காகவா பல் வகைப் படைப்புக்களையும், உலகியலையும், அறிவையும் இறைவன் படைத்திருப்பான்? ஒரு போதும் இல்லை. அவ்விதம் நினைப்பதே இறைவனின் பேரருள் திறத்தைச் சிறுமைப் படுத்தியது போலாம். இவ்வுலகம் பொய் என்பார் கூற்று முற்றிலும் பொய்யேயாகும். இவ்வுலகம் மெய்யானது. அதில் இன்பமும் இருக்கிறது, துன்பமும் இருக்கிறது. யார் யார் எதனை விரும்புகின்றனரோ அவர்கள் அதனைத் தவருமல் அடையலாம். அவ்விதம் அடைவது அவர்களது அறிவின் திறனைப் பொறுத்தது.

எல்லா மக்களும் இன்பத்தை நாடி நிற்கின்றனர் இன்பம் அவர்களுடைய பிறப்புரிமை. அதை நாம் ஒவ்வொருவரும் அடையலாம். ஆனுல் ஒரு சிலரே இன்பம் அடைகின்றனர். துன்பமே பலரும் கொள்வது. அதற்குக் காரணம் என்ன? அவர்கள் நன்கு சிந்தியாததேயாகும். சிந்தனையே மனிதனுக்குச் சிறப்பளித்து நிற்கிறது. அதனையே மன அறிவு, பகுத்தறிவு, ஆராய்ச்சித் திறன் என்றெல்லாம் கூறுவர். விலங்குகளினின்றும் மனிதனை உயர்த்திக் காட்டுவது பகுத்தறிவு தான். நல்லனவும் தீயனவும் நாடி, அவற்றுள் தீயனவற்றை விடுத்து நல்லனவற்றைக் கொள்ளும் திறனே பகுத்தறிவாகும். இந்நிலையில் நல்லன யாவை என்ற கேள்வி எழும். நம் உள்ளத்திற்கு உவகை தர வல்லன எல்லாம் நல்லவையே

நல்லாடை, நல்லுணவு, நறுமணம், நற்காட்சிகள், நல்லிசை, இவையெல்லாம் நமக்கு இன்பம் அளிப்பனவேயாகும். இத்தகைய ஐம்புல நுகர்ச்சிக்குரிய பொருள்களை யெல்லாம் நாம் அடைய முயல வேண்டியதுதான். அவற்றை அடைவது பெரிதன்று. முயற்சி பலிக்காது போயினும் அதற்காக வருந்தலாகாது. ஆனல் அம்முயற்சியும் நுகர்ச்சியும் எவ்வாறு அமைய வேண்டும் என்பதைப்பற்றியே நாம் நம் சிந்தனையைச் செலவிட வேண்டும்.

முதலாவது நுகர்ச்சியை எடுத்துக் கொள்வோம். ஒரு பலாப்பழம் இருக்கிறது. அதன் தித்திக்கும் தேமதுரச் சுளைகள் நம் புத்தியைக் கவர்ந்து, நாவில் நீர் சொட்டுகிறது. சுளை சுளையாக எடுத்து உண்ணுகின்றோம். உண்ண உண்ணத் தெவிட்டாத இனிமையாகத்தான் இருக்கும். ஒன்றன்மேல் ஒன்றாக நாக்கு வேண்டி நீள்கிறது. நாமும் வயிற்றை நிரப்பி விடுகிறோம். பின்னரும் உண்ண நினைத்தால் வயிற்றைக் குமட்டுகிறது. பலாப்பழம் என்றால் வெறுப்புத் தோன்றுகிறது. பின்னர் பல நாட்களுக்கு வயிற்று நோயால் துயரம் அடைகின்றோம். அவ்வாறாயின், பலாப்பழம் இன்பம் தரவல்லதோ? துன்பம் தரவல்லதோ? பலாப்பழம் இன்பம் தரவல்லதுதான். ஆனல் ஓர் அளவோடு நிறுத்திக்கொள்ள வேண்டும். அதற்கு மேற்பட்டால் துன்பமாகவே முடியும். அவ்வாறு அளவுடன் மட்டுப்படுத்திக் கொள்வதற்கு நம் அறிவைக்கொண்டு ஐம்புலன்களையும் கட்டுப்படுத்த வேண்டும். அதனல் இன்பமானது ஐம்புல நுகர்ச்சியிலே மட்டும் அமைந்து விடவில்லை. நமது அறிவைக் கொண்டு அப்புலன்களை ஆளும் திறத்திலேயே இன்பம் அமைந்துள்ளது என்பது தெளிவாகும். ஐம்புலன்களும் ஐந்து முரட்டு யானைகள். அவற்றிற்குப் பாகன் நமது மனமேயாகும்.

இந்த யானைகளோ பாகனையும் இழுத்துக் கொண்டு காடுங் கரையும் கால் விட்டோடும். அவற்றை நாம் நமது அறிவாகிய அங்குசத்தாலே அடக்கி நன்னெறியில் திருப்ப வேண்டும். அவ்விதம் அடக்கினால் தான் நாம் ஓர் அளவோடுங் கூடிய மிதமான வாழ்க்கையை நடத்தித் துன்பத்தில் அழுங்காது இன்பம் எய்துதல் கூடும். இதனைத் திருவள்ளுவர்

"உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து."

என்று கூறினார்.

ஆனால் மனிதனுக்கு ஐம்புல நுகர்ச்சியோடு மட்டும் அவனது இன்பம் நின்றுவிடவில்லை. விலங்குகளும் கூடத்தான் ஐம்புல உணர்ச்சியும் நுகர்ச்சியும் கொண்டுள்ளன. இத்தகைய இன்பம் நம் உடலோடு அமைந்ததொன்று. இவ்வைம்புல நுகர்ச்சியிலே மட்டும் முனைந்து நின்று அதற்கிசையத் தம் வாழ்க்கையை நடத்தும் மக்கள் உண்மையான இன்பம் எய்தியதாகக் கூற முடியாது. அவர்கள்பெறும் இன்பம் சிற்றின்பம். அது தன்னலம் கருதித் தான் படைத்த பொருளாற் பெறும் வெற்றின்பமே யாகும். ஆனால், நம் உடலினுள்ளே ஒளி வீசி உலவி நிற்கும் உயிர் அல்லது ஆன்மா அதைவிடச் சிறந்த மேலான என்றும் கெடாத பேரின்பம் ஒன்றை நாடி நிற்கிறது. அதுதான் அன்பு எனப்படுவது. நமது உற்றார் உறவினர்களும், நண்பர்களும், அயலாரும் நம்மீது அன்பு காட்டி ஒழுகும்போது அளப்பிலா மகிழ்ச்சியில் நாம் ஆழ்ந்து விடுகிறோம். நமது உள்ளத்தில் உவகை வெள்ளமிட்டுப் பாய்கிறது. "இன்பமே என்னுடை அன்பே" என்றார் மாணிக்கவாசகர். திருவள்ளுவர் "அன்புற்றமர்ந்த வழக்கென்ப வையகத்தின்புற்றார் எய்துஞ் சிறப்பு" என்று கூறினார்.

பிறர் காட்டும் அன்பு நமக்கு இன்பம் அளிக்கிறது என்ருல், நாமும் பிறரிடத்தில் அன்புடையவராகப் பயில வேண்டுவது நமது கடமை. அக்கடமையை ஆற்றுவதிலேயே நமது இன்பமும் அமைந்திருக்கிறது. அன்பைப் பிறரிடமிருந்து நாம் வலிதிற்பற்ற முடியாது; பொருள் கொடுத்து வாங்கவும் முடியாது. அவ்விதம் பெறினும் அது போலியன்பாய்ப் போயொழியும். உண்மை அன்பிஞலேதான் உண்மை அன்பைப் பெறலாம். இவ்வன்புப் பயிற்சி மனிதனுக்குத் தன் இளமைப் பருவத்திலிருந்தே ஏற்பட வேண்டும். இளமையில் உடன் பிறந்தார் உறவினர்களிடத்தில் உண்மையான அன்பும் பெற்ருேர்களுக்குப் பணிவும் அடக்கமும் உண்டாகும் முறையிற் குழந்தைகளைப் பயிற்றுவித்தால், பிற்காலத்தில் அக்குழந்தைகள் தாம் வாழும் சமூகத்திடை அன்பு கொண்டு பிறரோடு எவ்விதம் பழகி வாழ்வது என்பதை அறிந்து அதன்படி நடப்பர். மனிதனின் உயர்வின்ப வாழ்க்கைக்கு அன்பே உயிர். அன்பில்லாதவன் உயிரற்ற செத்த பிணத்தோடு ஒப்பான். இதனை,

"அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு."

என்று திருவள்ளுவர் இனிது கூறிஞர்.

இவ்விதம் அன்பு ஏற்பட்ட இடத்தில் பொய் அறவே அற்றுப் போகும். அன்பு மனதைத் தூய்மை செய்யும், செயல்களைச் செம்மைப்படுத்தும். இனிய மொழிகளையே இயம்பச் செய்யும். மன மொழி மெய்கள் ஒன்றுபட மனிதன் வாழவேண்டும். அதுவே நடலையற்ற உண்மையான தூய வாழ்வு. அதுவே நாம் இவ்வுலகத்தில் வாழவேண்டிய அறவாழ்க்கை என்கிருர் வள்ளுவர்.

" முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானும்
இன்சொ லினதே அறம். "

பலர் தமக்குத் தெரியாத ஒன்றைத் தெரிந்தது போல் நடிப்பர். இவர்களுடைய அறியாமை எப்படியும் சீக்கிரத்தில் வெளியாகிவிடும். பின்னர் அவர்களுக்குத் தெரிந்தவைகளைக் கூட தெரியாது என்றே உலகத்தார் சந்தேகப்படும்படியான நிலை ஏற்பட்டுவிடும். இதனை,

" கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉம் ஐயந் தரும். "

என்று வள்ளுவர் குறித்தார்.

இதுபோலவே தம்மிடம் இல்லாத ஒன்றை இருப்பதுபோல் பாவிப்பதும், தம் அகத்து ஏழைமை நிலையைப் புறத்தே ஆடம்பரத் தோற்றங்களினால் மூடி வைப்பதும், இவை போன்ற பிறவும் மனிதர்க்கு இறுதியில் பெருந் துன்பமாகவே முடியும். வீண் பெருமையையும், ஆரவாரங்களையும் தவறுக மானம் என்று மயங்கி மதித்து, மணல் முகட்டில் மாளிகை கட்டும் மன்பதைகள் பலராவர். அடிப்படை யில்லா அரண்போன்ற அவர் வாழ்க்கை அல்லலிற் பட்டு அழியும் பொழுது, "ஆ விதியே! அந்தோ கொடுமை!" என்று அலறு நிற்பர். எடாத எடுப்பு எடுத்தால் படாதபாடு பட வேண்டியதுதான். வீண் இடம்பம் வீய்ந்தொழிவது வியப்பாமோ? அவர் தம் நடலை வாழ்வினால் இவ்வுலகை நரகமாகவே மாற்றிக் கொண்டவராவர். ஒருதரம் புத்தி வந்த பிறகாவது தவறான வழியைத் தவிர்க்க வேண்டும். மீண்டும் அதிலே புகுவது அறிவாகாது.

" எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று. "

என்ற திருக்குறளை நோக்குக.

ஒருவன் எவ்வளவுக்கெவ்வள்வு தன் தேவைகளைச் சுருக்கிக் கொள்ளுகிறுனே அவ்வளவுக்கவ்வளவு அவன் துன்பங்களும் குறைகின்றன. துன்பம் குறையக் குறைய இன்பம் வளரும் அல்லவா? இதனை நமது நாயனுர் எவ்வாறு கூறினுர் பாருங்கள்.

" யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன். "

இன்பம் இருக்கட்டும், துன்பம் இல்லாமலாவது வாழ வேண்டாமா? பிறருக்கு நாம் துன்பம் செய்தால் தான் நமக்கும் துன்பம் வருகிறது. பிறருக்குத் துன்பம் செய்யாவிடில் நமக்கும் துன்பம் இல்லை. பின், பிறருக்குத் துன்பம் செய்யாமலாவது நாம் வாழலாம் அல்லவா?

" நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர். "

---

# மானம் அழிவதா !

“ நம்மான மாற்றிந மக்கரு ளாய் நின்ற
பெம்மானைப் பேயுட டைல்பு ரிந்தானை
அம்மானை யந்தணர் சேருமணிகாழி
எம்மானை யேத்தவல் லார்க்கிட ரில்லையே .” —சம்பந்தர்

மானம் என்ற சொல் அடிக்கடி நமது காதில் அடிபடுகிறது. சிறு பாலர் முதல் பெரியோர் வரை மானம் மானம் என்று பேசுகின்றனர்.மட்டு, மானம், மரியாதை தெரியாதவன் என்கின்றனர். அதன் பொருள் என்னவென்று மட்டும் பலருக்குத் தெரியாது. மானம் என்பதற்குப் பொருள் கேட்டால் வானத்தைப் பார்ப்பார்கள். திருவள்ளுவர் ‘ மானம் ’ என்றே ஒரு தனி அதிகாரம் வகுத்திருக்கிறார். மானம் என்ற சொல்லுக்குப் பரிமேலழகர் மிக அழகாகவும், தெளிவாகவும் பொருள் தந்திருக்கிறார். மானம் என்பது, “ எஞ்ஞான்றும் தந்நிலையில் நின்று தாழாமையும், தம்மால் தடுக்க முடியாதபடி ஒரு தாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமாம். ” தன் நிலைக்கும், உயர்வுக்கும், குடிப்பிறப்புக்கும் புகழுக்கும் ஒரு குறைவு ஏற்படுவதாய் இருந்தால், உடனே உயிரை விட்டுவிடுவது தான் உத்தம மனிதனின் பண்பு. உயிரைப் பெரிதாக மதித்து இழிதொழில் புரிவதும், பாவச் செயல்களில் ஈடுபடுதலும் மானமாகாது. உயிர் வேண்டுமா? மானம் வேண்டுமா? என்றால், மானம் வேண்டும் என்பவனே மனிதன். தன் மயிர்த்திரளில் ஒரு மயிர் நீங்கினும் கவரிமான் எவ்வாறு உயிர் வாழாதோ, அதுபோல், தன் மானம் இழக்க வந்த இடத்துத்தன் உயிரையும் இழக்கத் தயங்காத மனப்பண்பே மானம்.

‘ மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின். ’

ஒரு நாள் இல்லாவிடில் இன்னொரு நாள் உயிர் போகத்தான் போகிறது. ஆதலால் உயிர் நிலையில்

லாதது. ஆனால் மானமோ என்றும் அழியாது நிலைத்து நிற்பது. எனவே, நிலையில்லாத உயிரைவிட நிலையாக வுள்ள மானத்தையே ஒருவன் காத்தல் வேண்டும். எவ்விடத்தும் நிலை குலையாத திண்மையை உடையவனிடத்திலேயே மானம் தோன்றுதல்பற்றி, அதனைப் ‘பேராண்மை’ என்று பேசுகின்றார் திருவள்ளுவர். மற்றோரிடத்தில் மானத்தைப் பெருந்தகைமை என்றும், பீடு என்றும் பேசுகின்றார். மானம் என்பதைப் பணியாமை என்றும் குறளாசிரியர் குறிப்பிடுகின்றார். இங்கே பணியாமை என்பது, தாழ்வு வாராமல் தன் குடிப்பிறப்பாகிய பழைய உணர்ச்சிக் கண்ணே நிற்றல். ஆனால் எப்பொழுதுமே பணியாது, வளையாது, தாழாது தலை நிமிர்வது மானம் ஆகாது என்றும் திருவள்ளுவர் கூறியுள்ளார். எப்படி யென்றால ஒருவனுக்குச் செல்வம் வந்து குவிந்து அவனை உயர்த்தும் பொழுது அவன் பணிய வேண்டும். நல்குரவால் நலிவுற்றுத் தாழும் பொழுது தான் உயர்ந்து பணியாது இருக்கவேண்டும். எனவே இவ்விரண்டு நிலைகளாகிய பணிதலும் பணியாமையும் மானமுடையவன் செயல்களேயாகும்:—

‘ பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு.’

மனிதனுக்கு மனிதன் அடிமையாகி உயிர் பிழைப்பதற்காக இழி தொழில் புரிவது மானமாகாது. மனிதனுக்கு மானம் உயிரை விடவும் பெரிதுதான். ஆனால் கடவுளை உண்டென்று அறிந்து அவனுக்கு ஆளாகி நாம் வழிபடுவதற்கும் இந்த மானவுணர்ச்சியாகிய சுயமரியாதை வந்து குறுக்கிட்டு நம்மைக் கெடுத்து விடுதல்கூடாது. உலக வாழ்க்கைக்கு மானம் இன்றியமையாது வேண்டப்படுவது தான். ஆனால் சமய வாழ்க்கையில் இந்த மானம் புகுந்து, ஆண்டவன் திரு முன்னர் நம்மை வணங்காமுடி

மன்னர்களாகச் செய்துவிடக்கூடாது. நாம் மானம் என்று பேசுகின்ற மனப்பான்மை இறைவன் முன்னிலையில் மன்று அடியோடு மாய்ந்தொழிய வேண்டும். மனிதன் தகுதிக்கும், மனித அறிவுக்கும், மனிதன் மானத்திற்கும் உகந்த செயல் கடவுளின் காலடியில் விழுந்து பணிவதுதான் என்பதைத் திருவள்ளுவர் தமது இரண்டாவது குறளிலேயே ஐயந்திரிபற எடுத்து ஓதியுள்ளார் :—

"கற்றதனால் ஆய பயன் என் கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்."

இக்காலத்துப் படிப்பாளிகளின் செயல் இதற்கு ஏறுக்கு மாறாய் இருக்கிறது. அதிகம் படித்தவர்கள், அரைகுறைப் படிப்பாளர்கள் எல்லோரும் கோயிலைக் கண்டால் கும்பிடக் கூசுகிறார்கள். ஏன்? மானம் வந்து தடுக்கிறது. தாம் கும்பிடுவதைக்காணும் பிறர் தம்மைக் கல்லாதவர் என்று ஏளனம் செய்வார்களோ என்ற எண்ணம், மிகவும் தவறான எண்ணம். ஒருவரும் காணாத இடத்தில் கோயிலைக் கும்பிடுவதும், பல கூட்டாளிகள் மத்தியில் கோயிலைக் கண்டு வணங்காது செல்வதும் ஆகிய பகுத்தறிவாளர்களையும் நாம் பார்த்து வருகிறோம். திருக் கோயிலின் முன்னர் இடுப்பிலே துண்டைக் கட்டிக் கைகூப்பிக் கும்பிடுவதால் தமது படிப்பிற்கும், உயர்நிலைக்கும், உயர்ந்த பதவிக்கும், உத்தியோகப் பெருமைக்கும், அறிவின் ஆற்றலுக்கும் ஒரு குறைவு ஏற்பட்டுவிடுமென்று எண்ணுகின்ற மிகவும் பெரிய மனிதர்களும் உண்டு. இத்தகைய தவறான தன்மான உணர்ச்சி வந்து தடுப்பதால் அரைகுறைக் கும்பிடுகள் போடுகிறவர்களும் உண்டு. இறைவன் முன்னர் ஓணானைப் போல் தலையை ஆட்டிக்கொள்பவர்களும், கையை மார்புவரைக் கொண்டுவந்து, நடுக்கு வாதக்காரர்

போல், மாரடிப்பவர்களும், கழுத்தில் கிடக்கும் உத்தரீகத்தை அடுக்கு உலையாமல் அழுக்குப்படியாமல் அங்கையினுல். தொட்டுப்பார்த்து அவ்வளவிலே ஆண்டவனுக்கு மரியாதை செய்துவிட்டதாக நினைப்பவர்களும், இப்படியாகப் பலவகையினர் தங்கள் சுயமரியாதையைக் காப்பாற்றிக்கொண்டு வருகின்றுர்கள். கோயில் சந்நிதியில் கீழே விழுந்து கும்பிட்டால் வேட்டி சட்டை அழுக்காகிவிடும். கண்டவர்கள் கேலி செய்வார்கள். மானம் மலையேறி விடும். கைகளை யெடுத்துத் தலைமேற் கூப்பி அஞ்சலி செய்யக் கூசுதல், தலையைக் கீழே தாழ்த்தி ஆண்டவனை வழிபடுதலை இகழ்தல் போன்ற இவை யெல்லாம் தவருன மானவுணர்ச்சியின் விளைவுகளே யாம். ( False notions of Pride, Dignity and Prestige)— இந்தப் பிழைபட்ட பெருமை உணர்ச்சி மனிதனுடைய உண்மையான பக்தியை ஊதி விரட்டியடிக்கிறது.

இறைவனுக்கு அடிமையாவது என்றுல் பலர் மனம் இடம் கொடுப்பதில்லை. மானம் என்பதே இன்னது என அறியாது மானம் பேசுவார்கள், வீரம் விளைப்பார்கள் பேச்சளவிலே. அனைத்துலகையும் ஆட்டி வைத்தவனுன சூரபதுமன் குமரக்கடவுள் முன்னிலையில் ஆற்றல் அழிந்து கூழ்க்கூழாகக் குமைந்து குன்றி நின்றபோதும் கும்பிட மறுத்து விட்டான்; முருகன் முழுமுதற்கடவுளே என்பதை நன்கு உணர்ந்த பின்னும், அவன் தலையைப் பணிய விடாது தடுத்து நின்றது இந்த மானமேதான். சூரனின் சேனை அழிந்தது, ஆற்றல் அழிந்தது, அகந்தை அழிந்தது, ஞானம் பிறந்தது, நாயகனையும் நேரே கண்டான். ஆனுல் மானம் மட்டும் போகவில்லை. கடவுளை வணங்க மறுத்துவிட்டான். அஞ்சலிக்கக் கரங்கள் துடித்தன. வணாங்குவதற்குத் தலையும்

துடித்தது. வந்திக்க நாக்குத்துடித்தது. வலம்வரக் கால்கள் துடித்தன. ஆளாவதற்கு மனமும் துடித்தது. இத்தனையும் செய்யாதபடி மானமே அவனைத் தடுத்துக் கெடுத்தது :—

"சூழுதல் வேண்டுந்தாள்கள் தொழுதிடல் வேண்டும் அங்கை
தாழுதல் வேண்டுஞ் சென்னி துதித்திடல் வேண்டும் தாலு
ஆழுதல் வேண்டுந் தீமை அகன்று நான் இவர்க்காளாகி
வாழுதல் வேண்டும் நெஞ்சம் தடுத்தது மானம் ஒன்றே."

நம் மானத்தைப் பெரிதாக மதித்து நம் சுதந்திர உணர்ச்சியைப் பயன்படுத்தி நம்மை அடிமையாக்காது காத்துக்கொள்ள வேண்டிய இடங்கள் அளவற்றன இருக்கவும் அவற்றோடு போராடி நாம் விடுதலை அடைய முயலாமல், இறைவன் வழிபாட்டில் நாம் வீணாக மானத்தைக் காட்டுகின்றோம். ஆண்டவனை மறந்தும் மறுத்தும் நாம் அல்லலுக்கு ஆளாகின்றோம். தன் மானவுணர்ச்சி மேலிட்டால் தலைநிமிர்ந்து தருக்கித்து ஆண்டவனிடத்திலிருந்து விடுதலை பெற்றுவிட்டதாக நினைக்கின்ற பெரியார்கள் எல்லாம், உண்மையில் அடிமைத் தளையை அறுத்துவிட்டார்களா? ஐந்து பூத ஆட்சியிலிருந்தும், பஞ்சேந்திரிய வஞ்சத்திலிருந்தும், ஆர்வச் செற்றக் குரோதங்களிலிருந்தும், நோய் நொடிகளிலிருந்தும் தப்பிவிட்டார்களா? அவற்றை மறந்தார்களா? அல்லது வெறுத்தார்களா? பசி வந்த உடன் அவர்களுடைய பத்தும் பறந்து போகாமல் நின்றனவா? பசியின் முன்னரும் அவர்கள் மானம் பதிந்து நின்றதா? கவரிமான் போல் உயிரை விட்டனரா? உயிர்வாழ ஆசைப்பட்டு எத்தகைய இழிதொழிலை யெல்லாம் புரிகின்றார்கள்? பொன்னாசை போயிற்றா? மண்ணாசை மண்ணாகியதா? இந்த உணர்ச்சிகளுக்கெல்லாம் உலுத்த அடிமைகளாய்

உழன்று திரிபவர்கள், இறைவன் சந்நிதானத்திலே மட்டும் மானம் பேசுவது ஏன்? அத்தகையவர்களும் ஆண்டவன் படைப்பிலே எப்படித் தோன்றினுர்கள்? எதற்காகத் தோன்றினுர்கள்? தோன்றிற் புகழொடு தோன்றுக, அஃதிலார் தோன்றலில் தோன்ருமை நன்று என்று வள்ளுவரும் சொன்னுரே! இவர்கள் என்ன நல்ல காரியம் சாதிப்பதற்காக இங்கு வந்தார்கள்? மானத்தின் பேரால் விடுதலை கூறிக் குழியிற் படுதலைக் கண்ட பாவிகள், இறைவனே மறந்து, நெறியினை யிறந்து, சிறந்த மானமும் துறந்து, பொறியினிற் பிறங்கிடும் போலிகள் ஏன் பிறந்தார்களோ என்று ஏங்கி வருந்தினுர் அப்பர் அடிகளும்:—

“ தம்மானங் காப்பதாகித் தையலார் வலையுளாழ்ந்து
அம்மானை அமுதன் தன்னை ஆதியை அந்தமாய
செம்மான ஒளிகொள் மேனிச் சிந்தையுள் ஒன்றி நின்ற
எம்மானை நினைய மாட்டேன் என் செய்வான் தோன்றினேனே.”

இவ் அருமைத் தேவாரப் பாடலில், தையலார் மையல் வலையில் தளைப்பட்டுச் சிக்குண்டவர், நம் உயிருக்குயிராய் உள்ளத்தே கலந்து நின்ற ஆண்டவனை மறந்தவர்கள் தம் மானம் காத்த விதம் வெகு அழகு என்று இரங்கிக் கூறுகிருர் அப்பர் அடிகள். தலைமயிர் கொக்கக் கொக்க நரைத்துத் தழுதழுத்த குரலுடன் தண்டூன்றித் தடுமாறும் தளர்ந்த முதுமையிலும் தளராத காமத்தராய்க் கன்னியரைக் கண்டு கண்சாடை பேசிக் கையினை வீசிக் கலியாணம் நாடிப் பொக்கைவாய் திறந்து போலி வீறு காட்டும் பொறியிலிகளுக்குத் தம் மானம் ஏது? கடவுளைக் கும்பிட மட்டும் மானம் பேசுவானேன்? பிறர் பழிக்கும் செயல் புரிய மட்டும் மானத்தை மறக்கலாமா? பிறன் மனைவியைச் சிறையெடுத்து வந்தது இராவணனுக்கு மானக் கேடாகத் தெரியவில்லை. ஒரு குரங்கு இலங்கையைச்

சுட்டெரித்தது என்றவுடன், மானம் பொத்துக் கொண்டு வந்தது. ஒரு மனிதன் வில் வளைத்துக் கடல் கடந்து போருக்கு வருகிறான் என்றவுடன், ஐயோ! மானம் மலையேறி விட்டதே என்று வருந்தினான் இராவணன். இராவணன் பேச்செல்லாம் மானம், ஆனால் செய்ததெல்லாம் அவமானம் என்று கும்பகருணன் எவ்வாறு குத்திக் காட்டினான் பாருங்கள்!

"ஆசில்பர தாரமவை யஞ்சிறை யடைப்பேம்
மாசில் புகழ் காதலுறு வேம் வளமை கூரப்
பேசுவது மானம் இடைபேணுவது காமம்
கூசுவது மானுடரை நன்றுநம கொற்றம்."

இக்காலத்துப் பகுத்தறிவாளர் செயலும் இது போலவே இருக்கிறது. நாம் மான உணர்ச்சியோடு நம்மைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டிய இடங்கள் எவ்வளவோ இருக்கின்றன. அங்கெல்லாம் நம் மானத்தைக் கெடுத்துக் கொள்ளுகிறோம். மானத்தைக் காட்டக் கூடாத இடத்திலே மானம் பேசுகிறோம். கடவுள் வழிபாட்டிற்கு இடையூறாய் மானம் வந்து குறுக்கிடக் கூடாது. உண்மையில் ஆண்டவன் திரு முன்னர் நமது மானம் கெட்டு ஒழிய வேண்டும். மான உணர்ச்சி அடியோடு மங்கி மறைய வேண்டும். நாதன் அடியில் நாம் விழுந்து போற்றாமைக்கும், நாத்தழும் பேற நாம் நாத்திகம் பேசுவதற்கும் நம் அறியாமை யால் எழுந்த தவறான தன்மானமே தலைக்காரண மாகும். அதைச்சுற்றி மடக்கித் தூர வைத்து விட்டுதான் நாம் கடவுளை வணங்க வேண்டும். அப்பொழுதுதான் உண்மையில் நாம் கடவுளை வணங்க முடியும். கணவன் முன்னிலையில் மனைவிக்கு எவ்வாறு மானம் இல்லாது கெடுகிறதோ, அதுபோல் ஆண்டவன் முன்னிலையிலும் இவ்வுயிருக்கு மானம் கெட்டொழிய வேண்டும். அதுவே உண்மையான பக்தி நிலை. தன்னைத்தானே அழித்துக்கொண்ட நிலையிலேதான்

ஆண்டவன் வெளிப்படுகிறுன். யான், எனது என்னும் செருக்கிலே அடங்கினதுதான் இந்த மானமும்.

> "யான் என தென்னும் செருக் கறுப்பான்வாஞேர்க்
> குயர்ந்த உலகம் புகும்."

என்பது தமிழ் மறை. இந்த வீண் மானத்தையும் தற்பெருமையையும் இறைவனிடத்திலே நாம் செலுத்தக்கூடாது. நம் மானம் அழிய வேண்டும். ஆ! மானம் அழிவதா! என்ற ஆச்சரியம் வேண்டாம். மாணிக்கவாசகர் என்ன சொல்லுகிறுர் பார்க்கலாம் :—

> "மானம் அழிந்தோம் மதி மறந்தோம் மங்கை நல்லீர்
> வானந் தொழுந்தென்னன் வார் கழலே நினைந்தடியோம்
> ஆனந்தக் கூத்தன் அருள் பெறில் நாம் அவ்வணமே
> ஆனந்தம் ஆகிநின் ருடாமோ தோணேக்கம்."

திருநாவுக்கரசரைவிட மானம் உடையவர்கள் வேறு இருக்க முடியாது. மாநில மன்னர்களை மதியாது வணங்காது மானமுடன் வாழ்ந்த மாவீரர் அவர். 'நாமார்க்கும் குடியல்லோம்' என்று தலை நிமிர்ந்து நடந்த தலையான மனிதர், தமிழ்ப் பெருந்தகையார். இறை வழிபாட்டிற்கு இடையூருய் மதியைக் குலைக்க வரும் மானத்தை நோக்கி அவர் பேசிய பேச்சு நமக்குச் சிறந்த அறிவுரையாகும்: "பொங்கி எழுகின்ற ஆணவமே! மானமே! காமவெகுளி மயக்கமே! கடும் பற்றுள்ளமே! பொறுமையே! நீங்கள் பல உணர்ச்சிகளாய்க் கிளம்பி எழுந்து உலகையே குலுங்க ஆட்டிக் குலையச் செய்கிறவர்கள் தாம். ஆனுல் என்னிடத்தில் உங்கள் குண்டு பலிக்காது. நான் சிவ்பெருமான் திருவடிகளைச் சரண் புகுந்துவிட்டேன். என்னை வீணுகக் கெடுக்க முயலவேண்டாம். உங்கள் வலையில் விழமாட்டேன்" என்று அழகாகப் பாடுகிறுர் :—

" பொங்குமத மானமே ஆர்வச் செற்றக்
குரோதமே லோபமே பொறையே நீங்கள்

உங்கள் பெருமா நிலத்தினெல்லை யெல்லாம்
உழறுமிது குறை முடிப் பீர்க்கரிதே யானேல்

அங்கமலத் தயனொடு மாலாகி மற்றும்
அதற் கப்பால் ஒன்றாகி யறிய வொண்ணாச்

செங்கனகத் தனிக் குன்றைச் சிவனை யாரூர்ச்
செல்வனைச் சேர்வேன் நும்மாற் செலுத்துணேனே."

மானம் வந்து மறைக்காது, இறைவன்
மலரடி வணங்குவோமாக.

---

# தர்ம சங்கடம்

'இது என்னடா தர்ம சங்கடமாக இருக்கிறது!" என்று சில வேளைகளில் நமக்குச் சொல்லத் தோன்றுகிறது. பிறரும் அவ்வாறு சொல்வதைக் கேட்கிறோம். இதன் பொருள் யாது? தர்ம சங்கடம் என்பது, என்ன செய்வது, என்ன சொல்வது என்று தெரியாத ஒரு திண்டாட்டமான நிலை. உண்மையைச் சொன்னால் ஊறு விளையுமோ என்னும்படியான ஓர் உழன்ற நிலை. ஏறச் சொன்னால் எருதுக்குக் கோபம், இறங்கச் சொன்னால் முடவனுக்குக் கோபம்; ஆனால் ஏதாவது சொல்லியும் தொலைக்க வேண்டும் என்பது போன்ற சங்கடமான நிலை. இதிலே வெற்றிபெற்று இரு திறத்தாருக்கும் திருப்தி யளித்து நெருக்கடியைத் தீர்ப்பதுதான் கெட்டிக்காரத்தனம் ஆங்கிலத்தில் டைலெம்மா (Dilemma) என்று இதனைக் கூறுவர். தர்க்கவாதத்திலும் இது அடிக்கடி ஏற்படும்.

இதற்கு ஒரு கதைகூடச் சொல்வது உண்டு. ஒரு நாள் சீதேவிக்கும் மூதேவிக்கும் ஓர் அழகுப் போட்டி நடந்தது. எல்லா இன்பத்திற்கும் அதிதேவதை சீதேவி. அவள் நன்மைக்கு உறைவிடம். மூதேவி தீமைக்கு உறைவிடம். சீதேவிக்குத் திரு, திருமகள், இலட்சுமி, செய்யாள், தாமரையினாள், இளையவள் என்ற பல பெயர்கள் உண்டு. மூதேவிக்கும் முகடி, சேட்டை, மூத்தவள் போன்ற பெயர்கள் உண்டு. சீதேவி சிவப்பு நிறம், நல்ல அழகு உடையவள். மூதேவி கருப்பு நிறம், கோர உருவம் கொண்டவள். இருவரும் சகோதரிகள். ஒவ்வொருத்தியும் தன்னைத் தானே அழகுள்ளவள் என்று சொல்லிக்கொண்டாள். அவர்கள் இருவரிடையும் சண்டை வளர்ந்து முற்றி விட்டது. அதனைத் தீர்த்துவிடுவதற்கு வழியில்

ஒருவனை மறித்துக்கொண்டனர். தங்கள் வழக்கை அவனிடம் கூறி, அவனே அதனை முடிவு செய்ய வேண்டும் என்று வற்புறுத்தினர். அவன் பெரிய தர்ம சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டான். சீதேவியோ மகாலட்சுமி. அவளுக்கு மிஞ்சின அழகு வேறு எங்கும் கிடையாது. மூதேவிக்கு மிஞ்சின அவலட்சணம் வேறு கிடையாது. இது தான் உண்மை. ஆனால் உண்மையைச் சொன்னால் அவன் கதி என்னவாகும்? மூதேவியை அழகில்லை என்று சொன்னால், கோபம் கொண்டு அவனை விடாது பிடித்துக்கொள்வாள். அடுக்கடுக்காக அல்லல்கள் வந்து அவனை அழுத்தி விடும். அதற்குப் பயந்து சீதேவியை அழகியல்லள் என்றால், அவளும் கோபித்துக்கொண்டு அவனை விட்டு விலகிவிடுவாள். எல்லாச் செல்வங்களும் இன்பங்களும் நீங்கிவிடும். இந்த நிலையில் அவன்பாடு திண்டாட்டமாகி விட்டது.

அவன் தன் அறிவைக் கொண்டு ஒரு சூழ்ச்சி செய்தான். "நீங்கள் இருவரும் சிறிது தூரம் நடந்து விட்டுப் பின் திரும்பி வாருங்கள். நான் பார்க்கிறேன். அப்பொழுதுதான் உங்கள் அழகு நன்றாக எடுத்துக் காட்டும்" என்றான். அவ்விதமே அக்காளும் தங்கையும் சிறிது நடந்து காட்டிப் பின் திரும்பி வந்தனர். "ஆகாகா! அற்புதம்! அற்புதம்! அற்புதம்!" என்று வழிப்போக்கன் கை தட்டினான். "என்ன செய்தி? யார் அழகி? இப்பொழுது சொல்" என்று இருவரும் கேட்டனர். அதற்கு அவன் சிரித்துக்கொண்டே, "சீதேவி! நீ போகும் பொழுது சகிக்கவில்லை, மகா அவலட்சணம். வரும்பொழுதுதான் அழகாய் இருக்கிறாய். ஆனால், மூதேவி! நீ போகும் பொழுதே அழகாய் இருக்கிறாய்" என்று கூறி மூதேவி வரும்பொழுது அழகில்லாமல் இருப்பதைக் கூறாமல் விடுத்தான். மூதேவிக்கு

மட்டிலா மகிழ்ச்சி முட்டிக்கொண்டு வந்தது. தன் தங்கையைப் பார்த்து, "நீ உன் புறத்தைக் காட்டி அவலட்சணத்தைப் புலப்படுத்தாமல் இங்கேயே கிட. நான் போகிற போக்கிலேயே என் சௌந்தரியத்தைப் பாருங்கள்" என்று சொல்லிக்கொண்டே ஓடிவிட்டாள். வழிப்போக்கன் தன் சாதுரியப் பேச்சினுல் மூத்தவளிட மிருந்து தப்பினுன். அவனுக்கு அன்றுமுதல் திருமகள் விலாசம் பூரணமாய் ஏற்பட்டது.

இதைப் போலவே தர்மசங்கடமான நிலைமை ஒவ்வொருவருக்கும் வாழ்க்கையில் ஏற்படக்கூடும். பாவம் ஒரு பக்கமும் புண்ணியம் ஒரு பக்கமும் நம்மை வளைத்துக்கொண்டு, 'என்னைப் பார்! என் அழகைப் பார்!' என்று மயக்கி நிற்கும். நாம் அயர்ந்துவிடாது நம் அறிவைப் பயன்படுத்தி, பாவத்தை மெதுவாகப் போக்கடித்துவிட்டு. புண்ணியத்தை மேற்கொள்ள வேண்டும். நாம் செய்யவேண்டிய தர்மத்துக்கு ஒரு சங்கடம் தடையாக வருவதுதான் தர்ம சங்கடம். அந்தச் சங்கடத்தை நீக்கித் தர்மத்தை நிலைபெறச் செய்வதுதான் அறிவாளியின் செயல்.

இதைப்போலவே திருவள்ளுவருக்கும் பல சங்கடங்கள் ஏற்பட்டிருக்கக் கூடும். அவற்றுள் இரண்டனைப்பற்றி நாம் இங்கே கற்பனை செய்து காணலாம். ஒரு நாள் மூதேவி தன் தங்கை எங்கிருக்கிருள் என்று தேடிக்கொண்டே வந்து திருவள்ளுவர் முன் தோன்றினுள். அகன் அமர்ந்து செய்யாள் அங்கே வீற்றிருந்தாள். சேட்டையைக் கண்ட செந்நாப் போதார், வந்த கொட்டாவியை அடக்கிக் கொண்டு, சிரித்த முகத்துடன் "தீதில் வரவாக திருவின் மூத்தவளே! என்ன செய்தி?" என்று விசாரித்தார். சிரிப்பே பிடிக்காத மூதேவியின் முகம் முன்னிலும் இருண்டது. "திருவள்ளுவரே, நீர் என் தங்கையைத் தான்

கவனிப்பீர். என்னையெல்லாம் கவனிப்பீரா ?'' என்று சிணுங்கினாள். அதற்குத் திருவள்ளுவர், "நல்ல காரியம் சொன்னாய்! உன்னைக் கவனியாமல் யார் இருக்க முடியும்? நன்றாகக் கவனிக்கிறேன். ஒரு முறைக்கு* மும்முறை கவனிக்கிறேன்'' என்றார். உடனே மூத்தவள், "திருவள்ளுவரே, நீர் இப்படியெல்லாம் ஏமாற்றினால் நான் ஏமாந்துவிட மாட்டேன். உம்மை எனக்குப் பிடிக்கவே இல்லை. வெறுப்புத்தான் வருகிறது. எனக்கு இங்கு இடமே இல்லைபோலத் தோன்றுகிறது. என் தங்கையைவிட நான் எந்த விதத்தில் தாழ்ந்தவள்? அவளைவிட நான் உயர்ந்தவளா இல்லையா? சொல்லும்!'' என்று அதட்டினாள். இப்பொழுதுதான் ஒரு தர்ம சங்கடமான நிலையில் தாம் மாட்டிக்கொண்டதை வள்ளுவர் உணர்ந்தார். அதனை அவர் திறமையுடன் சமாளித்ததுதான் மெச்சத்தக்கது.

"பெண்ணே, உன்னை யார் குறைவாகச் சொன்னது? நீ எந்த விதத்தில் திருமகளுக்குத் தாழ்ந்தவள் ஆவாய்? நீ தான் அவளுக்கு முன்பே பிறந்தவள் ஆயிற்றே. அது போதாதா? உனக்கு இடம் இல்லை என்று நீ ஏன் நினைக்கவேண்டும்? உன்னை மடியில் அல்லவா தூக்கி வைக்கவேண்டும்?'' என்றார் திருவள்ளுவர். "ஓகோ! என்னை மடியில் வைப்பதென்றால், என் தங்கையைத் தலையில் தூக்கி வைத்துக்கொள்வீர் போலிருக்றது? அப்படியும் நான்தானே தாழ்ந்தவள் ஆவேன்?'' என்று இரைந்தாள் மூத்தவள். "சீசீ! மூதேவி! அப்படி நினைக்காதே. உன்னை மடியில் வைத்தால் உன் தங்கையைத் தாளில்தான் வைப்பேன். இப்பொழுது சொல், யார் உயர்ந்தவள்?'' என்று

* 167, 617, 936 ஆகிய மூன்று குறளிலும் காண்க.

கேட்டார் திருவள்ளுவர். "நான்தான்! நான்தான்! நானே உயர்ந்தவள்! ஆகா!" என்று இடியிடியென்று சிரித்துக்கொண்டே ஓடிவிட்டாள் மூதேவி. நங்கை திருவும் நகைத்த முகத்தவளாய், வள்ளுவர் வாய் மொழியில் திளைத்து, நலங்கள் பல நல்கினுள். இந்நிகழ்ச்சி தொனிக்க, நீங்கா நயத்துடன் ஒரு திருக்குறள் ஓங்கி எழுந்தது:

மடியுளாள் மாமுகடி என்ப; மடியிலான்
தாளுளாள் தாமரையி னுள்.

[மடி - சோம்பல்; அரை, பை போன்ற முந்திச் சொருக்கு. மா - கரிய நிறமுள்ள, முகடி - மூதேவி தாள் - முயற்சி; பாதம். தாமரையினுள் - இலக்குமி. சோம்பேறியின் சோம்பலிடத்தே மூதேவி உறைவாள்; உழைப்பாளியின் முயற்சியிடத்தே சீதேவி உறைவாள் என்பதே இக்குறளின் திரண்ட கருத்து. சிலேடை நயத்துடன் இக்குறளைப் படித்து இன்புறலாம்.]

மற்ருெரு தர்ம சங்கடமான நிலைமையில் திருவள்ளுவர் எவ்வாறு நடந்துகொண்டார் என்பதைப் பார்ப்போம். ஒரு நாள் திருவள்ளுவர் தம்முடைய மாணுக்கர்களுக்குப் பாடம் சொல்லிக்கொண்டிருந்தார். அன்று கல்வியைப்பற்றிப் பாடம் நடந்தது.

விலங்கொடு மக்கள் அனையர் இலங்கு நூல்
கற்ருரோ டேனை யவர்.

என்ற குறளைச் சொல்லி விளக்கினுர். புறங்கூறும் புண்ணியவாளன் ஒருவன் அதைக் கேட்டுக்கொண்டிருந்தான். அவன் படித்தவன் தான். ஆனுல் படித்துவிட்டான் என்பதற்காகப் புறங்கூருமல் இருக்க முடியுமா? பொய்யும் புலையும் புனைந்து கூறி நாரதர் வேலையை நடத்தாமல் நாளைக் கழிக்க அவனுல் முடியாது. அவன் உடனே ஓடிச் சென்று, அவ்வூரிலுள்ள கல்லாத முரடன் ஒருவனிடம் ஊதிவிட்டான்.

"படியாதவர்களையெல்லாம் மாடு, நாய், கழுதை, பன்றி என்று திருவள்ளுவர் திட்டிக்கொண்டிருக்கிறார். படியாத உன்னையும் சேர்த்துத்தானே திட்டுகிறார்?" என்று விலங்கின் பொருளுக்கு ஒரு விரிந்த விமரிசனம் செய்தான். முரடனுக்குக் கோபம் மூக்கிலேயல்லவா? உடனே அவன் ஒரு கழியைத் தூக்கிக்கொண்டு திருவள்ளுவரிடம் ஓடி வந்தான். அப்பொழுதுதான் திருவள்ளுவர்,

அற்றம் மறைக்கும் பெருமை; சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

என்ற குறளைச் சொல்லிக்கொண்டிருந்தார்.

சீறிக்கொண்டுவந்த முரடனைக் கண்ட திருவள்ளுவர், சிரித்த முகத்துடன், "தம்பி, வா. ஏது இவ்வளவு தூரம்? நீ மழைக்குக்கூட இந்தப் பக்கம் ஒதுங்க மாட்டாயே! என்ன செய்தி? உனக்கு என்னால் செய்யக்கூடியது ஏதேனும் உண்டா?"என்றுகேட்டார். முரடன் ஓங்கிய கழியை ஊன்றிக்கொண்டு, "திருவள்ளுவரே, நீர் படியாதவன் நல்லவன் இல்லை என்று, கல்லாத பேர்களைப்பற்றி இல்லாததும் பொல்லாததும் சொல்லிக்கொண்டிருந்தீராமே. நான் ஒருவன் இருப்பது உமக்குத் தெரியாதா?" என்று கேட்டான். இதுவும் ஒரு தர்ம சங்கடமான நிலைதான். படியாதவனையும் நல்லவன் என்று எப்படிச் சொல்வது? ஆனால் முரடன் கேட்பானா? கையில் இருக்கிற கழியைத் திருவள்ளுவர் மெய்யில் ஒடித்துவிடுவானே! அதற்காக உள்ளதற்கு மாறாகவும் வள்ளுவரால் பேச முடியாது. ஐயோ! திருவள்ளுவருக்குமா இப்படி ஒரு சங்கடம் நேரவேண்டும்? என்ன செய்வார், பாவம்!

முரடன் முதுகைத் தட்டிக் கொடுத்த வண்ணம் சிரியடா சிரி என்று சிரித்தார். சிரித்துக்கொண்டே

சொன்னூர்: " தம்பி, நீ கெட்டிக்காரன். நிரம்பவும் நல்லவன், நீ படியாவிட்டால் என்ன? அதற்காக உன்னை நல்லவன் இல்லை என்று சொல்லிவிடலாமா? கல்லாதவர்களும் நல்லவர்களே. மிகமிக நல்லவர்கள். ஆனால் அவர்கள் ஒன்று மட்டும் செய்யவேண்டும். அது என்னவென்றால்......" திருவள்ளுவர் கூறி முடிக்கும் வரை அங்கு முரடன் நின்றுகொண்டிருக்க வில்லை. கல்லாதவர்களும் மிக மிக நல்லவர்கள் என்பதைக் கேட்டதும், தானும் நல்லவன் என்பதைக் கேட்டதும், அவன் உள்ளம் குளிர்ந்துவிட்டது. கோபம் ஓடிவிட்டது. அவன் போனதையும் கவனி யாமல் திருவள்ளுவர் தாம் கூறுவதைக் கூறி முடித்தார்: " கற்றவர்கள் கூட்டத்திலே தம் வாயைத் திறவாதிருந்தால், கல்லாதவர்களும் மிக மிக நல்ல வர்களே."

கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின்.

ஆம். படித்தவன் என்றும் படியாதவன் என்றும் நெற்றியிலா எழுதி ஒட்டியிருக்கிறது? இல்லை. ஒருவன் கற்றதும் கல்லாததும் அவன் வாயைத் திறக்கும் பொழுதுதான் தெரியவரும். படித்தவன் அறிவோடு பேசுவான். படியாதவன் உளறிக் கொட்டுவான். நுணலும் தன் வாயாற் கெடும் என்பதுபோலாகிவிடும். படித்தவர் கூட்டத்தில் அகப்பட்ட படியாத ஒருவன், தன் வாயைத் திறவாமல் இருந்தால், படித்தவனாகவே கருதப்படுவான். அவனிடத்தில் உள்ளே சரக்கு இருக் கிறது போலும் என்று எல்லாரும் எண்ணி அவனுக்கு மதிப்புக் கொடுப்பார்கள். கல்லாதவர் மானத்தையும் திருவள்ளுவர் தம் பெருங்கருணையினால் காக்கும் வழி கூறினார். 'நல்லர்' என்று வாளா கூறாது, 'நனி நல்லர்' என்றார். கற்றவர்களான அறிவாளிகள் பேசும் பொழுது, சிறிதளவாவது பிறர் குறைகூறும்படி

தங்கள் அறியாமையைப் புலப்படுத்திவிடுவார்கள். அவ்வளவுக்கு அவர்கள் மதிப்புக் குன்றத்தான் செய்யும். ஆனல், கற்ருேர் சபையிலே வாயைத் திறவாமல் இருக்கும் கல்லாதவனே எல்லாம் அறிந்தவன் என்று கருதப்பட்டு, குறையாத முழு மதிப்புடன் விளங்குவான். ஆகவே அவன் நனி நல்லன். ஆனல் அவன் வாயைத் திறந்தால் கெட்டு விடும் காரியம். எனவே, கல்லாதவர்க்கும் கற்றவர்க்கும் பெரும் பயன் அளிக்கக்கூடியதோர் எச்சரிக்கையைத் திருவள்ளுவர் இங்ஙனம் கூறினர். கல்லாதவர்கள் வாயைத் திறந்து தங்கள் அறியாமையைப் புலப்படுத் தாதிருப்பது அரிது. ஆகையால், 'சொல்லாதிருக்கப் பெறின்' என்ருர். கல்லாதார் ஏதாவது உளறித் தங்கள் முட்டாள்தனத்தையும் காட்டிக் கற்ருேர்களையும் அவ மதித்துச் சபையிலே ஓர் அபசாரத்தை எளிதில் உண்டுபண்ணி விடக்கூடும். அவ்விதம் உண்டு பண்ணுது வாயை மூடிக்கொண்டிருந்தால், அவர்களை மிகவும் நல்லவர்கள் என்றுதானே சொல்லவேண்டும்? அதனல் திருவள்ளுவர் அப்படிச் சொன்னர்.

இந்தத் திருக்குறளில் புகழ்வது போன்று இகழ்தல் என்னும் அணி, நகைச்சுவை ததும்ப அமைந்திருக் கிறது. இங்குப் பரிமேலழகர் எழுதிய விசேடவுரையை யும் உடன்படித்துப் பயன்பெறலாம். "உம்மை இழிவு சிறப்பும்மை. தம்மைத்தாம் அறியாமையின் அது கூடாதென்பார் 'பெறின்' என்றும், கூடின் ஆண்டுத் தம்மை வெளிப்படுத்தாமையானும், பின் கல்வியை விரும்புவராகலானும் 'நனி நல்லர்' என்றும் கூறினர்." கல்லாதார் கற்ருர் அவையில் வாய் திறக்க முடியாது; வாயைத் திறந்தால் அவமதிப்புக்கு ஆளாவார் என்பதே இந்தக் குறளின் திரண்ட கருத்து.

---

# இரவல் வீடு

ஒரு வீடு கட்ட வேண்டும் என்று வைத்துக் கொள்வோம். வீடு ஏதோ சாதாரணமானதுதான். இருந்தாலும் முதலில் நான்கு கால்கள் வேண்டும். நாலு கால் நாட்டினுல்தான் ஒரு பந்தல் என்று சொல்லு வது வழக்கம். நாலு மூலையிலும் நாலு கால் நட்டபின், அவற்றின்மேல் சட்டம் கூட்டிவைத்துக் கூரை எழுப்புவதற்குக் கைகள் வேண்டும். வரிச்சுக் கழி களும் வேண்டும். பிறகு, கூரை மேய்வதற்கு ஓலை வேண்டும். நான்கு புறமும் சுவர்கள் கட்ட வேண்டும். சுவர் கட்டி மறைத்துவிட்டால் மட்டும் போதுமா? முன் வாசல், பின்வாசல் என இரண்டு வாசல்களும் வேண்டும். வெறும் வாசல்களை வைத்து மட்டும் அடைத்துவிட்டால், காற்று வசதி வேண்டாமா? காற்ரேட்டம் இருந்தால்தான் சுகாதாரமுள்ள வீடாகக் கருதலாம். ஆகவே சன்னல்களும் வேண்டும். இத்தனையும் இருந்தால் மட்டுமே குடியிருப்பதற்கு ஒரு வீடு கட்டி முடிக்கலாம்.

இந்த மனித உடல் ஒரு வீடு. அதனுள் குடி யிருப்பது உயிர். கடவுள் இந்த உயிருக்காக இந்த வீட்டைக் கட்டியிருக்கிருர். கடவுள் கட்டுவதா யிருந்தாலுங்கூட மேலே கூறிய அத்தனை உறுப்புக் களும் இல்லாமல் வீடு கட்ட முடியாது. ஆனுல் கடவுள் கட்டும் வீட்டுக்கும் மனிதன் கட்டும் வீட்டுக்கும் சில வேறுபாடுகள் உள்ளன. கடவுள் இரண்டு காலை நட்டார். இரண்டு கைகளையே கொடுத்தார். எலும்பு களைக் கழிகளாக நரம்புகொண்டு கட்டினுர். ஓலைக்குப் பதில் தசைத் துண்டங்களைப் போட்டு அடைத்தார். மண்ணும் நீரும் கொண்டு கட்டும் சுவருக்குப் பதில் இரத்தமும் நிணமும் கொண்டு நாலு பக்கமும் மூடினுர்.

மேலே தோலைப் பரத்தினர். ஒன்பது துவாரங்களே முன்வாசல் பின்வாசலும் ஏழு சன்னல்களுமாய் அமைந்தன. அழகான வீடு என்று காட்டி உயிருக்கு அதிலே ஆசையை மூட்டி உள்ளே குடியேற்றிவிட்டார். கடவுள் நிரம்பவும் கெட்டிக்காரர் என்று பாடுகிருர் திருநாவுக்கரசர்.

"கால் கொடுத்து இருகை ஏற்றிக்கழிநிரைத்து இறைச்சி மேய்ந்து
தோல்படுத்து உதிர நீராற் சுவரெடுத்து இரண்டு வாசல்
ஏல்வுடைத் தாஅ மைத்தங்கு ஏழுசா லேகம் பண்ணி
மால் கொடுத்து ஆவி வைத்தார் மாமறைக் காட னூரே."

[ சாலேகம்-சன்னல்; மால்-ஆசை.]

வெளியேயிருந்து பார்த்தால் வீடு பகட்டாகவே இருக்கிறது. ஆனுல் உள்ளே குடியிருந்து பார்த்தால் தான் இதன் ஊழல்கள் தெரியவருகின்றன. உள்ளே கிருமிகளும் புழுக்களும் பூச்சிகளும் குவிந்து கிடக்கின்றன. எங்கே பார்த்தாலும் ஒரே ஓட்டை. ஒவ்வொரு மயிர்க்கண்ணிலும் துவாரம் விழுந்து அழுக்கு நீராகக் கொட்டிக்கொண்டிருக்கிறது. இந்த ஓட்டை மாடத்து ஒன்பது வாயில்களும் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டு ஒரே கோரக் காட்சியாக இருக்கிறது. வீட்டில் ஒழுக்கு இல்லாத இடமே இல்லை. சரி, எது எப்படியும் கிடக்கட்டும். மூடி அடைத்து முடங்கிக் கிடப்போம் என்ருல் அதாவது செய்ய முடிகிறதா? அதுவும் இல்லை. இங்கே தனிக் குடித்தனம் நடத்த நமக்கு அதிகாரம் கிடையாது. இந்த ஓட்டை வீட்டுக் குள்ளே நமக்குக் கிடைத்தது ஒட்டுக் குடித்தனந்தான். ஒருவர் இருவர் என்றில்லாமல் ஐந்து முரடர்கள் இதில் வாசம் பண்ணுகிருர்கள். அவர்கள் மோசக்கார வஞ்சகர்கள். அவர்கள் நம்மைப் படுத்துகிற பாடோ சொல்லிமுடியாது. அவர்கள் பண்ணுகிற இடைஞ்சலும் சங்கடமும் சகிக்கக் கூடியனவாய் இல்லை. இவ்வளவு இன்னல்களையும் வெளியே ஒரு தோலாலே மறைத்துப்

புறஞ்சுவர் கோலம் செய்து கடவுள் நம்மை மயக்கி யிருக்கிறார். இந்த மோசடியான வீட்டுக்குள் உயிர் உய்யும் வழி தெரியாமல் மனம் உடைந்து கருத்தழிந்து கவலைக்குள்ளாகிறது. இதனுள் தான் வாழ முடியாது என்று உயிர் கூறுவதாகத் திருநாவுக்கரசர் பாடுகின்றார்.

"புழுப்பெய்த பண்டி தன்னைப் புறம்ஒரு தோலால் மூடி
ஒழுக்கறு ஒன்பது வாய் ஒற்றுமை ஒன்றும் இல்லை
சழக்குடை இதனுள் ஐவர் சங்கடம் பலவுஞ் செய்ய
அழிப்பனாய் வாழ மாட்டேன் ஆரூர்மூ லட்ட னீரே."

[பண்டி-உடல்; சழக்கு-குற்றம்:
அழிப்பன்-அழிக்கப்படுபவன்.]

ஊனுடுத்தி ஒன்பது வாசல் வைத்து ஒள்ளெலும்பு தூணா வுரோமம் மேய்ந்த இந்தக் குடில் பொய்யானது. இந்தப்பொய்யானகுடிலுக்கு மெய் என்று பேர்கொடுத்த பொய்யர்களை என் சொல்வது? தொண்ணூற்றாறு வகையாகக் கூறப்படும் பல்வேறு நோய்களுக்குப் பிறப்பிடமும் இருப்பிடமுமாய் இலங்குவது இந்த உடல். அந்த நோய்கள் உயிரைப் பிடித்து வாட்டு கின்றன. இந்த உடலினிடை ஐம்பொறி வாயிலாய்க் கொள்கின்ற ஐம்புலன்களே ஐந்து முரடர்கள். இந்த ஐம்புலன்களுடைய ஆதிக்கமே இங்கு மேலோங்கி நிற்கிறது. உடலினுள்ளிருக்கிற உயிரை ஐம்புலன் களும் சும்மா விடுவதில்லை. அவை எப்பொழுதும் உயிரை அரித்துத் தின்னுகின்றன. அதைக் கொடு, இதை விடு, அதைத் தொடு, இதை எடு என்று அதட்டி முடுக்கி அல்லலுறுத்துகின்றன. அந்த ஐம்புலன்களுக்கு அடிமையாகவே கிடந்து இந்த உயிர் வாழ வேண்டியிருக்கிறது. அவற்றால் நலிந்து மெலிந்து தேய்ந்த உயிருக்கு எத்தகைய சுதந்திரமும் இல்லாமற் போய்விடுகிறது. பொறி புலன்களின் போக்கிலேயே உயிரும் போக வேண்டியிருக்கிறது. அவை இழுத்த

இழுப்புக்கெல்லாம் ஏன் என்னுமல் பின்சென்று தீமை யுறுகிறது உயிர். ஐம்புலன்களும் அள்ளிக்கொடுக்கும் ஆசைச் சேற்றினைப்பூசி மகிழ்ந்து உயிர் தன் நிலை கெட்டு மதிமயங்கி மாசுறுகின்றது. அந்த ஐவருமே இந்த வீட்டுக்குச் சொந்தக்காரர்கள் போல் அட்டகாசம் செய்கின்றனர். அவர்களுடைய ஆர்ப்பாட்டங்களைக் கண்டு அஞ்சிப்போன அப்பரடிகள், ''ஐயோ! இங்கிருந்து பிழைக்க வழியே இல்லையே! அழியாது ஒளிவீசும் புனிதத் திருமேனிப் புண்ணியனே! செப்பமே திகழும் மேனியை எப்பொழுது அடியேன் எய்துவேன்?'' என்று ஏங்கிப் பாடினர்:

முப்பது முப்பத் தாறு முப்பதும் இடுகு ரம்பை
அப்பர்போல் ஐவர் வந்து அதுதரு கிதுவி டென்று
ஒப்பவே நலிய லுற்றால் உய்யுமா றறிய மாட்டேன்
செப்பமே திகழு மேனித் திருப்புக லூர ரீரே.''

[குரம்பை-சிறுகுடில் அப்பர்-ஆட்டுக்கிடாய்.]

இந்த உலகிலே ஒவ்வொருவரும் விரும்புவது, முதலாவது, வீடுதான். ஓர் ஏழையாக இருந்து பாடுபட்டு உழைப்பவன்கூட என்ன நினைக்கின்றான்? எப்படியாவது துன்பப்பட்டுக் கொஞ்சம் பணம் மிச்சம் பண்ணினால், கடைசிக் காலத்தில் ஒரு சிறு வீடாவது வாங்கலாம் என்றுதான் நினைப்பான். எது எப்படிப் போனாலும், ஒருவனுக்கு ஒரு வீடாவது சொந்தமாக இருக்கவேண்டும். சிறு வீடாக இருந்தாலும் குற்றம் இல்லை. 'காடிக் கஞ்சியானாலும் மூடிக் குடிக்க ஒரு வீடு வேண்டும்' என்பது நம்நாட்டில் நெடுங்காலமாய் வழங்கிவரும் ஒரு பழமொழி. வெயிலுக்கும் மழைக்கும் ஒதுங்க ஒரு குடிசையாவது தனக்கென்று இருக்க வேண்டும். எவ்வளவு வாடகை கொடுத்தாலும் வேறு ஒருவனுக்குச்சொந்தமான வீட்டிலே நம்முடைய மனம் போல் சுகமாக வாழமுடியாது. அங்கே இராதே, இங்கே வராதே என்று விரட்டுவான். அதைத் தொடாதே,

இதை எடாதே என்று ஏசுவான். அடிக்கடி வீட்டைக் காலிபண்ணு என்று மிரட்டுவான். நாள்தோறும் வீட்டுக்காரனுடன் மல்லுக்கு நிற்பதே நம் வேலையாகி விடும். சுருங்கச் சொன்னால், நன்றாக அடுப்பு எரிக்கவும் விளக்கு எரிக்கவுங்கூட வீட்டுக்காரன் சம்மதிக்கமாட்டான். அதிலும் மின்சார விளக்கு ஏற்பட்ட இந்தக் காலத்தில் சொல்லவே வேண்டாம்.

நான் சென்னையில் படித்துக் கொண்டிருந்த காலத்தில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது. நான் ஒரு வீட்டின் முன் அறையை வாடகைக்கு எடுத்துக்கொண்டு குடியிருந்தேன். அங்கே மின்சார விளக்குப் போட்டிருந்தது. இரவில் ஒன்பது மணிக்கு மேல் விளக்கை எரித்தால் வீட்டுக்காரர் சண்டைக்கு வந்துவிடுவார். மின்சாரச் செலவு அதிகம் ஆகிவிடுமே என்று அவர் பயந்தார். ஆனால் கல்லூரியில் தேர்வு நெருங்கிவிடவும், ஒன்பது மணிக்கே விளக்கை அணைக்க என்னால் முடியவில்லை. நடுநிசிவரையில் படித்தாலுங்கூடப் போதாது போலிருந்தது எனக்கு. விளக்கை அதிக நேரம் எரிக்க ஆரம்பித்தேன். வீட்டுக் காரரை நினைத்தால் எனக்குப் பயமாக இருந்தது. அந்தப்பயத்தில் நான் படித்த பாடத்தைக்கூட மறந்து போவேன். அவர் சீக்கிரம் படுத்து உறங்கிவிட வேண்டுமே என்று கடவுளை வேண்டுவேன். ஆனால் அதற்கெல்லாம் அவர் சளைத்தவராகக் காணோம். இரவு ஒன்பது மணி ஆனதும் அவர் மின்சாரத்தின் மூல விசையையே (Main Switch) அகற்றி விடுவார். எங்கும் இருள் வந்து கவிந்து கொள்ளும். நான் எண்ணெய் விளக்கை ஏற்றிப் படிக்கவும் கூடாது. வீட்டுக்காரரின் உறக்கம் கெட்டுவிடுமாம். நான் வேறொரு நண்பன் வீடு சென்று படித்து வருவேன். ஆகா! நமக்கு என்று ஒரு சொந்த வீடு இல்லாததால் எவ்வளவு துயரம்,

பாருங்கள். இரவில் வீட்டிலே விளக்குப் போடக்கூட நமக்கு உரிமை இல்லை. சொந்த வீடாக இருந்தால் நாம் விரும்பியமட்டும் விளக்குகள் போட்டு இருட்டைப் போக்கி மகிழ்ச்சியோடு காலத்தைப் பயன்படுத்தலாம் அல்லவா?

இதைத்தான் அப்பர் சுவாமிகளும் சொல்லுகிறார். இந்த உடலாகிய வீட்டின் உள்ளே இருள் மூடிக் கிடக்கிறது. உயிரானது இந்த அஞ்ஞானம் அல்லது அறியாமையாகிய இருளிலே கிடந்து எத்தனை காலம் நோவுற முடியும்? அறியாமை நிலை உயிருக்குத் துன்பம் கொடுக்கிறது. அறிவு நிலையும் அதன் வளர்ச்சியும் உயிருக்கு இன்பம் அளிக்கின்றன. ஆகவே உயிரானது அறிவு என்கிற விளக்கை ஏற்றி ஞான வொளிபெற்று அறியாமையாகிய இருளை அகற்ற முயல்கிறது. ஆனால் உள்ளேயிருக்கிற ஐம்புலன்களாகிய தடியர்கள் சும்மா இருக்கிறார்களா? உயிர் ஏற்ற முயல்கிற அறிவு விளக்கை அணைத்து உயிரை அந்தகாரத்திலே அழுத்தி விடுகிறார்கள். பின்னர் உயிர் எவ்வாறு பிழைக்க முடியும்? இந்த உடலினுள் இந்த ஐவர்களின் ஆட்சியே வலிமை கொண்டதாய் விளங்குகிறது. உண்மையொளியைக் கொண்டு அருள் நெறியே செல்வதற்குத் தடையாகவுள்ள ஐம்புலக் குண்டர்கள் இந்த உடம்பிலே முதன்மைபெற்று மூர்க்கராய்த் திரிகின்றபடியால் இந்த வீடு பயனற்றது என்று பாடுகின்றார் அப்பரடிகள்:

"மெய்யுளே விளக்கை ஏற்றி வேண்டளவு உயரத் தூண்டி
உய்வதோர் உபாயம் பற்றி உகக்கின்றேன் உகவா வண்ணம்
ஐவரை அகத்தே வைத்தீர் அவர்களே வலியர் சாலச்
செய்வதொன்று அறிய மாட்டேன் திருப்புக லூர னீரே."

உயிர் தன் வினைக்கு ஈடாக முகந்து நிற்கின்ற இந்த உடல் அழகின்றிப் புலால் நாறும் அசிங்கத்தின் சின்னம். இவ்வுடம்பு அழுக்கு மலம் நிறைந்த ஆபாசக்

கொட்டில். மிகமிக இழிவானது. பதனழிந்து உப்பு அரித்த பாண்டம். அதனுள் வாழ்கின்ற உயிர் மிகக் கேவலமான நிலையில் உள்ளது. முற்றாத இளந் தேங்காயைக்கண்டு வந்து மொய்க்கின்ற காகங்கள் அதனைப் பற்றிஇழுப்பது போல, இந்த உடலினுள் அகப்பட்ட உயிரைத் தீவினைகள் பலவாக வந்து அடர்க்கின்றன. வல்வினைகளின் செயலால் உயிர் இறைவனுடைய நாமத்தை நினைக்கவும் அவன் புகழைப் பேசவுங்கூட வகையின்றித் தத்தளிக்கிறது. இந்த உயிருக்கு உடல் ஒரு சிறைச்சாலை. இந்த ஊத்தைச் சடலத்தை ஒழித்துக்கட்டி அதற்கு ஒரு முடிவு காணும் ஞானமே மெய்ஞ்ஞானம். மாறிப் பிறக்கவொட்டா அறிவு எதுவோ அதுவே மெய்யறிவு. இந்த உடல் மண்ணிலிருந்து வந்தது. மண்ணோடு மண்ணாய் மறைந்து மாய வேண்டும். அங்கத்தை மண்ணுக்காக்கி ஆர்வத்தை அரனுக்கு அளித்த அப்பரடிகள், உடலை ஒழிக்கும் அறிவே, அதாவது பிறப்பை நீக்கும் அறிவே தமக்கு வேண்டும் என்று பாடுகிறார்.

"மோத்தையைக் கண்ட காக்கை போலவல் வினைகள் மொய்த்துன்
வார்த்தையைப் பேச ஒட்டா மயக்கநான் மயங்கு கின்றேன்;
சீத்தையைச் சிதம்பு தன்னைச் செடிகொள்நோய் வடிவொன் றில்லா
ஊத்தையைக் கழிக்கும் வண்ணம் உணர்வுதா உலக மூர்த்தி"

[மோத்தை-முற்றாத தேங்காய்; சீத்தை-இழிவு; சிதம்பு-பதனழிவுள்ளது; ஊத்தை-உடம்பு.]

இந்த உடலுக்கும் உயிருக்கும் யாதொரு பொருத்தமும் இல்லை. உயிர் வேறு, உடல் வேறு. உயிர் அறிவுள்ளது, உடல் அறிவில்லாதது. உயிர் உருவில்லாதது, உடல் உருவுள்ளது. உயிர்

அழிவில்லாதது, உடல் அழிவுள்ளது. உயிர் முற்பிறவிகளில் பல உடல்களினுள்ளே குடியிருந்து வந்திருக்கிறது. இப்பிறவியிலே இந்த உடலிலே குடியிருக்கிறது. ஆனால் இதிலும் நிலைத்திருக்கப் போவதில்லை. இதைவிட்டுச் சீக்கிரமே பறந்துவிடும். அடைகாத்துப் பொரிக்கப்பட்ட முட்டையிலிருந்து அது உடைந்தவுடன் குஞ்சு பறந்து போவது போல் உயிரும் உடலைவிட்டுப்பிரிந்து சென்றுவிடும். இப்படிப் பலவான உடம்புகளை எடுத்துக்கொண்டே செல்லும். திருவள்ளுவர் கூறுகிறார் :

“குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு.”

[நட்பில்லாததை நட்பென்றது குறிப்பு மொழி. குடம்பை-முட்டை; கூடு என்றும் கூறலாம்.]

இதனால், இந்த உடல் உயிருக்காகக் கட்டப்பட்ட வீடாக இருந்தாலும், அந்த உயிருக்கு உகந்த சொந்த வீடு அன்று என்பது தெளிவு. அங்ஙனமாயின், இந்த உடலாகிய வீட்டுக்குச் சொந்தக்காரர் யார் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். ஒருவன் ஒரு வீட்டில் குடியிருந்து கொண்டே இருப்பான். அவனே சொந்தக்காரன் என்றுகூட எல்லாரும் நினைத்துக்கொண்டிருப்பார்கள். ஆனால் உண்மையான சொந்தக்காரன் வேறு ஒருவனாய் இருப்பான். அது எப்பொழுது தெரியவரும் என்றால், குடியிருப்பவன் வீட்டிற்கு ஏதாவது கெடுதல் விளைவித்தால் தெரியவரும். அப்போது சொந்தக்காரன் வந்து குடியிருப்பவனைக் காலிபண்ணச் சொல்லுவான், ஆனால் குடியிருப்பவன் இலேசில் காலிபண்ணி விடுவானா? சட்டம் பேசுவான். தனக்கு அநுபோக உரிமை உண்டாகி விட்டதாகக்கூட எதிர்

வழக்காடுவான். ஆனால் கடைசியில் சொந்தக்காரன் தன் உரிமையைத் தக்க சான்றுகள் மூலம் உறுதியாகக் கொண்டாட ஆரம்பித்துவிட்டால், குடியிருப்பவனின் வக்கீல் சமாதானம் பேசி, இனி வீட்டை ஒழுங்காக வைத்துக் கொள்வதாகவும், காலிசெய்வதற்குக் கொஞ்சம் காலம் வேண்டும் என்றும் கேட்டு அநுமதி வாங்கிக் கொடுப்பான். எவ்வளவு காலம் நீட்டித்து வீட்டை வைத்துக்கொள்ள முடியுமோ அவ்வளவு காலமும், குடியிருப்பவன் காலி செய்யாது இழுத்துக் கடத்துவான். ஆனால், ஒருநாள் அல்லது மற்றொரு நாள் சொந்தக்காரன் குடியிருப்பவனை வீட்டைவிட்டு வெளியே தள்ளிவிடுவான். அப்பொழுது, இரவல் குடித்தனம் நடத்தியவன் வீட்டையும் பாழாக்கிவிட்டுக் கண்ணீரும் கம்பலையுமாய் மிகவும் வருந்தி ஒருவருக்கும் தெரியாமல் வெளியே ஓடிவிடுவான். இதுவே வெளி யுலகில் நாம் தினமும் காணும் காட்சி. இதுவே நம் உடலினுள்ளும் நடந்து வருகிறது.

உயிர் உடலை மிகவும் சொந்தமாகப் பாவித்து அதனைத் தானாகவே கருதி வாழ ஆரம்பிக்கிறது வீட்டினுள் தாறுமாறாக நடக்கிறது. கணக்கின்றி உணவை உட்கொள்கிறது. உடலுக்கு ஒவ்வாதன வான பழக்க வழக்கங்களை மேற்கொள்கிறது. உடனே வீட்டுக்குச் சொந்தக்காரர் எச்சரிக்கை (Notice) விடுக்கிறார். வீடு கெட ஆரம்பித்தவுடன், வயிற்று வலி, தலைவலி, மேல் வலி, சுரம் முதலியனவே இந்த எச்சரிக்கை. உயிருக்கு வீட்டினுள் சுகமாக வாழ முடிவதில்லை. வக்கீல் மூலமாகச் சொந்தக்காரரிடம் உயிர் தூது விடுகிறது. இங்கு வைத்தியன்தான் வக்கீல். வைத்தியன் வீட்டுக்குச் சொந்தக்காரரிடம்

பேசிப் பார்க்கிருன். எவ்வாறு? கையைப்பிடித்து நாடிகளைக் கவனிக்கிருன். வாதம் பித்தம் சிலேத்துமங்களே வீட்டின் சொந்தக்காரர். நாடி நடக்கும் முறையிலிருந்து குற்றம் குணங்களைத் தெரிந்து கொண்டு வைத்தியன் தக்க சிகிச்சைகளைச் செய்து வீட்டைச் செப்பனிட்டு, வீட்டுக்காரரைச் சமாதானப் படுத்திவிடுவான்.

மீண்டும் உயிர் உடம்பினுள் புது வாழ்வு வாழ ஆரம்பிக்கிறது. முன்னைவிட அதிகக் கவனத்தோடு வீட்டினுள் மரியாதையாகவே வாழ முயல்கிறது உயிர். ஆயினும் எத்தனை நாளைக்குத்தான் அயலார் வீட்டில் ஒட்டுக் குடித்தனம் நடத்த முடியும்? இரவல் சதமாகுமா? அடிக்கொரு முறை வீட்டுக்காரருக்கும் குடியிருப்பவனுக்கும் சச்சரவுகள் நேர்கின்றன. உயிர் நோய்க்கு இடம் கொடுத்து விடுகிறது. பல பிணிகள் கிளம்பி உயிரைத் தேய்த்துச் சாய்த்து வெளியே அடித்து விரட்டுகின்றன. வைத்தியன் வந்து வந்து போகிருன். கடைசியில் வாத பித்த சிலேத்துமங்கள் வைத்தியனையும் உண்டு வா என்று உதறிவிடுகின்றன. கை பார்க்கும் வைத்தியன், "வாதம் பம்முகிறதே! பித்தம் படபடக்கிறதே! சிலேத்துமம் இழுக்கிறதே!" என்று கூறிக் கையை விரித்துவிடுகிருன். அவன் உரைத்த மாத்திரைகளும் கரைத்த செந்தூரங்களும் பயனற்றுப் போகின்றன. ஊசி மருந்துகளும் கூசிப் பின் வாங்குகின்றன. உடன் பிறந்தே கொல்லும் நோய் அல்லவா? உடலுக்குச் சொந்தக்காரரான வாதம் முதலிய நோய்கள் உயிரை இதுகாறும் உடன் வாழும்படி சகித்து இருந்தன; இப்பொழுது வெகுண்டு எழுந்து தாக்குகின்றன. எதிர்த்து நிற்கமாட்டாது.

ஏங்கி வருந்தியபடியே ஒதுங்க நிழல் இல்லையே என்று மயங்கி மயங்கித் தள்ளாடி வெளியே உயிர் தள்ளப் படுகிறது. அந்த உயிரைக் கையிலே எடுத்து வைத்துக் கொண்டு திருவள்ளுவர் பரிந்து பேசுகிறார்: "ஒதுங்க நிழலின்றி ஊசலாடிப் பரிதவிக்கும் ஆருயிரே! நீ இது வரையில் வாதம் முதலிய நோய்களுக்கு உரிய வீடாகிய உடம்புகளுள் ஒதுக்கிருந்தே உன் காலத்தைக் கழித்திருக்கிறாய். அந்நோய்கள் இருக்க அமைந்த ஞான்று இருப்பதும், அந்நோய்கள் உன்னை வெகுண்டு விரட்டியபோது போவதுமாய், ஒருடம்பி னும் நிலைபெறாது வந்திருக்கிறாய். உனக்கென்று நிலையாகவுள்ள ஒரு வீட்டை நீ ஏன் தேடிக்கொள்ள வில்லை? உனக்கென்று தனி வீடு ஒன்றும் கிடையாதா? இரவல் வீட்டை நாடியே நீ ஏன் எப்பொழுதும் அலைகிறாய்?"

> "புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
> துச்சில் இருந்த உயிர்க்கு."

எஞ்ஞான்றும் இருப்பதோர் வீட்டைப் 'புக்கில்' என்றார். ஒதுக்கிருந்து ஒட்டுக் குடித்தனம் நடத்தும் வீட்டைத் 'துச்சில்' என்றார். புக்கில் என்பது முத்தி ஸ்தானம் என்பர் மணக்குடவர். புக்கிலாவது மோட்சம் என்பர் பரிதியார். உலகத்து அளவிறந்த கால மெல்லாம் அளவிறந்த யாக்கைகள்தோறும் பிறந்தும் இறந்தும் உழன்று திரிதற்குக் காரணமாகிய பேதைமை நீங்கும் உணர்வு பெறுதற்கு உறுதவம் இயற்றும் ஒருப்பாடே இனி வேண்டப்படுவது என்ற உண்மையை இக்குறளின் அகத்தடக்கி வள்ளுவர் கல்லும் கரையக் கனிந்து பாடியிருப்பது அறிந்து போற்றற் பாலதாகும்.

திருநாவுக்கரசர் இந்த அருமைத் திருக்குறளை விளக்கு முகத்தானும், இதற்கு விடை அளிக்கும் முகத் தானும் ஒரு தேவாரம் பாடியுள்ளார். அதனுள்,

இத்துச்சில் கழிந்தால் எத்தகைய புக்கில் வேண்டும் என்பதைக் குறிப்பிடுகிருர். "இண்டை மலரையும் கங்கை நதியையும் சடையிலே கொண்டிலங்கும் சங்கரா! நாலு கால் வீடே நிலைத்திருக்காது. நான் வாழும் குடிசையோ இரண்டு காலால் நிற்கிறது. பிணிகளாலே மூடப்பட்டிருக்கிறது. அதனுல் நெடு நாள் நிற்காமல் சீக்கிரம் விழுந்துவிடும். இது நீங்கினுல் மல பாச பந்தங்களாகிய வெயில் மழை காற்றுக்கு நான் தப்பித் தலைமறைவாக இருப்பதற்கு நிலைத்த புக்கிலாக உன் திருவடிக் கீழ் ஓர் இடம் தருவாயாக" என்ற பொருள் கொண்ட அப்பர் தேவாரம் வருமாறு:

"முருகார் நறுமலர் இண்டை தழுவிவண் டேமுரலும்
பெருகா றடை சடைக் கற்றையினுய். பிணி மேய்ந்திருந்த
இருகாற் குரம்பை இது நான் உடைய திதுபிரிந்தால்
தருவா யெனக்குன் திருவடிக் கீழோர் தலைமறைவே"

---

## உங்கள் ஓட் யாருக்கு?

இந்தத் தலைப்பைப் படித்தவுடன் நான் ஏதோ தேர்தலுக்கு நிற்கப் போகிறேன் என்று நினைத்து விடாதீர்கள். எல்லாரும் தேர்தலுக்கு நிற்கக்கூடாது என்கிறார் திருவள்ளுவர். உண்மையிலேயே பொது நலத்தொண்டு அல்லது சேவை செய்யக்கூடியவர்கள் யாரோ அவர்கள்தாம் தேர்தலுக்கு நான் என்று முன்னால் வரவேண்டும். செயற்கரிய செய்யும் பெரியார்களே அவ்வாறு முன்னுக்கு வரவேண்டும். ஆனால் இந்தக் காலத்தில் நடக்கும் தேர்தல்களைப் பார்த்தால் பெரிய பித்தலாட்டமும் ஏமாற்றமுமாக இருக்கும். உலகில் எந்த வேலையை எடுத்துக் கொண்டாலும் அதற்கு அருகதையாவதற்குச் சில இலக்கணங்கள் வேண்டும். ஆனால் தேர்தல்களில் நின்று மக்களது உயிரினும் சிறந்த வாக்குரிமையைப் பெற்றுச் சட்டசபை உறுப்பினர் ஆவதற்கும், மந்திரிகளாய் மாறுவதற்கும், இன்ன தகுதி தான் வேண்டும் என்பது இல்லாமற் போய்விட்டது. யார் வேண்டுமென்றாலும் நிற்கலாம். ஒரு கட்சியின் பெயரைச் சொல்லி அதற்குரிய புறச்சின்னங்களால் தம்மைக்கோலம் செய்து கொண்டாற் போதும். உண்மையில் தாங்கள் உழைத்துப் பொது நலத்திற்குப் பாடுபடுவது போல் வாய்ப்பாயாசம் காய்ச்சுவார்கள். வாக்குரிமையை ஏராளமாய்ப் பெறுவார்கள். பின் பொதுநலத்தை மறந்து தன்நலத்தை நினைந்து அதற்கு வேண்டுவனவற்றைமட்டும் பார்த்துக்கொள்வார்கள். சட்டசபைகளிற் சென்று தூங்குவார்கள். இத்தகைய சட்டசபை உறுப்பினரிற் பெரும்பாலாரும் பேசா மடந்தைகளாய்க் கைதூக்கிக் கழுமரங்களாகத்தாமே அங்கே காலங்கழிக்கிறார்கள்? இத்தகையோர் ஏன்

தாங்கள் தாம் பொதுநலத் தொண்டர்கள் என்று மார்பைத் தட்டிக்கொண்டு தேர்தலின் போது முன்னுல் வரவேண்டும்? இவர்களைக் கண்டு திருவள்ளுவர் மிகவும் வருந்தினுர்.

தங்களால் புகழ் தரக்கூடிய செயல்கள் எதையும் செய்ய இயலாதவர்கள் வாளா வீட்டிலேயே குந்திக் கொண்டிருப்பதைவிட்டுப் பொது இடங்களில் வந்து ஏன் அமரவேண்டும்? அப்படியே பொது இடங்களில் வந்து தோன்றினுல், புகழ் நிற்கக் கூடிய காரியம் எதையாவது சாதித்துத் தம் மேன்மையையும் முதன்மையையும் நிலைநாட்ட வேண்டும். தாமும் ஒன்றும் செய்யாமல், செய்யக்கூடிய பிறர்க்கும் இடம் கொடுக்காமல், வைக்கோற் போரிலே வயிரவர் வதிந்தது போல, அரசியற் பொது மன்றங்களை அடைத்துக்கொண்டிருப்பது மக்களுக்கு இழைத்து வரும் மன்னிக்க முடியாத மாபெருங் குற்றம். "இவர்கள் சும்மா வீட்டிலிருந்து தொலையாமல் ஏன் அம்பலத்தில் வந்து ஆடுகிறுர்கள்?" என்று நினைத்துக் கொண்டு வருந்திப் பாடுகிறுர் வள்ளுவர் பாருங்கள் :—

"தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்ருமை நன்று."

இவ்வருமைத் திருக்குறளில், தோன்றுதல் என்பதற்கு, மக்களின் பிரதிநிதிகளாய்ப் பொது மன்றங்களிலே வந்து தோன்றுதல் என்று பொருள் கொள்ள வேண்டும். அவ்விதம் கொள்ளாது தோன்றுதல் என்பதற்குப் பிறத்தல் என்று கொண்டு தொல்லாசிரியர்கள் எல்லாம் இடர்ப்பட்டுள்ளார்கள். பரிமேலழகர் கூறுகிறுர் :— "மக்களாய்ப் பிறக்கின் புகழுக்கு ஏதுவாகிய குணத்தோடு பிறக்க: அக்குணமில்லாதார் மக்களாய்ப் பிறத்திலின் விலங்காய்ப் பிறத்தல் நன்று."

இது எவ்வளவு பொருத்தமற்றது என்பதைச் சிறிது சிந்தித்துப் பாருங்கள். ஒருவன் பிறப்பதும் பிறவாதிருப்பதும், மனிதனுய்ப் பிறப்பதும் விலங்காய்ப் பிறப்பதும் அவன் கையிலா இருக்கிறது? இல்லையென்பது ஏற்பட்டால் திருவள்ளுவர் இப்பொருள் படவும் ஒரு குறள் செய்திருப்பாரா? ஒரு காலும் மாட்டார். பரிதியார், மணக்குடவர் போன்ற உரையாசிரியர்களும் இதற்குப் பொருள் காண்பதில் இவ்வாறே பிழைபட்டுப் போயினர். காளிங்கர் உரையும் பொருத்தமாகத் தெரியவில்லை. "ஒருவர் தம்புகழ் பரப்புவதாகப் பழியினை நீக்கிப் புகழ் பெறுதலே தோற்றமாவது. அஃதிலார் நானிலத்தின்கண் தாம் ஒரு மக்கள் உருவு கொண்டு தோன்றுதலின் இறந்து படுதலே பெரிதும் நன்மை யுடைத்து என்றவாறு" என்பது அவர் விளக்கம். இதன்படி புகழ் பெருதோர் எல்லாரும் இறந்து போவது என்ருல் உலகமே சூனியமாகிவிடும். ஆகவே இத்தகைய கருத்து திருவள்ளுவருக்குப் புறம்பானது என்று நாம் ஒதுக்குதல் வேண்டும். ஆகவே அரசியற் பொது மன்றங்களில் போட்டியிட்டு முதன்மையடைய முயலும் செயலையே இங்கே தோன்றுதல் என்று வள்ளுவர் கூறியிருத்தல் வேண்டும்.

இவ்வாறு போட்டியிடும் அபேட்சகர்களில் யாருக்கு நமது வாக்குரிமையைக் கொடுப்பது? யாரொருவன் மனைவி, மக்கள், குடும்பம் முதலிய உடையவனுய் உலக வாழ்க்கையில் பற்றுள்ளவனுய், பழி பாவங்களுக்கு அஞ்சினவனுய் அமைதியையும் புகழ்மையையும் விரும்புகிருனே அவனுக்கே நமது வாக்குரிமையைக் கொடுக்க வேண்டும் என்கிருர் திருவள்ளுவர் :—

“ அற்றுரைத் தேறுத லோம்புக
மற்றவர் பற்றிலர் நாணுர் பழி.”

மனேவி மக்களேயும் சொத்து சுகங்களேயும் இல்லாது வெறுங்கட்டைகளாய்த் தான்ருேன்றி களாய்த் திரிபவர் புரட்சிகள் செய்வதற்கு அஞ்ச மாட்டார்கள் ; நிலேயான அமைதியுள்ள வாழ்க்கை யையும் அழியாப் புகழையும் விரும்பமாட்டார்கள். அத்தகையோர் எதற்கும் தயாராகித் தங்களேயே தீமைக்கு விற்றுவிடுவார்கள். தாம் செய்யும் தவறு தங்கள் சுற்றம் குடும்பம் முதலியவற்றை வருத்துமே என்ற வருத்தமும் அச்சமும் அவர்களுக்கு இருக்காது. அத்தகையோருக்கு உங்கள் வாக்குரிமை கூடாது என்கிருர் திருவள்ளுவர்.

---

# பொது நலத் தொண்டர்

பாரத நாடு சுதந்திரம் பெற்ற பின், முதலாவதாகப் பொதுத் தேர்தல் அண்மையில் நாடெங்கும் நடக்கப் போகிறது. நாம் எல்லோரும் இந்நாட்டு மன்னர்கள் ஆகிவிட்டோம். வயது வந்த ஒவ்வொருவருக்கும் வாக்குரிமை கிடைத்திருக்கிறது. நமது வாக்குரிமையைச் சரியான முறையில் பயன்படுத்தினுல் தான் நாம் உண்மையில் இந்நாட்டு மன்னர்கள் ஆவோம். நம் வாக்குரிமையைப் பெற்று நமக்காகச் சேவை செய்யும் பொருட்டுப் பலர் தேர்தலில் போட்டியிட்டு வெற்றிபெற முயன்று வருகிருர்கள். இவ்விதம் போட்டியில் முனைபவர்கள் அனைவரும் தம்மைப் பொதுநலத் தொண்டர்கள் என்று சொல்லிக்கொள்ளு கிருர்கள். உண்மையில் அவர்கள் பொதுநலத் தொண்டு புரியும் பொறுப்புடையவர்களா என்பதை வாக்காளர்கள் முதலில் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். இது வாக்காளர்களுக்குப் பெரிய தொரு பொறுப்பும் கடமையுமாகும். இதில் சிறிது அயர்ந்து ஏமாந்துவிட்டால், பின் நெடுநாள் பாரதநாடு தாங்கொணு இன்னலுக்கு ஆளாகித் தவிக்க வேண்டி வரும். பொதுத் தேர்தல் நாள் வரை நாம் உண்மையில் இந்நாட்டு இறைவர்கள் அல்லது அரசர்கள். நமது வாக்கைக் கொடுத்தபின் நம் சக்தியும், உரிமையும் தேர்தலில் வெற்றிபெறும் நம் பிரதிநிதிகளுக்குப் போய்விடும். பின் பல ஆண்டுகளுக்கு அவர்களை நம்பியே நாம் வாழவேண்டி வரும். அவ்விடைக் காலத்தில் அவர்கள் நம்மை அரசர்களாகவே, அதாவது உரிமையுள்ளவர்களாகவே, நடத்துவார்களா, அல்லது அடிமைகளாகவே நடத்துவார்களா என்பதை நாம் சிந்தித்து நமது

கடமையைச் செய்ய வேண்டும். இதற்கு அரசியலைப் பற்றித் திருவள்ளுவர் என்ன கூறுகிறார்? அவர் கூறுவது நமக்கு எத்துணைப் பயன்படும்? என்பதைப் பார்ப்போம்.

ஒரு நாட்டின் அரசியல் முடியரசாகவும் இருக்கலாம், குடியரசாகவும் இருக்கலாம். முடியரசு நாட்டுத் தலைவனை அரசன், கோன், மன்னன், வேந்தன் என்ற பல பெயர்களால் வழங்குவர். குடியரசு நாட்டுத் தலைவனை ஜனாதிபதி என்று இப்பொழுது அழைக்கிறோம். திருவள்ளுவர் காலத்தில் முடியரசாட்சியே நடந்து வந்தது. குடியரசுக்கொள்கை அப்பொழுது ஏற்படவில்லை. ஆயினும், என்ன ஆச்சரியம், பாருங்கள்! திருவள்ளுவர் அரசனைப்பற்றிக் கூறுவன எல்லாம் குடியரசு நாட்டுத் தலைவனுக்கும், அதிகாரிகளுக்கும், பொதுநலத்தொண்டர்களுக்கும் மிகப்பொருத்தமாகவே இருக்கின்றன. ஏனெனில், எத்தகைய அரசியலை நடத்துபவர்களாயிருந்தாலும், அவர்களுக்கு உள்ள பொறுப்பும் கடமைகளும் ஒரே தன்மையில் தாம் இருக்கும். ஆகவே வாக்காளர்களும் தேர்வாளர்களும் மற்றும் பலவிதமான பொதுநலத் தொண்டர்களும், அதிகாரிகளும், நீதிபதிகளும், அரசனைப் பற்றியும் அரசியலைப்பற்றியும் திருவள்ளுவர் கூறுவனவற்றைத் தெரிந்துகொள்வது மிகப்பயனுடையதாய் இருக்கும்.

திருக்குறள் பொருட்பாலில், முதல் 25 அதிகாரங்கள் அரசனைப்பற்றியவை. அப்பகுதிக்கு அரசியல் என்று பெயர். ஒரு நாட்டுப் பொதுநலத் தொண்டர்களில் அரசன் அல்லது, இப்பொழுது உள்ளபடி தலைமை அமைச்சன் முதன்மை வாய்ந்தவன். அரசனுக்கு இருக்கவேண்டிய நற்குண நற்செய்கைகளை

இறைமாட்சி என்று கூறுவர் திருவள்ளுவர். ஒரு நாட்டு மக்களுக்குத் தலைவனாக விளங்குவோனிடம், பொது வாக மக்களுக்கு இருக்க வேண்டிய நற்குணங்கள் யாவும், சிறப்பாக அமைந்து காண வேண்டும் அவ்வாறு அமைந்தால், அவனே கண் கண்ட கடவுள் ஆவான்.

"முறை செய்து காப்பாற்று மன்னவன் மக்கட்(கு)
இறையென்று வைக்கப் படும்."

என்பது குறள். முறை என்பது நீதி. தான் நீதி செலுத்திக் குடிகள் வருந்தாமல் காத்தலையும் செய்யும் அரசனை இறையென்றார். இறை என்பது கடவுள். பிறப்பால் அரசன் மனிதனேயாயினும் செயலால் மக்களுக்குக் கண் கண்ட கடவுளாகவே கருதப்படுவான் என்றார்.

முறை செய்வது எப்படி என்பதை இன்னொரு குறளில் தெளிவு படுத்துகிறார், பாருங்கள் :

"ஓர்ந்துகண் ணோடா திறை புரிந் தியார் மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை."

ஓர்ந்து=குடிகள் செய்யும் குற்றத்தை நாடி ; யார் மாட்டுங் கண்ணோடாது-குற்றம் செய்தவர்கள் தனக்கு மிக வேண்டியவர்களாயிருந்தாலும் தயவு தாட்சணிய மின்றி; இறை புரிந்து= நடுநிலைமையிலிருந்து; தேர்ந்து=அக்குற்றத்திற்கு உரிய தண்டனையை ஆராய்ந்து; செய்வஃதே முறை=அதனை விதிப்பதே முறையாம்.

அவ்விதம் தண்டிக்கும் பொழுதும், வேறு எத்தொழிலைச் செய்யும் பொழுதும், வெருவந்த செய்தல் கூடாது ; அதாவது, குடிகள் அஞ்சுவதும், அமைச்சர் முதலிய சுற்றம் அஞ்சுவதும், தான் அஞ்சுவதுமாகிய முறையில் அரசன் செய்தல் கூடாது.

"கடித்தோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர்."

ஆக்கம்=செல்வமானது ; நெடிது=நெடுங்காலம் ; நீங்காமை=நீ ங் கா ம ல் நிற்றலே ; வேண்டுபவர்= விரும்புவோர் ; கடிது ஓச்சி=மிகக் கடிய தண்டனையைக் கொடுப்பது போலத் தொடங்கி ; மெல்ல எறிக= அளவு கடவாமற் செய்யக்கடவர்.

இவ்வரிய திருக்குறள் நீதியைத் தற்காலம் நீதிபதிகளாய் இருப்போர் மேவி நடப்பது நலமாகும்.

குடிமக்களின் தலைவன் அரசன் ஆயினும், அவன் குடிகளை மிஞ்சினவன் ஆகமாட்டான். கு டி க ளி ன் நன்மை ஒன்றையே அவன் கருத வேண்டும். குடிகளை வைத்த வாழ்வு தான் அவன் வாழ்வு.

"குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு."

என்பது குறள். குடிதழீ இ - குடிகளைக் கலந்து கொண்டு, (அவர்களுடைய நன்மைக்காக) கோல் ஓச்சும் —ஆட்சி புரியும் ; மாநில மன்னன்—நாடாளும் மன்னனுடைய ; அடிதழீ இ நிற்கும் உலகு—ஆட்சியை மக்கள் என்றும் விரும்பி வாழ்வார்கள். தழீ இ அ ல் ல து தழுவுதல் என்ற சொல்லை எவ்வளவு அ ழ கா க ப் பொருளுடைய சொல்லாய் வள்ளுவர் அமைத்துள்ளார் பாருங்கள்! தேர்தலுக்குப் பின்னும், தேர்வாளர்கள் தம் வாழ்வு வாக்காளர்களை வைத்த வாழ்வுதான் என்பதை நினைவிருத்தி, ஒ வ் வொ ரு காரியத்திலும் அவர்களைத் தழுவி நடந்தால் பொ து ந ல ம் பூத்து மலர்வது திண்ணம் அல்லவா ?

குடிகள் தாங்கும் அளவிற்கு மேலாக வரி விதித்து அரசன் அவர்களைத் துன்புறுத்தக் கூடாது. நியாயமான முறையில் கு டி க ளி ட த் து எவ்வளவு பகுதிப்

பொருளை வாங்கலாமோ அவ்வளவுதான் வாங்கலாம். அதற்கு மேலாக வாங்குதல் கொடுங்கோன்மையாகும். ஒரு நாட்டின் தலைவன் மக்களிடம் அதிகம் யாசித்துப் பெறுவது கூட கொள்ளை யடிப்பது தான் என்கிறார் திருவள்ளுவர் :

"வேலொடு நின்றான் இடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றான் இரவு."

கோலொடு நின்றான்–அதிகாரம் கொண்ட நாட்டுத் தலைவன் ; இரவு–இறைப்பொருளுக்கு அதிகமாகப் பொருள் வேண்டுதல்; வேலொடு நின்றான்–வழிப்பறி பறிக்கும் கள்வன் ; இடுவென்றது போலும்–அறைந்து கேட்பதை ஒக்கும். இக்காலத்தில் தாசில்தார்கள், மாஜிஸ்டிரேட்டுகள், கலெக்டர்கள் எல்லாரும் நிதி வசூல்களுக்குக் கிளம்பி நடனக்கச்சேரி, சங்கீதக்கச்சேரி என்று ஆயிரக்கணக்கில் பொருள் திரட்டுகிறார்களே, அவர்களை நோக்கியே இந்தக் குறளை வள்ளுவர் செய்தார் போலும்.

குடிகளைத் துன்புறுத்திக் கலங்கச் செய்யும் அரசனது ஆட்சி நிலை குலைந்து விரைவில் அழிந்து விடும்.

"அல்லற்பட் டாற்றா (து) அழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.'

என்று திருவள்ளுவர் அரசர்களை எச்சரிக்கிறார். நம் நாட்டு மன்னர்கள் கொடுங்கோலன் என்னும் பழிச் சொல்லுக்கு எவ்வாறு அஞ்சினார்கள் என்பதை நம் நாட்டுச் சரித்திரம் கூறுகிறது. அல்லற்பட்டு-அரசனால் துன்புறுத்தப்பட்டு; ஆற்றாது – தாங்கமாட்டாமல்; அழுத கண்ணீர் – குடிமக்கள் சிந்திய கண்ணீர்; செல்வத்தைத் தேய்க்கும் படை–அரச செல்வத்தைக் கரைத்து விடும் கருவி; அன்றே-அல்லவா. குடி

களுடைய ஆதரவில்லாமல் அரசன் ஒரு கணமும் நிலைத்து நிற்க முடியாது என்பதே இதன் கருத்து.

குடிகள் தங்கள் குறைகளை வந்து நேரில் தெரிவித்துக் கொள்வதற்கு யாதொரு தடையும் இருத்தல் கூடாது. அரசும் குடிகளோடு தொடர்புடையவனாய் நெருங்கிப் பழகுதல் வேண்டும். அவர்களோடு இனிதுபேசி, அவர்களுடைய துன்பங்களையும் குறைகளையும் அறிந்து, உடனே அவற்றை நீக்க வேண்டும்.

"காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்."

மன்னன் என்று இங்கே கூறப்பட்டதை அரசியல் துறையில் ஈடுபட்டுள்ள பொதுநலத் தொண்டர்களாகக் கொள்ளவேண்டும். தேர்தல் முடியும் வரை வாக்காளர்களுக்கு வந்தனை கூறி வழிபாடு செய்து தேர்தலுக்குப் பின் வாக்காளர்களை நோக்காமலே காலம் கழிக்கும் சட்டசபைப் பெரியார்கள் இக்குறளைக் கருத்திலூன்றி நடந்தால் மிகவும் நல்லது.

மேலே குறித்த இறைமாட்சிகளில் இறையளவாவது இருப்பவர்களுக்கே வாக்காளர் தமது வாக்கைக் கொடுத்தல் வேண்டும்.

"இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்."

என்ற குறளை வாக்காளர்கள் நன்கு உணர்ந்து அதன்படி பொருத்தமான உண்மையாய் உழைக்கும் பொதுநலத் தொண்டர்களுக்கே தங்கள் வாக்கைக் கொடுத்து மகிழ்ந்து இன்பம் எய்துவார்களாக. நாட்டில் நலம் நலியாது ஓங்குக! பொதுநலத் தொண்டின் பொற்பு பொலிவெய்துக!

---

# செத்துப் போ

ஆ! செத்துப் போகவா? எவ்வளவு கொடுமையான சொற்கள்! செத்துப் போவதைவிடக் கொடுமையுடையது வேறு என்னதான் இவ்வுலகில் உண்டு? வேறு எத்தகைய துன்பத்தையும் உயிர் தாங்கிக் கொள்ளும். ஆனால் உடலைவிட்டு மட்டும் அது நீங்கப் பொறுக்காது. உடலில் இருப்பதனால் ஏற்படும் வேதனையும் துயரும் எவ்வளவுக்கு மிகுந்து வளர்ந்தாலும், அவ்வளவுக்கும் அந்த உடலைப் பற்றிக்கொண்டு கிடக்கவே உயிர் துடித்துக்கொண்டிருக்கும். புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்து ஐமேலுந்தி உயிரானது உடலைவிட்டு வெளியே தள்ளுண்ணப்படும் பொழுது, அது எவ்வாறு மறுகிச் சுழன்று தத்தளிக்கிறது? அதன் தவிப்பைக் கண்டுதான் சாவு என்றவுடன் எல்லோரும் அஞ்சுகின்றனர். "யானேதும் பிறப்பஞ்சேன்" என்று அஞ்சாது கூறிய மணிவாசகரும், 'இறப்பதனுக்கு என் கடவேன்' என்று தளர்ந்து இரங்கினர். இவ்வுலக வாழ்க்கையில் உள்ள துன்பத்தைவிட இறப்பு மேல் என்று உயிர் நினைப்பதில்லை. துன்பம் வளர வளர உயிருக்கு வாழ்விலுள்ள ஆசையும் வளர்ந்துகொண்டே போகிறது. இதனைத் திருவள்ளுவர்,

"இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்பம்
உழத்தொறூஉங் காதற் றுயிர்."

என்றுர். சூதுப் பந்தயத்திற் தோற்பவன் பணத்தை இழக்க இழக்க மேலும் மேலும் அதையே விரும்பி ஆட்டம் ஆடுவதுபோல், உடலோடு கூடிய உயிர் பல விதத் துன்பங்களை அதனுல் அனுபவிக்க நேரினும் மேன்மேலும் அவ்வுடலோடு ஒன்றி வாழவே விரும்புகிறது ஆதலால் சாக ஒருவருக்கும் மனம் வராது.

ஆனுல் உடலோடு உயிர் கூடிவாழ வேண்டாம் என்று திருவள்ளுவர் சொல்லவில்லை. வாழ்ந்தால் நல்லபடியே வாழவேண்டும். இல்லாவிடில் செத்துப்போ என்கிருர். எப்படி ?

இராமனின் முடிசூட்டு விழாவைத் தடுப்பதற்காக மந்தரைக் கூனி கைகேயி மனதை மாற்ற முயன்ருள். இராமனின்மேல் அளவில்லாத அன்புகொண்டிருந்த கருணைப் பிராட்டியான கைகேயி ஒன்றுக்கும் அசைய வில்லை. கடைசியாகக் கூனி ஒரு கருத்தை எடுத்துத் தெரிவித்தாள். இராமன் மன்னன் ஆனுல் கோசலை எல்லாச்செல்வமும் பெறுவாள். கைகேயி வறியவள் ஆவாள். யாதொரு கதி இல்லாத ஒருவன் பசியென்று வந்து கைகேயியைஇரந்தால், அவனுக்கு உதவப்பணம் அவளிடம் ஏது? ஒன்று, அவள் நாணித் தலைகுனிய வேண்டும்; அல்லது கோசலையிடம் யாசித்துப் பெற வேண்டும்; அல்லது இல்லையென்று சொல்லி மறுக்க வேண்டும்; அல்லது உயிரை விடவேண்டும். "இவற்றுள் எதை நீ செய்யப் போகிருய்?" என்று கூனி கைகேயியைக் கேட்கிருள்.

> தூண்டும் இன்னலும் வறுமையுந் தொடர்தரத் துயரால்
> ஈண்டு வந்துனை யிரந்தவர்க் கிருநிதி யவளை
> வேண்டி யீதியோ வெள்குதி யோவிம்மல் நோயான்
> மாண்டு போதியோ மறுத்தியோ எங்ஙனம் வாழ்தி."

ஈயென்று சொல்லிவந்து இரந்தவர்கள் இடுக்கணைக் களைய முடியாது நாணித் தலை குனிவதை விடவும், பிறரிடம் இரந்து பொருளைப் பெறுதலை விடவும், இல்லை யென்று கூறி மறுப்பதைவிடவும் மானிகளாய் உள்ளார் உடன் உயிரை விடுதலை மேலாகக் கொள்வர் அல்லவா? இந்த நிலையைச் சுட்டிக் காட்டியவுடன் கைகேயி மனம் மாறி விட்டது. இராமன் முடி சூடு தலைத் தடுக்க உடனே மனம் ஒருப்பட்டாள்.

கூனி கூறியதாகவுள்ள இக்கருத்தைக் கம்பநாடர் திருவள்ளுவரிலிருந்து எடுத்து அழகுற அமைத்துள்ளார். கையில் பணம் இல்லாத ஒருவன் திருவள்ளுவரிடம் சென்று "சுவாமி! தாங்கள் மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று என்று கூறியுள்ளீர்களே. பிறருக்கு உதவி செய்ய இயலாத நிலையையுடைய என் போன்றவர்கள் இரந்தவர்க்கு இல்லையென்றுதானே சொல்ல வேண்டியிருக்கிறது?" என்று கேட்டான். அதற்குத் திருவள்ளுவர் "அப்பா! உன்னிடம் வந்து இரந்தவர்களுக்கு இல்லை யென்று சொல்லக்கூடிய நிலை உனக்கு வருமானுல், உடனே நீ உயிரை விட்டு விடுவது மேலாகும். இறத்தல் என்பது மிகத் துயரம் வாய்ந்ததுதான். ஆனுல் அதனுல் இழிபில்லை. இல்லை யென்று சொல்வது மிகவும் இழிபுடையது. அதை நோக்க விளிதல் மிகவும் நல்லது. உன்னுல் பிறருக்கு உதவி செய்ய இயலாத நிலையில் உனக்கு இவ்வுலகில் வேலையில்லை. இவ்வுலகில் வாழ்வதானுல், பிறர்க்கு நீ உ ப கா ரி யா க வாழவேண்டும். அது முடியாவிடில் செத்துப்போ. சாவு துன்பம்தான். ஆனுல் அதைவிடத் துன்பம் ஈதலைச் செய்ய இயலாது வாழ்தல். அது மட்டும் அல்ல. ஈய முடியாது வாழ்வதிலும் சாவது இன்பம் தரக்கூடியது. ஈதல் இல்லையேல் சாதல் போ, போ! செத்துப்போ" என்று கூறினுர்.

"சாதலின் இன்னாத தில்லை யினிததூஉம்
ஈதல் இயையாக் கடை."

இங்ஙனம் வள்ளுவர் கூறுதற்குக் காரணம் ஒன்று உண்டு. இங்கு ஈதல் என்பது பிறர் பசியைப் போக்குதலேயாம். பிறர்க்கு ஈயமாட்டாத ஒருவன் தான் உயிர்வாழ்வதற்கு எப்படியும் உணவு அருந்தியாக வேண்டும். தான் அருந்தும் உணவில் ஒரு பிடியாவது ஈந்து பிறர் பசியைக் களையலாம். தனக்கும்

உணவில்லையேல் எப்படியும் அவன் இறக்கவேண்டிய வனே. பிறர் பசியைப் பார்த்து வைத்தும், தன் பசி ஒன்றையே களைய நினைப்பவன் வாழ்ந்தும் புண்ணிய மில்லை. அத்தகையோன் இறந்தால், அவனுக்கும் நல்லது சமூகத்திற்கும் நல்லது; ஆகவே சாதல் இனிது என்றார்.

ஆனால், யாருக்குத்தான் சாகமனம் வரும்? பிறருக்கு உதவக் கையில் பணம் இல்லை யென்பதற்காக உடனே உயிரை விட்டு விடுவதா? பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்று கூறிய திருவள்ளுவர், 'பொருளற்றார் பூப்பர் ஒருகால்' என்று சொல்லி,

''செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில்.''

என்றும் கூறியுள்ளார் அல்லவா? ஆனால் இவ்வுலகில் எப்படியாவது உயிர் வாழ்ந்தாற்போதும் என்று, மானத்தை விற்று எத்தனை பேர் வயிறு வளர்க்க முற்படுகின்றனர்! வயிற்றை நிரப்புவதையே குறிக் கோளாகக் கொண்டு எத்தனை பேர் தங்களை வெறுத் திகழும் பகைவர்களின் பின் முழங்கையைச் சொரிந்து கொண்டு செல்கின்றனர்! இவர்களை யெல்லாம் கண்டு திருவள்ளுவர் உள்ளம் வருந்தினார். மெய்கூசினார். இவர்கள் இப்படி ஏன் பிழைக்க வேண்டும்? மானத்தை விட உயிர் பெரிதா? இவ்விதம் தங்கள் பெருமைக்கு இழிவு தேடியும் இவர்கள் உயிரைக்காக்க வேண்டுமா? இவ்வாறுதான் தங்கள் உயிரை எத்தனை நாளைக்குக் காக்கப் போகின்றனர்? ஆறிலும் சாவுதான், நூறிலும் சாவுதான். இவர்கள் தேவர்கள்போல் சாவா மருந் தாகிய அமிர்தம் அருந்தினார்களா? மீண்டும் ஒருநாள் இறக்க வேண்டியவர்கள்தானே? அன்று இறக்கப் போகிறவர்கள் இன்றே இறந்தொழியட்டுமே. இன்றே

இறந்தால் தங்கள் மானத்தையாவது மறுவின்றிக் காக்கலாம். இல்லாவிடில், இன்று மானமும் போய், நாளே உயிரும் போகப் போவது நிச்சயம். ஆதலால் "ஒட்டார்களாகிய பகைவர்களே ஒட்டிக்கொண்டு உயிர் வாழ்வதைவிட உடனே செத்துப்போ" என்று முழங்கிஞர் திருவள்ளுவர்:

> "ஒட்டார் பின் சென்ருெருவன் வாழ்தலின் அந்நிலேயே
> கெட்டான் எனப்படுதல் நன்று."

இன்ருெரு கூட்டத்தார் இருக்கிருர்கள். சமூகத்தில் அவர்கள் தொகை நாளுக்கு நாள் பயங்கரமாகப் பெருகிக் கொண்டே வருகிறது. அவர்களுக்குத் தங்கள் காரியத்தைப் பார்க்கக்கூட நேரம் இருக்காது. பிறருடைய காரியத்தில் வீணுகத் தலேயிடுவார்கள். பிறருடைய குற்றம் குறைகளேயே அளந்து கட்டுவதில் தங்கள் கருத்தைச் செலவிடுவார்கள். அயலார் குறைகளே அகமகிழ்ந்து கேட்பார்கள். அதிலே அவர்களுக்கு ஒரு தனி மகிழ்ச்சி. தாங்கள் இரகசியமாய்த் தெரிந்து கொண்ட பிறர் குறைகளேத் தங்களுடைய கற்பஞ சக்தியால் கண்ணும் மூக்கும் வைத்துப் பெரிதாக்குவார்கள். எல்லோரும் அறியத் தூற்றுவார்கள். இத்தகையோர் பெருமை சிறிதும் இல்லாத சிற்றினத்தோர். அறைபறையன்ன இக்கயவர் குழாத்தைத் திருவள்ளுவர் நன்கு தெரிந்து கூறுகிருர் பாருங்கள்:

> "அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்
> குற்றமே கூறி விடும்."

இக்குறளில் பெரியோர் சிறியோர் என்று பண்பிகளேக் கூருது, பெருமை சிறுமை என்று பண்புகளேயே கூறினுர், அவற்றின் மிகுதியைப் புலப்படுத்த வேண்டி. பிறர் குறைகளே அவர் மானம் காத்தல் வேண்டி மறைக்க வேண்டியது பெரியோர் கடமை. அங்ஙனம் செய்யாது, இல்லாதும் பொல்லாதும்

சேர்த்தும், பொய்யும் புனைந்துரையும் கலந்தும், எல்லோரும் அறிய வெளிப்படுத்துவதனுல், சிறுமை தான் குற்றமே கூறிவிடும் என்ருர். இங்கே "விடும்" என்ற சொல்லை நோக்குக. சிறு பிள்ளைகள் பட்டம் கட்டி, அழகுபடுத்திக் கயிற்றை மாட்டி உயரே கிளப்பிக் காற்றில் பறக்க விடுவார்கள் அல்லவா? அதுபோல், அற்பர்களும் வெளிக்குத் தெரியாது மறைந்து கிடக்கும் பிறருடைய குறைகளை, ஒன்றைப் பத்தாக்கி உயரே பறக்கவிட்டு அம்பலப்படுத்தி ஊர் முழுவதும் அறிய வைத்து விடுவார்கள். அவர்களுடைய குண்டுணிக் கற்பனைகளால், துரும்பு தூணுகும், கட்டெறும்பு கழுதையாகும். இவ்வாறு புனைந்து கட்டிப் பறக்கவிடுதலையே இங்கு "விடும்" என்ருர். இத்தகையோர் மனித சமுதாயத்தையே அரித்துத்தின்னும் விடக்கிருமிகள், மனிதஇனத்திற்குத் தீங்கை விளைக்கும் நச்சுப் புழுக்கள். நம்மிடத்திலே வந்து வேண்டியவர்கள் போல் பசப்புவார்கள். நம் முடைய ஆக்கத்திலே ஊக்கம் உள்ளவர்கள் போல் நடிப்பார்கள். நயவஞ்சகமாய் நம்முடைய குற்றம் குறை மெலிவுகளை யெல்லாம் இழுத்து இழுத்துத் தெரிந்து கொள்வார்கள். உடனே வெளியே போய், அவற்றை மிகைப்படுத்தி ஊர் முழுவதும் டமாரம் அடித்தது போல் பறை சாற்றுவார்கள். நம்முடைய வாழ்க்கை பாழாகும். இவ்வாறு புறங்கூறுபவன் உயிர் வாழ்வதை விடச் செத்துப்போனல். அவனுக்கும் உலகிற்கும் பெரும் புண்ணியம் என்கிருர் திருவள்ளுவர்.

> "புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
> அறங்கூறும் ஆக்கம் தரும்."

இப்படியே திருவள்ளுவரும் மற்றப் பெரியோர் களும் எத்தனையோ அறவுரைகளைக் கூறத்தான் செய்கிருர்கள். ஆனுல் அவற்றைக் கேட்க எல்லாருக்கும்

காது இருக்கிறதா? எல்லாரும் காது கொடுத்துக் கேட்கின்றனரா? "தோளாத சுரையோ தொழும்பர் செவி" என்று அப்பர் சுவாமிகள் வருந்தினர். கல்வியுடன் கேள்வியையும் இணைத்துச் சொல்வார்கள். கேள்வியைச் செவிச் செல்வம் என்றும், அது பிற செல்வங்கள் எல்லாவற்றினும் தலையானது என்றும் திருவள்ளுவர் கூறினர். பிறசெல்வங்கள் நிலையாதன வாய்த் துன்பத்திற்கு ஏதுவா யிருக்கும். ஆனால் கேள்விச் செல்வம் என்றும் அழியாது இன்பம் விளைவித்துக் கொண்டேயிருக்கும். அதனால் செவிச்செல்வம் செல்வத்துட் செல்வம் ஆயிற்று. கேள்வியைக் கருவியாகக் கொண்டு செவியைத்துளைத்தால்தான் மனத்தின் கண் நூற்பொருள் நுழைவதற்கு வழி ஏற்படும். செவியைத் துளையிடுவது கேட்கும் கரணமாகிய அகச்செவியைப் பாட்டும் உரையும் பயிலச்செய்து பண்படுத்துதல். அது ஆசாரியால் துளையிட்டுக் கடுக்கன் அல்லது தோடு மாட்டப்பெறும் புறச் செவியையன்று. அத்தகைய துளையிட்ட புறச் செவிகள் ஓட்டைச் செவிகளேயாம்.

கவி இன்பமும் இசை இன்பமும் தெய்வீக சக்தி வாய்ந்தன. இசையைக்கேட்டு மகிழ மாட்டாதவன் சூது, கொலை, களவு, சதிகளுக்குத் தயாராய் இருப்பவன் என்று ஆங்கிலக் கவி ஷேக்ஸ்பியர் சொல்லியுள்ளார். கவி இன்பம் என்றும் உவட்டாது அழியாது உள்ளத்தை மகிழ்விக்கக் கூடியது. அதன் இன்பத்திலே திளைக்கப் பயிலாதவர்களும், கொடுத்து வைக்காதவர்களும் இவ்வாழ்க்கையிலே எய்தக் கூடியதொரு தலைசிறந்தபயனை வீணாக இழந்தவர்களேயாவர். அவர்கள் வாழ்க்கை இன்பவொளி வீசாது இருளிலே மூடிக்கிடக்கும்.

> "சொற்பாவும் பொருள் தெரிந்து தூய்மை நோக்கித்
> தூங்காதார் மனத்திருளை வாங்காதானை."

என்ற திருநாவுக்கரசர் வாக்கை இங்கே நினைத்தல் தகும். ஏழில்மலை அரசன் ஒருவன் கவி இன்பமே இன்னதென்று அறியாது, கவிஞர்களைப் போற்றுது வாழ்ந்தான். அவனிடத்திற்கு ஒருநாள் ஔவையார் சென்றூர். அவர் வரவையும் கவனியாது அவ்வரசன் தான் அணிந்திருந்த வைரமணிமாலைகளையே புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான். உடனே ஔவையார் பாடினர்,

> " இருள்தீர் மணிவிளக்கத் தேழிலார் கோவே
> குருடேயு மன்றுநின் குற்றம்—மருள்தீர்ந்த
> பாட்டும் உரையும் பயிலா தனவிரண்டு
> ஓட்டைச் செவியும் உள."

இதனுல் ஔவையாரைக் காணுமலும் அவர் பாட்டைக் கேளாமலும் அரசன் இருந்தான் என்று தெரிகிறது. அவன் அணிந்திருந்த மணிமாலைகள் கூட ஒளிவிளக்கம் பெற்று இருள் கெடுத்திருந்தன. அவன் உள்ளமும் அறிவும் அவ்வாறு விளக்கம் பெற்றில என்று குறிப்பு மொழியாற் கூறினர் இப்பாடலில். கண்ணிருந்தும் ஔவையார் வருகையைக் காணுதிருந் தமையால் குருடனுமானுன். நல்ல இலக்கிய இன்பத்தை ஏற்காத அவன் செவிகளும் ஓட்டைச் செவிகளாயின.

சொற்சுவை பொருட்சுவைகளாகிய குணம் அலங் காரங்களையும் நவரசங்கள் எனப்படும் ஒன்பான் சுவை களையும் செவிநுகர் கனிகளாய் மாந்தி அறியமாட்டாது நாவின் ரசம் அல்லது சுவையாகிய கைப்பு, காழ்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பு என்னும் அறுசுவை கொண்ட உண்டிகளை மட்டும் சுவைத்து வயிற்றை நிறைத்து அறிவைக் குறைத்து உயிர்

வாழும் மக்களும் இருக்கிறுர்கள். இசையைக்கேட்கவும், வாழ்க்கைக்கு இனிய உறுதிப் பொருள்களைப் பற்றிப் பேசக் கேட்கவும் அவர்கள் செவிகள் விரும்ப மாட்டா. அத்தகையோரைப் பற்றித் திருவள்ளு வரிடம் கூறிஞல் அவருக்குப் பெருங் கோபம் வந்து விடும். அத்தகையோர் இருந்தால் என்ன? செத்தால் என்ன? என்று சத்தமிடுவார் திருவள்ளுவர். ஆனுல் அது உண்மைதானே. அத்தகையோர் செத்துப் போனுல் என்ன குடி முழுகிவிடும்? அல்லது அவர்கள் உயிருடன் இருந்தால்தான் என்ன நன்மை உண்டாகப் போகிறது? ஒன்றும் இல்லே. பின், அவர்கள் ஏன் உயிர் வாழ வேண்டும்? செத்தால் மறு பிறப்பிலாவது செவிச்செல்வம் பெற்று நல்வாழ்வு வாழலாம்.

"செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்."

அவர்கள் மக்கள் அல்லர், மாக்கள் அல்லது விலங்குகள் என்ருர்.

---

# ஏன் இப்படி ?

அறியாதார் ஆண்டவனைக் குறை கூறுவார்கள். ஏன் இப்படி? உலகில் பிறந்த மக்கள் யாவரும் கடவுளின் பிள்ளைகளானால், ஏன் கடவுள் எல்லோரை யும் ஒரே மாதிரிப் படைக்கவில்லை? ஒருவருக்கொருவர் உலகில் எவ்வளவு வேறுபாடுடன் காணப்படுகின் றனர்? ஒருவன் செல்வத்தில் செழிக்கிறான், மற்றொருவன் வறுமையில் வதங்குகிறான். ஒருவன் அறிவுடைய வனாய் இருக்கிறான், ஒருவன் முட்டாளாய் இருக்கிறான். ஒருவன் உடல் நலமும் அழகும் கொண்டு விளங்கு கிறான், ஒருவன் அசிங்கத்தில் ஆழ்ந்து, நோயால் அழுங்குகிறான். இதற்குக் காரணம் மனிதனுகக் காண வில்லை. ஏன் இப்படி? கடவுள் தான் நடுவுநிலை பிறழ்ந்து இவ்வாறு படைத்தனன் போலும் என்று அறியாது பலரும் குறைகூறுவார். ஒரு பக்கம் பணக்காரக் கும்பல், ஒரு பக்கம் பட்டினிப் பட்டாளம். ஓரோரிடங்களில் மாட மாளிகை கூட கோபுரங்கள், அவற்றின் நிழலில் ஒட்டைக் குடிசை கள், ஒட்டிய வயிறுகள். பூவிற் புறளுகிறான் ஒருவன், புழுதியிற் புதைகிறான் ஒருவன். ஒரு பக்கம் ஆரோக் கிய நிலை, ஒரு பக்கம் நோய் நொடித் துன்பங்கள். ஒரு பக்கம் இன்பமும் மகிழ்ச்சியும் எக்களிப்பும்; ஒரு பக்கம் துன்பமும் அழுகையும் ஏக்கமும். சாப்பறை ஒரு புறம், மணமுரசு ஒரு புறம். ஏன் இப்படி படைப் புக் கடவுள் ஓர வஞ்சகம் புரிய வேண்டும்? இதைப் பண்டே ஒரு புலவர் பாடினார். அவர் பெயர் பக்குடுக்கை நன்கணியார். அவர் பெயரிலிருந்தே நன்றாக உடை உடுத்தமாட்டார் போல் தெரிகிறது. அவர் பாடியது என்ன?

"ஒரில் நெய்தல் கறங்க ஓரில்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி யணியப் பிரிந்தோர்
பைதல் உண் கண் பனிவார்(பு) உறைப்பப்
படைத்தோன் மன்றஅப் பண்பி லாளன்
இன்னு(து) அம்மஇவ் வுலகம்
இனிய காண்கிதன் இயல்புஉணர்ந் தோரே."

ஒருவன் பிறக்கும் பொழுதே குருடனுய்ப் பிறக்கிருன். ஏன் இப்படி? கிறித்தவ வேதமாகிய பைபிளில், செயின்ட்ஜாண், சுருதி ஒன்பதில், இயேசுநாதரிடம் இதே கேள்வி கேட்கப்பட்டது. தான் செய்த பாவத்தாலா அல்லது தன் பெற்ருேர்களின் பாவச் செயலினுலா ஒருவன் பிறவிக் குருடனுய்ப் பிறக்கிருன்? இதற்கு இயேசுநாதர் நேரான விடையளிக்கவில்லே. மக்களின் துயரைப் போக்கவே தாம் பிறந்ததாக அவர் கூறித் தம்மிடம் வந்த குருடனுக்குப் பார்வையைக் கொடுத்தார். "பகலில் வெளிச்சம் இருக்கும் பொழுதே நான் ஆண்டவனின் அருட் கட்டளையை ஆற்றி முடிக்க வேண்டும். இரவு வரப்போகிறது. இருட்டில் ஒருவரும் ஒன்றும் செய்ய முடியாது. இந்த உலகில் உள்ளவரை நானே இந்த உலகின் சோதி." இவ்வாறு இயேசு கிறிஸ்து கூறினுர்

இது போலவே, திருவள்ளுவரிடமும் ஒருபெரு வியாதிக்காரனேக் காட்டி, 'இவன் ஏன் தொழு நோயுடன் பிறந்தான்?' என்று கேட்டனர். அதற்கு வள்ளுவர், 'இவன் முற்பிறப்பில் உயிர்க் கொலே புரிந்ததால் குட்டநோய் கொண்டு இப்பிறப்பில் வருந்து கிருன்' என்ருர்.

"உயிருடம்பி னீக்கியார் என்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்."

உடனே அடுத்த கேள்வி எழுந்தது. ஒரு சிலர் செல்வர்களாய் இருக்கவும், மிகப் பலர் ஏழைகளாய் வருந்தவும், ஒரு சிலரே கல்வியறிவு கொண்டு

விளங்கவும், மிகப் பலர் அறிவிலிகளாய் இருக்கவும் காரணம் என்ன? ஏன் இப்படி? இதற்குத் திருவள்ளுவர், 'அவனவன் முற்பிறப்பில் செய்ததவம் அது' என்று கூறினர் :—

" இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்."

இவ்வருமைத் திருக்குறளில் இலர் என்றது பணம் இல்லாதவரையும் கல்வி இல்லாதவரையும் குறிப்பதாகும். அவரவர்கள் வினைப்பயன்களுக்கு இயன்றவாறு இன்பதுன்பங்கள் உலகில் மாறி மாறி வருகின்றன என்று சைவசித்தாந்தமும் கூறுகின்றது. ஆதமும் ஏவாளும் செய்த பாவத்திற்காக மனிதக் குலமே வருந்துகின்றது என்று கிறித்தவ நூல்கள் கூறுகின்றன. ஏன் இப்படிக் கரும வினைப்பயன்களுக்கு உயிர்களைக் கட்டுப்படுத்திக் கடவுள் கஷ்டப்படுத்த வேண்டும்? தன் திருவருளைத் தட்டாமற் பொழிந்து எல்லா உயிர்களையும் ஒரு சேர ஒரே காலத்தில் ஆட்கொண்டு இன்பபுரிக்கு உடனே ஏன் அழைத்துச் செல்லக் கூடாது? இந்தக் கேள்வியை ஒருவன் திருஞான சம்பந்தரிடம் கேட்டுவிட்டான். அவர் என்ன விடையளித்தார்? 'இந்த ஆராய்ச்சியை யெல்லாம் நாம் செய்து பயனில்லை. சிவபெருமானை நேரே கண்டு தான் கேட்க வேண்டும்' என்றார்.

"ஆட்பாலவர்க்கு, அருளும் வண்ணமும் ஆதி மாண்பும்
கேட்பான் புகில் அளவில்லை கிளக்க வேண்டா
கோட்பாலனவும் வினையும் குறுகாமை எந்தை
தாட்பால் வணங்கித் தலைநின்றிவை கேட்கத் தக்கார்."

இதைச் சிறிது சிந்தித்துப் பார்ப்போமானால், சம்பந்தரின் விடையும் இயேசுநாதரின் விடையும் ஒன்று தான் என்பதை உணரலாம். இது ஏன் இப்படி? அது ஏன் இப்படி? என்றெல்லாம் வீணாக மூளையைப்

போட்டுக் குழப்பிப் பயன் இல்லை. உலகியலின் நிலைமையை உள்ளவாறு உணர்ந்து அதற்கேற்ப நடந்து கொள்வது தான் அறிவுடைமையாகும்.

"எவ்வ துறைவ துலகம் உலகத்தோ
டவ்வ துறைவ தறிவு.''

என்றார் திருவள்ளுவரும். கரும வினைப் பயன் எவ்விதம் முதன் முதலில் உயிர்களைச் சென்று பற்றியது என்பதைப் பற்றி இப்பொழுது ஆராய்ச்சி செய்து பயனில்லை. எவ்விதம் அதனை ஒழிப்பது என்பது தான் நாம் இப்பொழுது கவனிக்க வேண்டிய பொருளாகும். நல்லதன் நன்மையும் தீயதன் தீமையும் இல்லையென்போர் புல்லறிவாளர்களே யாவர். 'கேடும் பெருக்கமும் இல்லல்ல' என்றார் வள்ளுவரும். தினையை விதைத்தவன் தினையை அறுக்கிறான். வினையை விதைத்தவன் வினையை அறுக்கிறான். நல்லனவற்றை விரும்பும் நாம் ஏன் நல்லனவற்றையே செய்யக் கூடாது? இப்பொழுது வெளிச்சம் இருக்கிறது. ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் இன்று தான் பகல். இருட்டு கூடிய சீக்கிரம் வந்து விடும். இளமையும் உடல் நலமும் அறிவுவிளக்கமும் கொண்டு வாழும் காலமே பகல். முதுமை தான் இரவு. கிழ வயதில் அறிவு மங்கி ஆற்றல் குன்றி விடும் அது வருமுன் நாம் ஆண்டவனது ஆணைப்படி நடந்து அவனை அடைய முயல வேண்டும். ஒவ்வொருவனும் தான் வாழும் வரை இந்த உலகின் சோதி தான். இளமைக் காலமெல்லாம் ஆண்டவனை மறந்து அவன் அருள் வழியே செல்லாது, முதுமைக் காலத்திலே நாம் வருந்திப் பயன் இல்லை. அப்பொழுது வாழ்க்கையின் வளைவுகளில் எல்லாம் இருள் வந்து கவ்விக்கொள்ளும் கிழவயதில் ஆண்டவனிடத்தில் பல்லைக்காட்டவும் வழியின்றி எல்லாப் பல்லும் பொல்லாப் பல்லாய்

உதிர்ந்து விடும். பசி வேளையில் அன்னம் வேண்டு மானால், காலைப் பொழுதிலேயே நெல்லை அவித்து வெயிலில் உணக்கிக் குத்தி அரிசியாக்க வேண்டும். மாலைப் பொழுதில் புழுங்கலைக் காய வைத்தால், அது எப்பொழுது காய்ந்து அரிசியாகி உலையேறப் போகிறது?

"கத்து கடல் சூழ்நாகைக் காத்தான தன் சத்திரத்தில்
அத்தமிக்கும் போதில் அரிசி வரும்—குத்தி
உலையிலிட ஊருறங்கும் ஓரகப்பை அன்னம்
இலையிலிட வெள்ளி எழும்."

என்று காளமேகப் புலவர் பசியால் வாடிக் கதறியது போல் ஆகிவிடும் நம்முடைய கதையும். ஆதலால் நாள் உள்ள பொழுதே நாம் அறநெறி யொழுகி ஆண்டவனை மறவாது நாம் பணியை ஆற்ற வேண்டும். ஆடியோடி அமரும் காலத்தில் அரகராப் போடுவதால் யாது பயன்? இதனை அப்பர் சுவாமிகள் அகம் கரைந்து உருகிப் பாடுகிறார் பாருங்கள்:—

"முன்பெலாம் இளையகாலம் மூர்த்தியை நினையா தோடிக்
கண் கண இருமி நாளும் கருத்தழிந் தருத்தமின்றிப்
பின் பகல் உணங்கல் அட்டும் பேதைமார் போன்றேன்உள்ளம்
அன்பனாய் வாழமாட்டேன் அதிகை வீரட்டனீரே."

நாம் ஒரு நன்மையைச் செய்தால் நல்ல பலன் கிடைக்கிறது. நாம் ஒரு தீங்கைச் செய்தால் தீய பலனே கிடைக்கிறது. இதை நாம் அனுபவத்தி லிருந்து நாமே தெரிந்து கொள்ளுகிறோம். இதை எவரும் மறுக்க முடியாது. பிறர் நமக்கு இதை எடுத்துச் சொல்ல வேண்டுவதில்லை. நாமாகவே அறிகிறோம். பிறர் நம்மிடம் அன்போடும் அருளோடும் நடக்க வேண்டும் என்று நாம் இயல்பாகவே விரும்பு கிறோம். பிறர் நம்மிடம் காட்டும் அன்பு நமக்கு இன்பம் தருகிறது. அதே இன்பத்தை நாம் பிறருக்கும் அளித்தால் தானே நமக்கும் அவ்வின்பம் கிடைக்கும்?

பின் ஏன் நாம் பிறரிடம் அருளோடு ஒழுகத் தயங்க வேண்டும்? அன்பை மறுக்க வேண்டும்? இதற்கு முன்னெல்லாம் நாம் பிறரிடம் அன்பு காட்டாததால் அல்லவா துன்பச் சுழியிலே சிக்குண்டு வருந்திக் கொண்டிருக்கிறோம்? இந்த உண்மையைத் தெரிந்த பிறகும் அன்பை மறந்தால் அதை என்னவென்று சொல்வது? அருள் நெறி ஒழுகி நல்வினை செய்வதில் என்ன வருத்தம் இருக்கிறது? இந்தச் சிந்தனையைத் தட்டி எழுப்புவதற்கல்லவா,

"பொருள் நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள் நீங்கி
அல்லவை செய்தொழுகு வார்."

என்ற திருககுறள் எழுந்தது? நாம் முன் செய்த பாவங்களுக்கு வருந்துவதைக் காண நம்மாலேயே சகிக்க முடியவில்லை. கவலை நம்மை அள்ளித் தின்கிறது. தாங்கொணுக் கவலையால் தலை மயிரும் வெளுத்து நரை திரை கண்டு விடுகிறது. இனியாவது துன்பம் நீங்கி இன்பம் அடைய நாம் புண்ணியம் செய்ய வேண்டாமா? அப்பொழுது தானே எதிர் காலத்திலாவது இன்பநிலை நமக்கு ஏற்படும்? பட்டும் தெரியாது போனுல் நம்மை விடப் பாவிகள் வேறு யார் உண்டு? ஏன் இப்படி? என்று அப்பர் அழுது பாடுகிறுர் :–

"விளைக்கின்ற வினையை நோக்கி வெண்மயிர் விரவி மேலும்
முளைக்கின்ற வினையைப் போக முயல்கிலேன் இயலவெள்ளம்
திளைக்கின்ற முடியினுன்தன் திருவடி பரவமாட்டா (து)
இளைக்கின்றேன் இருமி யூன்றி என் செய்வான் தோன்றினேனே."

இவற்றுல் நாம் அறிவது என்னவென்றுல், நமக்கு வரும் நோயும் துன்பமும் பிறரால் தரப்படுவனவல்ல. நாமாகவே வரவழைத்துக் கொள்பவைதாம். கெடுதல் வேண்டாதவர்கள் கெடுதல் செய்வதை நிறுத்த

வேண்டும். தீவினைகளை நாம் ஒழித்து நல்வினைகளை நயமுறச் செய்யவேண்டும். நம்மை நாமே காப்பாற்றிக் கொள்ள முடியாவிட்டால், கடவுளாலும் நம்மைக் காப்பாற்ற முடியாது. நம்மை நாம் பாதுகாக்க நல்வழியில் முயன்ருல் இறைவன் திருவருள் தானே வரும்.

"தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்."

---

# வெண்ணிலவில்

வாயிலின் முன்றிலில், வாசுகியம்மையார் வழி பாடு நடத்த வள்ளுவதேவர் வான்நோக்கிய வண்ணம் வீற்றிருந்தார். எங்கும் நிலவு பளிச்சென்று அடித்துக் கொண்டிருந்தது. நீல வானிலே நிறைநாட் செல்வனுகிய திங்கள் கண்கவர் வனப்பொடு காட்சியளித்தான். சுற்றும் மீனினம் மகிழ்ச்சியொடு மிளிர்ந்தன. வானையே நோக்கியிருந்த வள்ளுவர் உள்ளத்தில் எண்ண அலைகள் பின்னி எழுந்தன. பத்துப் பன்னிரண்டு நாட்களுக்கு முன் ஒரு சின்னக் கம்பிபோல் நின்ற மின்னற் பிறை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து, கலையெல்லாம் நிறைந்து இன்று முழுமதியமாக அழகுடன் விளங்குகின்றது. அக்கலை வளர்ச்சியிலுள்ள கவர்ச்சிதான் என்னே! அக்குறைவிலா நிறைவிலுள்ள குளிர்ச்சிதான் என்னே! ஆனால் இவ்வளர்மதிக்குள்ள வனப்பு தேய்மதிக் கில்லையே! நிறைந்தது குறைவதைக் காணவே கண் கூசுகின்றது. தேய்மதியம் தேசு குன்றிவிடுகிறது. மாய் மதியம் நமது மனதை வருத்துகிறது. குறை மதியின் கோரக் காட்சி வெறுப்பை விளைவிக்கிறது. இவ்வுண்மையை உலகிடையிலும் நாம் காண்கிறோம்.

இவ்வுலகிலே நட்பைப் போல் செயற்கரியது வேறு யாதுளது? தண்டாமரையிலே தாதாடிய வண்டு சந்தன மரத்தின் கொம்பரின் உம்பர் சந்திர வட்டுப் போல் இழைக்கும் இருலில் ஊறிடும் தேன், சிறுகச் சிறுக வளர்வதாகி நிறைந்து வந்து இன்பம் பயப்பது போல் பெரியோர் கேண்மையும் பெருக வளர்ந்து இன்பமூட்டும். அறிவுடையார் நட்புகள் பிறை நிறைந்து பெருகிவரும் தன்மை போல நாள் தோறும்

பெருகிக் கொண்டே வரும். ஆனல் அந்தோ! அறிவிலாப் பேதை மாக்கள் செய்யும் நட்புகளோ நிறைந்த மதி பின் குறையும் தன்மைபோல நாள் தோறும் குறைந்துகொண்டே வரும். அறிவுடையார் எண்ணுது எதையும் செய்யாராகலின் அவர்கள் செய்யும் நட்பு முதலில் சுருங்கிய அளவிலேயே தோன்றி அஃது இனிமை விளைவிப்பது கண்டு நாள் தோறும் குறையாது நிறைந்துகொண்டே வரும். பேதையர் மேன்மேலும் விரைந்து எதையும் செய்து விடுவராதலின், அறியாமையின் காரணமாகத் தொடக்கத்திலேயே அளவு கடந்த நட்பைச் செய்து காட்டிப் பின் அன்னரின் பேதைமை இன்ன விளைப்பது கண்டு பெரும்பேதுறுவர். விரைவில் அவர்கள் நட்பு சந்திரன் தேய்ந்தழிந்து மறைவதுபோலக் குறைந்து கொண்டே வந்து, பின் இல்லையாகிவிடும். தேய்மதி யோன் ஒளி சாம்பி உருவிழந்து காட்சிக்கு இன்னுதவனுதல் போல், தேய்மதியார் நட்பும் இனிமை பயவாது வெறுப்பையூட்டி வெறுவிதாகிவிடும். அப்புல்லறிவாளர் தொடர்பு குறைவதே தவிர வளர்வ தென்பது ஒரு நாளும் இல்லை. அறிவுடையார் தொடர்பு குறையாது வளர்பிறை போல் வளர்ந்துகொண்டே வரும். இவ்வாறு மதியினை முன்னும் பின்னும் உற்று நோக்கி,மதியுடையார் செயலையும் உணர்ந்த திருவள்ளுவர் திருவாக்குப் பின் வருமாறு எழுந்தது :—

"நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு."

தமது உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் வெள்ளை மதியை வள்ளுவர் மீண்டும் கருதலானர். திங்கள் ஒளி நிறைந்து விளங்கியது உண்மைதான். ஆனல் அவ்வொளியினும் சிறிது இருட்சாயல் அல்லவோ ஓடிக் கிடந்தது? கறை பிடித்ததுபோல்

ஒரு சிறு களங்கம் அத்திங்களின் ஒளியை மறுப்படுத்தி விட்டதே! மறுவோ மிகச் சிறிதுதான். ஆனால் அத்தனை ஒளியையும் ஒரு சிறு மறு மாசுபடுத்தி விட்டதே! திங்கள் கீழிடங்களிலே இருந்திருப்பின் அஃது ஒரு குற்றமாகவே தோன்றியிராது. மேலிடத்திலே உயர்ந்த ஒழுக்குடன் ஓங்கிச் செல்வதால் அதனிடத்துள்ள ஒரு சிறு குற்றங்கூட மறைபடாமல் உலகம் முழுதும் அறியும்படியாகிவிட்டது. இது போலவே தான் உயர்ந்த குடியின்கட் பிறந்தார் மாட்டுள தாங் குற்றம் சிறிதே யாயினும் உலகெங்கும் பரந்து வெளிப்பட்டுவிடும். வானின் கண் விளங்கும் மதி போன்றவர் உயர்ந்த குடியிற் பிறந்தார். அவரிடத்தே யாதானும் ஒரு குற்றம் நிகழ்ந்து விடுமாயின், அது திங்களின் கண்ணே விளங்கும் மருவினை ஒக்கும். திங்களின் களங்கத்தை உலகத்தினின்றும் எவ்வாறு மறைக்க முடியாதோ, அதுபோல், உயர் குடிப்பிறந்தார் குற்றத்தையும் உலகம் அறியாவாறு செய்துவிட முடியாது. திங்களின் மறு சிறிதாயினும் அதன் பேரொளியின் காரணத்தாலும், உயரிய இடத்தில் தோன்றும் ஏதுவானும், வெளிப்பட்டு விடுகிறது. அது போன்றே குற்றம் சிறிதாயிருப்பினும் அது புகழுடைய உயர் குடியினர் பால் நிகழுமாயின் யாவராலும் அறியப்பட்டுவிடும். அதே குற்றம் அல்லது அதை விடவும் பெரியதொரு குற்றம் கீழானோரிடத்துக் காணப்படுமாயின், அதனைக் கவனிப்பார் ஒருவருமிலர். ஆதலால் உயர்குடிப்பிறந்தார்க்கு உள்ள பொறுப்பு அதிகம். அவர்கள் தம்மிடத்துக் குற்றம் சிறிதாயினும் வராதபடி தங்களைக் காத்து ஒழுகுதல் வேண்டும் என்ற உண்மை திங்களிடமிருந்து புலனாவதை வள்ளுவர் கண்டார். அவர் வாய்மொழியும் பிறந்தது :—

" குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போல் உயர்ந்து."

இம்மதியம் எவ்வளவு எழில் வாய்ந்து ஒளிர்கின்றது! அதன் நிலவொளி மனதிற்கு மட்டற்ற மகிழ்ச்சியை ஊட்டுகின்றது. முதியோர் உள்ளத்தில் உவகையைப் பாய்ச்சுகின்றது. இளையோர் இதயத்தில் இன்ப உணர்ச்சிகளை எழுப்புகின்றது. அதன் கதிரொளி காதல் வீணையிற் கவி பாடுகிறது. இவ்வாறு சிந்தித்துக்கொண்டிருந்த வள்ளுவர் உள்ளத்திலே இளங்காதலர்கள் இந்நிலவொளியில் எவ்வெவ்வாறெல்லாம் தங்கள் காதல் உணர்ச்சியைக் காட்டி நிற்பர் என்ற காதற் சித்திரங்கள் ஒன்றன்பின் ஒன்ருக உருவெடுக்கலாயின.

ஓர் இளம் பெண்ணின் உள்ளத்தை ஓர் இளைஞன் கொள்ளை கொண்டான். களவுக் கூட்டத்தில் அவனைக் கலந்து பிரிந்த காதலி, பின்னுள் இரவுக் குறியிடை அவன் வருகையை எதிர் நோக்கி நிற்கிருள். இடையீடுகளினுலும் அல்ல குறியானும் அவனை எய்தப் பெருது மனம் நொந்தாள். அவன் பிரிவுக் காற்ருது கலங்கிய அவள் மேனி வாடிய வாட்டம் கண்டு ஊரெல்லாம் அலர்பிறந்திருந்தது. வானிலே திங்களைக் கண்ட தலைவி, பாம்பினுல் பற்றப்படும் பொழுது மதியம் எவ்வாறு ஒளியிழந்து மங்கிவிடுகிறது என்பதை உன்னினுள். தலைவன் தன் நலனுண்டு பிரிந்தபின் தன் தளர்ந்த நிலையும் அவ்வாறே உள்ளது என நினைந்தாள். வானிலே உள்ள மதியம் பாம்பின் வாய்ப் பட்டால், அதனேடு யாதொரு தொடர்புமில்லாத உலகத்தாரெல்லாம் கலங்கியும் புலம்பியும் பூசல் விளைத்தும் நொந்து வருந்துகிருர்கள். தலைவன் உண்ட அவள் நலத்திற்கு வருந்துவார் ஒருவருமிலர். ஏதோ ஒரு நாள் அவள் தலைவனைக் கண்ட குறைக்காக,

மதியினைப் பாம்பு விழுங்கும்போது உலகத்தாரிடை உண்டாகும் அலர் போல, இவள் மாட்டும் அலர் உண்டாகி ஊரெல்லாம் இதே பேச்சாகி விட்டதே என்று வருந்துகிறாள் :—

'கண்டது மன்னும் ஒருநாள் அலர் மன்னும்
திங்களைப் பாம்புகொண்டற்று.'

திங்களின் மறைவு உலகிடை எவ்வளவு அமளியை உண்டு பண்ணுமோ, அதுபோலத் தலைவி தலைவனுடன் கொண்டுள்ள தொடர்பைப் பற்றியும் ஊரெல்லாம் அலர் அமளிபடுகிறதே என்பது அவள் குறித்த பொருள்.

தலைவி இவ்வாறு தவித்து நிற்கையில், அவளைக் காண வந்த தலைமகன் சிறைப்புறமாக நிற்கிறான். அவ்வமயம் வான் மீதிலே தண்மதி முதிர்ந்து கதிர் சாய்ப்பதைக் காண்கிறான். தன் காதலியின் முகம் போலவே இருக்கிறது அம்மதியம். ஆயின், வானின் கண்ணுள்ள உடுக்குலங்கள் ஏன் ஓரிடத்தில் நில்லாமல் நிலைமாறி இயங்குகின்றன என்ற ஆராய்ச்சி அவனுக்குப் பிறந்தது. ஆம்! தன் காதலியின் முகத்தையும் திங்களையும் கண்ட மீனினங்கள் எது உண்மையான திங்கள் என்று தெளிவு பெறாது பெண்ணினிடத்தும் விண்ணினிடத்துமாய் நகரும் காரணத்தால் தம் நிலையினின்றும் கலங்கித் திரிகின்றன என்ற முடிவுக்கு வருகிறான் : -

'மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.'

ஆ! என்ன பேதைமை! இந்த விண்மீன்களுக்கு இவ்வுண்மை தெரியவில்லையா? இதிற் கலங்குவதற்கு யாதொரு காரணமும் இல்லையே! முன்னெல்லாம் குறைந்தேயிருந்து சிறிது சிறிதாக நிரம்பப் பெற்று

இப்பொழுது விளங்குகின்ற இந்த மதி வேறு, என் காதலி முகம் வேறு என்பதை எளிதில் தெரிந்து கொள்ளலாமே இத்திங்கள் கலையனைத்தும் நிரம்பப் பெற்றுங் கூட, அதன் மறு மறைந்த பாடில்லையே. என் மாதரின் மாசற்ற முகத்தில் அத்தகைய களங்கம் கிடையாது என்பதை அறியலாமே, என்று மீன்களை நோக்கி இரங்கினன். திங்களை இகழ்ந்தான். தன் தலைவியைப் புகழ்ந்தான். திங்களுக்குள்ள தேய்தலும், வளர்தலும், மறுவுடைமையும் ஆகிய குறைகள் தன் தலைவி மாட்டில்லாமை நோக்கி வியந்தான் :—

"அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து."

மேலும் திங்களை விளித்துப் பகர்கின்றான். 'ஐயோ பாவம்! ஏ மதியமே! நீ நன்றாய் இரு! நான் வேண்டா மென்று சொல்லவில்லை. என் ஆருயிர்க் காதலியின் முகம்போன்று பொலிவடையப் பார்க்கின்றாய் நீ. நான் மகிழும் வகை அவள் முகம் போல நீ ஒளி வீசவல்லை யாயின் உன்னையும் நான் காதலிக்கத் தவறமாட்டேன். ஆனால் உன் களங்கத்தைக் களையத்தான் உன்னால் முடியாதே. அதனால் நீ என் காதலி முகம் போல எங்ஙனம் கவின் விடமுடியும்? அது உன்னால் முடியாததால் நீ என்னாற் காதலிக்கப்படாய்.'

" மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி."

தலைவன் மதிக்கு மற்றோர் உபாயமும் கூறுகிறான்: "ஏ மதியமே! நான் இன்னொன்றும் உனக்குக் கூற விரும்புகிறேன். இந்தக் களங்கம் ஒன்றுதான் உனக்குள்ள குறை என்று நினைத்துவிடாதே. தேய்ந்து தேய்ந்து மெலிவதுதான் உனக்குள்ள குறை என்றும் எண்ணாதே. என் காதலி முகத்தோடு ஒத்து விளங்க வேண்டுமானால், நீ இவ்வாறு பலரும் காணும்படியாக

வெளிக்கிளம்பலாமா? ஒரு நல்ல உயர் குடியிற் பிறந்த பெண்ணின் முக நலன் அனைத்தையும் அவள் கணவன் ஒருவனே அறிவான். ஏனெனில், உத்தம மங்கையின் பார்வை தன் கணவனிடத்தன்றிப் பிறரிடத்திற் செல்லாது. ஆதலால் அவள் முகத்துக் கண்ணழகையும் சேர்த்து அவள் முகப் பொலிவினைக் கண்டு மகிழும் பேறும் வாய்ப்பும் அவள் கணவனுக்கே உண்டு. குவளை மலர்போலுங் குளிர்ந்த கண்களையுடையவள் என் காதலி. அவள் முகத்தின் நலன் முழுதையும் கண்டு அனுபவிப்பவன் நான் ஒருவனே யாவேன். பிறரால் அது கூடுவதன்று. பிறர் காணத் தன் முகத்தை வெளிக் காட்டமாட்டாள் என் காதலி. நீ பலரும் காணும்படியாய்ப் பரந்த வானிலே மிதந்து வருகிருய். உன் எழில் நலத்தை உலகினனைத்தும் உகந்து பருகுதலால் தூய்மை குன்றிய குறையுடையாய். தூயவளான என் காதலி நான் கண்டு மகிழும் நிறையுடையாள். நீ எவ்வாற்ருனும் அவளுக்கு நேராக மாட்டாய். எவ்வகையிலாவது நீ அவள் முகத்தை ஒத்து விளங்குவையாயின், நீ இவ்வாறு பலருக்கும் அவள் முகத்தைக் கொண்டு சென்று காட்டுவதை நான் விரும்பமாட்டேன். என் காதலி முகத்தை நீ ஒத்திருக்க வேண்டுமாயின், எனக்கன்றிப் பிறர்க்குப் புலப்படாது ஒதுங்குவாயாக."

"மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றன் மதி."

களவுக் கூட்டம் கழிந்தபின் தலைவி தலைவனை மணந்துகொண்டு கற்பொழுக்க நெறி நின்று இல்லறம் நடத்தி வருகிருள். தலைவன் பொருள் காரணமாக அவளைப் பிரிந்தவன் குறித்த காலத்தில் மீளவில்லை. தலைவி தனிமைத் துயருக்காற்ருது தவிக்கிருள். இராப்பொழுதிலே சந்திரன் வானிடைவயங்கி வருத்தத்

தொடங்கினான். தலைவியின் சிந்தனைச் சுழல் வட்டமிட்டது. தன்னை வருத்துவது போலத் தனித்திருக்கும் தலைவனையும் இந்நிலவு காயுமல்லவா? அவன் அங்ஙனம் வருந்த நேர்ந்தால், தன்னை நினைந்து கொண்டு விரைந்து வருவது திண்ணம். அதற்காகவாவது இந்நிலவு மறையாமல் எரித்துக் கொண்டிருக்க வேண்டும். அவன் அவ்வாறு விரைந்து வராவிடினும், தன்னைப் பற்றி நினைத்தற்காவது நிலவு உதவி செய்யும். தனது நெஞ்சிலே தலைவன் பிரியாது குடி கொண்டிருக்கிறான். அதனால் மதி தன்னை எவ்வளவு வருத்தினாலும் தான் தாங்கிக் கொள்ளலாம். அது மட்டுமல்ல. இதே வேளையில் தன் கணவனும் மதியைப் பார்க்கத்தானே செய்வான்! ஆதலால் அவன் கண்கள் சந்திரனைச் சேர்ந்திருக்கும். அவன் கண்கள் சேர்ந்திருக்கும் பொருளைத் தன் கண்களும் சேர்ந்து காண்பதில் ஓர் இன்பம் இருக்கத்தானே செய்கிறது! ஆதலால் அம்மட்டுக்காவது, இம்மதியம் மறைந்து விடாது ஒளி விட்டுக்கொண்டிருக்க வேண்டும். இல்லை! இம்மதியம் காய்வதால் தன்னால் உறங்கவும் கூடவில்லை. நிலவு நீங்கினால், தன் கண்ணிமை பொருந்திக் கனவின் கட் கணவனைக் காணலாம், என்று, நிலவு வேண்டும் என்றும், வேண்டாம் என்றும் பல பல படியாகத் தலைவியின் எண்ணங்கள் ஓடின. அவற்றைக் குறிப்புணர்த்தும் திருக்குறளும் அரும்பி மலர்ந்தது:—

" விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி."

இவ்வாறு ஒவ்வோர் எண்ணமும் ஒவ்வொரு வண்ணக் குறளாய்த் திருவள்ளுவர் கருத்திடைத் திரண்டது. முத்தொளி பரப்பி வெண்ணிலாவும் வானிலே உருண்டது.

---

# வள்ளுவர் செய்த புரட்சி

இத்தலைப்பைக் கண்டவுடன் பலர் பயப்படத்தான் செய்வார்கள். புரட்சி என்பது ஓர் அஞ்சத்தக்க சொல்லாகி விட்டது. அச்சொல் அரசியல் உலகிலே அதிகம் அடிபடுவதால் அச்சுறுத்துகிறது. புரட்சி என்றாலே அரசியற் புரட்சி என்றுதான் பலரும் நினைக்கக்கூடும். ஆனால் அது ஒன்றேதான் உண்டு போலும் என்று நினைத்துவிடக் கூடாது. சமூகப் புரட்சி, சமயப் புரட்சி, வாழ்க்கைப் புரட்சி அறிவுப் புரட்சி எனப் பலவகைப் புரட்சிகள் உள்ளன. ருசிய நாட்டிலே நடந்தது அரசியற் புரட்சி, துருக்கி நாட்டிலே நடந்தது சமூகப் புரட்சி, கௌதம புத்தர் நடத்தியது சமயப் புரட்சி, ஆங்கிலேயர் பாரதத்தில் செய்தது வாழ்க்கைப் புரட்சி, நமது திருவள்ளுவர் செய்தது அறிவுப் புரட்சி.

புரட்சி என்றவுடன் அஞ்ச வேண்டியதில்லை. புரட்சியின்றேல் வளர்ச்சியில்லை. மறு மலர்ச்சியும் இருக்காது. கழனி நிலங்களிலும் தோட்டங்களிலும் உறைந்து கிடக்கிற மண்ணை வெட்டிப் புரட்டிப் புரட்டிக் கொடுத்தால் மட்டுமே வளமான விளைச்சல் உண்டாகிறது. அதுபோல் மக்கள் மனதில் பாறையாக உறைந்து கிடக்கிற அறியாமையைப் போக்கி அறிவை வளர்ப்பதற்கும் இத்தகைய புரட்சி அவசியம்வேண்டும். புரட்டுதலைச் செய்வது புரட்சி. புரட்டுதல் என்றால் கீழ்மேலாகத் திருப்புதல். நல்லதன் பிறழ்வு கெடுதலாகும். அது போல் கெட்டதன் பிறழ்வு நல்லதாகவும் முடியும். திருவள்ளுவர் அறியாமையை மாறுபடுத்திப் புரட்டிப் போட்டு வளர்த்தார். ஆதலால் அவர் செய்த புரட்சி இன்றியமையாத நன்மை வாய்ந்த உண்மை அறிவுப் புரட்சி. அவருடைய அறிவுரைகள்

அவர் காலத்து மக்களைத் திடுக்கிடச் செய்திருக்கும் என்பதில் ஐயமில்லை. அதனால் எதிர்ப்பும் பலமாக இருந்திருக்கலாம். இக்காலத்தில்கூட வள்ளுவரை மறுக்கும் வன்கணாளர் இருக்கும் போது இரண்டா யிரம் ஆண்டுகளுக்குமுன் கேட்கவா வேண்டும்?

முதலில், கல்வி உலகிலே அவர் செய்த அற்புத மாறுதலைப் பார்ப்போம். கல்லூரிகளிற் படிக்கும் மாண வர்கள் இக்காலத்தில்கூட, என்ன நினைக்கிறார்கள்? எப்பொழுது இந்தத் தேர்தல் தொல்லைகள் ஒழியும்? படிப்புக்கு ஒரு முழுக்குப் போட்டு விட்டு விடுதலை பெற்று உலாவலாம். எப்பொழுது பார்த்தாலும் புத்த கங்களைக் கட்டிக்கொண்டு அழவேண்டியதாய் இருக் கிறதே! தேர்தல் முடிந்து வெற்றியும் பெற்றுவிட்டால் பிறகு அல்லல் அற்று இருக்கலாமே; புத்தகங்களைப் படிக்க வேண்டிய வருத்தமே இருக்காதே! என்று எண்ணமிடுகின்றனர். இருபது வயதுக்குள் படிக்க வேண்டுவனவெல்லாம் படித்து விடலாம். பிறகு படிக்க வேண்டியதே யில்லை என்று மனப்பால் குடிக்கின்றனர். ஆனால் அவர்கள் திடுக்கிடும் விதத்திலே திருவள்ளுவர் என்ன சொல்கின்றார் பாருங்கள் :—

"யாதானு நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு."

ஆகா! படிப்புக்கு முடிவே கிடையாது. ஒருவன் வாழ்க்கை பூராவும் மாணாக்கனாகவே இருக்க வேண்டி யதுதான். தன் கடைசி மூச்சு இருக்கிற வரையில், செத்துப் பிணமாக விழுகிற வரையில் ஒவ்வொருவனும் கையில் புத்தகம் எடுத்துக் கருத்தூன்றப் படித்து அறிவை வளர்க்க வேண்டும். கல்வியுள்ள ஒருவன் சென்ற இடமெல்லாம் சிறப்பெய்துவான். எந்த நாடும் எந்த ஊரும் அவனுக்கு மரியாதை செலுத்தும். உலகத் திலுள்ள எல்லா ஊர்களும் நாடுகளும் அவனுடைய

சொந்த ஊர்களும் நாடுகளும் ஆகிவிடும். ஆதலால் அவன் சாகும் வரை படித்துக் கொண்டே இராமல் வேறு என் தான் செய்வது? அதை விட அவனுக்குச் செய்யக் கூடியதாகச் சிறந்தது வேறு எது தான் இருக்கிறது? அறிவுக்கு எல்லேயே இல்லே. அறிவைச் சம்பாதிப்பதற்கு இந்த ஒரு பிறவி போதாது. எத்தனே பிறவி எடுத்தாலும் அறிவு வளர்ச்சிக்கு அவை தேவைப்படும். பிறவி தோறும் ஒருவனுடைய வினைப் பயன் அவனேச் சென்று சென்றடைதல் போல், கல்வி யறிவும் பல பிறவிகளிலும் சென்று அவனுக்குக் கை கொடுத்துதவும்.

'' ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையும் ஏமாப் புடைத்து ''

அறிவு எவ்வளவுக்கெவ்வளவு ஒருவனுக்கு ஏற்படுகிறதோ அவ்வளவுக்கு அவன் அறியாமை நீங்கும். "அறிதோ றறியாமை கண்டற்ருல்" என்ருர் திருவளளுவர். நூல்களானும் நுண்ணுணர்வானும் பொருள்களே அறிய அறிய முன்னே அறியாமையே காணப்பட்டு நிற்கும். புதியனவற்றை நாம் அறியும் தோறும் நமது முன்னேய அறியாமை மலேமலேயாக நம் முன் குவிந்து கொண்டுதான் இருக்கும். அது மட்டும் அன்று. இன்று நாம் அறிந்ததாகக் கொண்ட அறிவு நாளே புதியனவற்றை அறியும் போது அறியாமையாக மாறிவிடுகிறது. ஒவ்வொரு நாளும் நாம் என்ன பேசுகிருேம் என்று சிந்தித்துப் பார்ப்போம். 'ஐயோ! நான் அப்படியல்லவா நினேத்தேன்! அது தவருகப் போய் விட்டதே! உண்மை வேறு விதமாக வல்லவா இருக்கிறது!' என்று பேசுகிருேம். இன்னும் சில நாள் போனுல் இந்த உண்மையும் பொய்யென்று பட்டு வேருெரு உண்மை புத்தம் புதிதாகப் புலனு கிறது. இன்று நாம் உண்மையெனக் கொள்வது நாளே பொய்யாக மாறிவிடுகிறது. பெரிய பெரிய மனிதர்கள்

கூட இமயமலை போன்ற தவறுகளைச் செய்து விட்டோமே என்று ஏங்குவதைப் பார்த்திருக்கிறோம். அறிவுவளர்தல் என்பது அறியாமை நீங்குதலே யாகும். பொய்யும், சூதும், மாயமும், இருளும் மண்டிக் கிடக்கும் இவ்வுலக வாழ்க்கையில், ஒன்றை வேறு ஒன்ருகக் கருதி வாழும் அறிவே அறியாமை. அதன் உண்மை தெரியும் பொழுது, முன்னர் அதனைத் தவருகக் கொண்டிருந்த அறிவு அறியாமையாக மாறு கிறது. நேற்றைய அறியாமையைக் கண்டுபிடித்ததே இன்று நமது அறிவாகிறது. நாளை புதிதாக ஒன்றை அறிந்தவுடன் இன்று நாம் அறிவு எனக் கொண்டாடு கின்ற இது நாளை அறியாமையாக மாறிவிடும். இப்படியே நமது முன்னைய அறிவு பின்னைய அறியா மையாய் மாறிக்கொண்டே போகும். இதற்கு முடிவே இல்லையா? என்ருல், முடிவு நாம் வாலறிவனை அடைவது தான். அதுவரை இந்த அறியாமையே அறிவாக நம்மைச் சூழ்ந்து வட்டமிட்டுக் கொண்டிருக் கும். அறிவாளிகள் எனத் தம்மைத்தாமே மதித்துக் கொண்டிருக்கும் சில பெரியோர்களுக்கு இது சிறிது வெறுக்கத்தக்க புரட்சியாகவே தோன்றலாம். அவர்கள் இதனை வரவேற்க மாட்டார்கள். ஆயினும் வள்ளுவர் சொல்ல வேண்டியதைச் சொல்லியே தீர்த்துவிடுகிருர். அதனுல் தான் எடுத்த எடுப்பிலேயே திருவள்ளுவர்,

"கற்றதனு லாய பயன்என்கொல்? வாலறிவன்
நற்ருள் தொழாஅர் எனின்."

என்று கூறியது காண்க. இறைவன் ஒருவனே பரிபூரண அறிவுடையவனுதலாலும், தூய அறிவுமய மானவனுதலாலும் வாலறிவன் என்னப்பட்டான்.

நம்மிடையே பல மேதாவிகள் இருக்கிருர்கள். அவர்கள் அதிகம் படித்தவர்கள், அவர்கள் பார்க்கும் பார்வையினுலும், நடக்கும் நடக்கையினுலும், பேசும்

பேச்சினாலும் தங்களைப் பெரிய அறிவாளிகள் என்று அடிக்கொரு தடவை காட்டிக் கொண்டே யிருப்பார்கள். அவர்களுக்கு எல்லாம் தெரியும். தமக்குத் தெரியாதது எதுவும் இல்லை என்று தலை தருக்கித் திரிவார்கள். தம்மைப் பற்றி எது வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும். ஆனால் அவர்கள் அதோடு நிற்பதில்லை. பிறரெல்லாம் ஒன்றும் அறியாத முட்டாள்கள் என்பதே அவர்களுடைய துணிந்த முடிவு. அவர்கள் பிறரைப் பார்க்கும் பார்வை யெல்லாம் இகழ்ச்சிக் குறிப்பாகவே இருக்கும். இவ்வளவு அறிவீனமும் மடமையும் நிறைந்த மக்களிடையே நாம் பழக வேண்டியிருக்கிறதே என்று கூசிப் பதைத்துப் பின் வாங்குவது போலவே தோன்றும். அவர்கள் எத்தகைய அறிவாளிகள் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? அத்தகைய அறிவாளிகளில் ஒருவர் திருவள்ளுவரிடம் சென்றார். "அறியாமை என்று சொல்லுகிறார்களே, அது எப்படியிருக்கும்?" என்று கேட்டார். எப்படி இருக்கிறது கேள்வி? "ஏ பக்தா! இதுதானா பூலோகம்?" என்று போலிச்சாமியார் கேள்வி போல் இருக்கிறதல்லவா? எல்லாம் தெரிந்த ஒரு மேதாவிக்கு அறியாமை இன்னது என்று தெரியாதிருப்பதும் ஓர் அறியாத்தனம் தானே! அவர் திடுக்கிடும் விதத்திலே விடையிறுத்தார் திருவள்ளுவர். "நாம் எல்லாம் கண்டுவிட்டோம் என்று இறுமாப்பதே அறியாமை" என்பதே வள்ளுவர் கொடுத்த மறுமொழி. ஆகா! எத்தகைய அரிய திருக்குறள் அது!

"வெண்மை யெனப்படுவ தியாதெனின் ஒண்மை
உடையம் யாம் என்னும் செருக்கு."

வெண்மை என்பது அறியாமை அல்லது அறிவின்மை அல்லது புல்லறிவு. அறிவில்லாதவன் அறியேன் என்னாது, அறிவுடையோனாகத் தன்னை

மதித்தலே புல்லறிவு. கேள்விகேட்ட அறிவாளியைக் குத்திக் கழற்றுவது போலவே இருந்தது திருவள்ளுவரின் விடை. ஏன் அவர் அவ்வாறு கூறவேண்டும்? உண்மையிலேயே நல்லறிவு நிறைந்தவன் நானிலத்தில் கிடையாதா என்ருல், கிடையாது என்றே சொல்ல வேண்டும் என்கிருர் திருவள்ளுவர். முதலில் நல்லறிவு நிறைந்தவன் இறுமாக்கமாட்டான். தன் குறைகளைத் தான் உணர்ந்திருப்பான். மேலும், அறியாமை கொஞ்சமும் இல்லாதவன் உலகில் கிடையாது. அதை முதலில் உணர வேண்டும்.

"அரியகற் ருசற்ருர் கண்ணுந் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு."

கற்றற்கரிய நூல்களைக் கற்றுக் குற்றமற்ருர் மாட்டும் அறியாமை சில வேளைகளில் தட்டி நிற்கும், ஆராயுமிடத்து; என்பது இக்குறளின் கருத்து. கல்வியுடையார் உள்ளும் புறமும் தூயாரைத் தேறலாம் என்பது துரோணுச்சாரியார் போன்ருேர்களின் மதம். அக்கொள்கையை மறுத்து, அவ்வளவில் தேறலாகாது எனத் திருவள்ளுவர் இவ்வாறு கூறினுர் எனப்பரிப் பெருமாள் உரையால் நாம் அறியலாம். மனிதனின் மனம் நிலையில்லாதது ஆதலாலும், அவன் அறிவு சிற்றறிவு ஆதலாலும், திருவள்ளுவர் இவ்வாறு கூறினுர். எந்த மனிதனுய் இருந்தாலும், முக்குணங்களும் மாறி மாறி வருதலின், அதுபற்றி எனைத்துணை நுண்ணறிவாளரும் ஒரோவழி மயங்குதல் இயல்பாகும். மனித அறிவு இத்தன்மைத்தாயிருத்தலின், ஒவ்வொருவனும் சாகும் வரையிலும் அறிவைப் பெருக்கிக் கொள்வதற்குக் கல்வி கற்க வேண்டும் என்ருர் திருவள்ளுவர்.

அவ்வளவு கற்பதற்கு நம் ஊரில் கல்லூரிகளும் கலைக்கூடங்களும் இல்லையே என்று பலர் எண்ணலாம்.

மேற்படிப்புக்குப் போதிய வ ச தி க ள் நம்முடைய நாட்டிலேயே இல்லை என்று பல மாணவர்கள் கடல் கடந்து மேல்நாடுகளுக்குச் சென்று இக் கா ல த் தி ல் படித்து வருகிறார்கள். இ தை த் ப ற் றி யெல்லாம் அக் காலத்தில் வாழ்ந்த திருவள்ளுவருக்கு என்ன தெரியும்? என்று சிலர் கேட்கலாம். திருவள்ளுவர் காலத்தில், 'திரை கடலோடியும் திரவியம் தேடு' என்ற கூக்குரல் தான் எங்கும் கேட்கப்பட்டு வந்தது. அதனை மாற்றி வள்ளுவர், 'திரை கடலோடியும் அறிவைப் பெருக்கு' என்ற குரலை எழுப்பினார். இதனை எந்தக் குறளில் வெளியிட்டிருப்பார் என்று பலர் வியப் பெய்தலாம். இதோ பாருங்கள் :—

"யாதானும் நாடாமல் ஊராமல் என் ஒருவன்
சாந்துணையும் கல்லாத வாறு."

"நீங்கள் சென்று படிப்பதற்கு எந்த நாடாயினும் உரித்தாகும். ஊரும் உரித்தாகும். சாகும் வரை ஏன் அங்கு எல்லாம் சென்று படிக்கக் கூடாது?" என்று திருவள்ளுவர் கேட்பது போல இல்லையா இந்தத் திருக் குறள்? நாம் இதுவரை இந்தக்குறளில் இப்பொருளைக் கண்டு படிக்கவில்லை. ஆதலால் முதலில் வியப்பாய் இருக்கலாம். இக் கு ற ளை உற்று நோக்கி இதன் உள்ளாழப் பொருளை மெள்ளவே மிதந்து வரக் காணுங்கள். மிகவும் அருமையாய் இருக்கும். காலத்துக் கேற்ற கருத்துக்கள் கவினொளி கலந்து ஊற்று நீர் போல் ஊடுருவிப் பாயும். ஒரு நாடு, ஓர் ஊரில் மட்டும் இருந்து கொண்டு உலகில் மனிதன் அறிய வேண்டிய வற்றை யெல்லாம் அறிந்து விட முடியாது. உணர வேண்டியவற்றை யெல்லாம் ஒரு சில ஆண்டுகளிலும் உணர்ந்து விட முடியாது. உயிர் உள்ள காலம் வரை, உலகின் எல்லை வரையிலும் நாற்புறமும் நாடிச் சென்று நாளும் நவநவமான பொருள்களை உணரும் போதும்,

பலவித மக்களிடைப் பயிலும் போதும் தான் மனிதனுடைய அறிவு நிறைவு பெற்றதாகும். அது கருதியே திருவள்ளுவர் ‘யாதானும் நாடாமால் ஊராமால்’ என்றும், ‘சாந்துணையும்’ என்றும், கல்வி கற்றற்கு இடத்தையும் காலத்தையும் வரையறை செய்து கூறினர் என்க.

சிலர் அவ்வளவு கல்விகற்றற்குப் போதிய நூல்கள் கிடைக்க வேண்டுமே என்று தயங்குவார்கள். அதற்கும் ஒருவழியினை வள்ளுவர் இக்குறளில் வகுத்துள்ளார் என்னலாம். ஏட்டுப் பாடத்தில் தான் எல்லாக் கல்வியும் அமைந்து கிடக்கிறது என்று எண்ணுவது தவறு. இப்பரந்துபட்ட உலகமே ஒரு பெரிய ஏடாக நம்முன் விரிக்கப்பட்டிருக்கிறது. மலை, ஆறு, காடு கடல் எல்லாவற்றிலும் மனிதன் தன் கருத்தை ஊன்றிக் கவனித்தல் வேண்டும். அவற்றையே ‘யாதானும் நாடாமால்’ என்று கூறினர் வள்ளுவர். உலகத்துப் பல்வேறு பகுதிகளிலும் ஊர் ஊராகவுள்ள மக்களிடையும் மனிதன் தன் அறிவை யூன்றி அறிய வேண்டுவன எண்ணிறந்தன உள. அவற்றை ‘ஊராமால்’ என்பதால் அடக்கிக் கூறினர் வள்ளுவர் என்க. இவ்வுலகம் முழுதுமே ஒரு பள்ளிக்கூடம். அதிற் கல்வி பயிலும் மாணுக்கன் மனிதன். இவ்வுலகமே ஒரு பெரிய புத்தகம். வேறு புத்தகம் வேண்டியதில்லை. அதைக் கொண்டே மனிதன் சாகும் வரை படித்துக் கொண்டிருக்கலாம். இக் கருத்தும் ‘யாதானும் நாடாமால்’ என்ற குறளில் விளக்கப்பட்டிருத்தலை விரும்பிக் காண்க.

எல்லாப் பொருளும் இதன்பாலுள என்று திருக்குறளைப் போற்றுகின்ரூர்களே, திருவள்ளுவர் எங்காவது நம் தமிழ்நாடு, நம் தமிழ்மொழி என்று அன்புகாட்டிப் பாராட்டியிருக்கின்ரூரா? அவர் நாட்டுப்

பற்று அற்றவர்போல் அல்லவா காணப்படுகிருர்? என்று சிலர் எண்ணலாம். ஆம்; நம் நாடு, நம் மக்கள் என்று கூறியவண்ணம் ஒரு சிறு பகுதியினுள்ளே அடைத்துக்கொண்டு குறுகிய மனப்பான்மையுடன் குருட்டு வாழ்க்கை வாழ்வதற்குத்தான் நாட்டுப்பற்று (Patriotism) என்ற சிறந்த பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. தெளிந்த அறிவும், பரந்த மனமும், உண்மை உணர்வும் படைத்த உத்தமர்கள் அவ்விதம் கூவலாமைபோல் குழறிக்கொண்டிருக்கமாட்டார்கள். எல்லா நாடும் நம்முடைய நாடு, எல்லா ஊரும் நம்முடைய ஊர், இவ்வுலக மக்கள் அனைவரும் ஒரே சமுதாயம். அந்த உலக சமுதாயத்திலே நாமும் உறுப்பினர்கள் (Citizen of the World) என்ற கொள்கையும், மனவுணர்ச்சியும், அறிவும் பெறுவதே கல்வியின் சிறந்த பயன். இக்காலத்தில் வெண்டல் வில்கி போன்ற மேனுட்டு அறிஞர் சிலர் இக் கொள்கையை வற்புறுத்தி எழுதிக்கொண்டுவருவதைப் பலரும் அறிவர். இப்புதிய கருத்து இக்காலத்திலே தோன்றியுள்ளது என்று பலரும் பாராட்டுகின்றனர். ஆனல் இது தமிழர்களுக்குப் புதிதன்று. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே பக்குடுக்கை நன்கணியார் என்னும் புலவர் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று முழங்கினுர். ஆனல் அவருக்கு முன்னர், இப்புரட்சிக் கொள்கையை எடுத்துச் சங்கநாதம் செய்தவர் திருவள்ளுவர் என்று சொன்னல் அது மிகையாகாது. நாம் இப்பொழுது கவனித்துக் கொண்டுவந்த நம் முன்னுள்ள இதே குறளில்தான் திருவள்ளுவர் அக் கொள்கையை எடுத்து விளம்பியுள்ளார் :—

> ''யாதானும் நாடாமால் ஊராமால், என் ஒருவன்
> சாந்துணையும் கல்லாத வாறு.''

கசடறக் கற்று உண்மையை உள்ளவாறு உணர்ந்தவன் எவனே அவனே அனைத்துலகையும் தனதாகப்

பாவிப்பான். எவனுக்கு அறிவு பெருகி முதிர்ந்து அனுபவமும் மேம்படுகிறதோ அவனுக்கே பரந்த மனப்பான்மையும் உண்டாகும். ஒரு குருவி முட்டையின் கருவில் இருக்கும்பொழுது அந்த முட்டையே உலகமாகவும், அதனுள் தான் மட்டுமே வாழ்வதாகவும் நினைத்துக்கொண்டிருக்கும். அதன் தாய் அடைகாத்து, முட்டையிலிருந்து குஞ்சு வெளிவரும் பொழுது, பல குச்சிகளாகக் கோர்த்துக்கட்டிய கூடே உலகம் என்றும், அவ்வுலகத்தின் மீது தன் தாய்ப் பறவை குந்திக்கொண்டிருக்கும்போலும் என்றும் குஞ்சு நினைத்துக்கொண்டிருக்கும். பிறகு சில நாட்களில் மரத்தையும், மட்டையையும், கொப்பையும், கிளையையும், பசிய இலைகளையும் கண்டு, அவற்ருல் ஆனதே இந்த உலகம் என்று நினைக்கும் அச்சிறுபறவை. பிறகு, தன் இறகு வளர்ந்து பறக்கத்தெரிந்து, குஞ்சு குருவியாகி நீலவானிலே பறந்து இரைதேடச் செல்லும் பொழுது, உலகம் என்னவிதமாக ஆக்கப்பட்டிருக்கிறது என்று அதனுல் சொல்லமுடியுமா? நினைக்கத்தான் முடியுமா? அதுபோலவே தான் மனிதனும் அவன் கொள்கைகளும். உலகம் முழுதையும் தன் சொந்த நாடாகவும் ஊராகவும் பாவித்து, உலகத்து மக்கள் அனைவரையும் ஒரே இனத்தவராகவும் தன்னுடைய இனத்தவராகவும் அறியும் அறிவே மனித நாகரிகத்தின் வெற்றியும் கல்வியும் குறிக்கோளுமாகும். நாட்டுப்பற்று, இனப்பற்று என்பவையெல்லாம் அம்முடிவை அடைவதற்கு ஏறிச்செல்லும் முதற்படிகளேயாகும். அம்முறையில் அவையும் முதலில் சிறந்தனவாகவே கொள்ளப்படும். ஆனுல் அவை ஓர் அளவுக்கு மட்டுமேதாம். எப்படி ஒருவனுடைய குடும்பப்பற்று நாட்டுப்பற்ருக விரிகிறதோ அதுபோல் அவன் நாட்டுப்பற்றும் உலகப்பற்ருகப் பரந்து மலர்தல்

வேண்டும். அதற்கு அகன்று செறிந்த அறிவு வேண்டும். அத்தகைய அறிவைப் பெறுவதற்கு ஒருவன் சாகும்வரையிலாறுலும் கல்வி கற்க வேண்டியதுதான் என்பதைத் திருவள்ளுவர் எவ்வளவு அழகாகக் கூறியுள்ளார் என்பதைப் பாருங்கள் :—

யாதானும் நாடாமால் ஊராமால் என் ஒருவன்
சாந்துணையும் கல்லாத வாறு.

திருவள்ளுவர் காலத்திற்குமுன் உலகில் ஒரு கருத்து நிலவி வந்தது. அது யாதெனில், ஒருவன் தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்வதற்காக என்ன வேண்டுமென்ருலும் செய்யலாம் என்பதுதான். இறப்ப வருவழி இளிவந்தன செய்தாயினும் உய்க என்று வேதங்களும் எடுத்து விளம்பின. 'ஏனடா தவறு செய்தாய்?' என்று கேட்டால், "தவறு செய்யாரவிடில் நான் செத்தே போயிருப்பேனே!' என்கிருன் குற்றவாளி. 'ஐயோ!' என்று நாம் இரங்கிவிடுகிறேம். அத்தகைய பாவத்தைக் கடவுளும் மன்னிப்பார் என்று வடநூல் வேதங்களும் கருதின. திருவள்ளுவர் இதை ஒப்ப வில்லை. கேவலமான காரியத்தைச் செய்துதான் ஒருவன் பிழைக்கவேண்டும் என்று இருந்தால் அவன் உயிர்வாழ்ந்துதான் யாருக்கு என்ன பயன்? அவன் செத்துத் தொலேயட்டுமே. இன்றல்லாவிடின் நாளே ஏதாவதொரு நாள் அவன் இறக்கத்தான் போகிருன். உடம்பு நிலேயாதது. ஆனல் மானமோ நிலேத்து நிற்கக்கூடியது. நிலேயாத உடம்பைக் காப்பதற்காக நிலேயான மானத்தை இழப்பானேன்? எக்காரணத்தைக் கொண்டும் எப்பொழுதும் எவனும் தன் நிலேயினின்றும் தாழ்ந்துவிடக்கூடாது. தன்னல் தடுக்க முடியாதபடி தெய்வச்செயலால் ஒரு தாழ்வு வந்த இடத்து, உயிரை வைத்துக்கொண்டிருக்காமல் விட்டு விடுவதே மானம். ஈனமுடையவனுய் வாழ்வதைவிட

மானமுடையவனும் இறப்பதே மேல் என்று, தன் மான வுணர்ச்சிகொண்டு ஆணையிட்டார் திருவள்ளுவர் :—

" இன்றி யமையாச் சிறப்பின வாயினும்
குன்ற வருப விடல்."

வேதத்தின் ஓர் உயர்ந்த கருத்தை மானத்துடன் உதறித் தள்ளுகின்ற இத்திருக்குறள் எத்தகைய புரட்சி செய்திருக்கிறது பாருங்கள் ! மானத்தை இழந்தவனுக்கு இந்த உலகிலும் சிறப்பில்லை. வானுலகமும் வழி திறக்காது என்ற உண்மையை நன்கு எடுத்துக் காட்டி மன்பதைகளை மானத்துடன் வாழும்படி வழி காட்டினார் திருவள்ளுவர்.

திருவள்ளுவர் காலத்தில் பசியின் கொடுமைக்கு ஆளான மக்கள் பழி பாவங்களைச் செய்து திரிந்தனர். இன்மையைப் போக்க இழி தொழில்கள் புரிந்தனர். ஏன் என்று கேட்டால், வடமொழித் தருமசாத்திரங்களை வாய் நவின்று சான்று காட்டினர். மனுதர்மம் என்ன கூறுகிறது? இறந்த மூப்பினராய இருமுது குரவரும் கற்புடை மனைவியும் குழவியும் பசியால் வருந்தும் எல்லைக்கண் தீயன பலவும் செய்தாயினும் புறந்தருக என்பது அறநூற் பொதுவிதி. இதனை எதிர்த்துப் புரட்சி செய்தார் திருவள்ளுவர் :—

" ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
ஆன்றோர் பழிக்கும் வினை."

என்பது திருக்குறள். பால் நினைந்தூட்டித் தன்னைப் பரிவுடன் வளர்த்த தாயார் பட்டினியும் பசியுமாய் ஒட்டியுணர்ந்து சாகக் கிடந்தாலும், பெரியோர் பழிக்கும் பாவச் செயல்களை ஒருவன் செய்தல் கூடாது என்று திட்டவட்டமாய்க் கூறினார் திருவள்ளுவர்.

வாழ வகை தெரியாதவர்கள், வாழ வழியடைத்துப்போனவர்கள், வயிற்றுக்கு இல்லை யென்று பிச்சை யெடுத்தார்கள். அதனையும் எதிர்த்தார் திருவள்ளுவர்.

வயிற்றுப் பிள்ளைக்கும் பச்சிளம் பசலைக்கும் பால் இல்லையென்று பலர் பிச்சை யெடுத்துத் திரிந்தார்கள். தாங்கள் பிச்சை யெடுப்பது தங்களுக்காக இல்லை, தங்கள் கைக்குழந்தைகளுக்காக என்று சாக்கும் போக்கும் காட்டிப் பிச்சையெடுத்தார்கள். இன்னும் பல செல்வந்தர்கள் பல பொதுக் காரியங்களுக்கும் தரும காரியங்களுக்குமாகக் கையிலே ஓர் ஓலையை (இக் காலத்தில் என்றால், ஒரு தாளை) எடுத்துக்கொண்டு பொதுநலத் தொண்டர்களாய்ப் பண வசூலுக்குக் கிளம்பினார்கள் (கிளம்புகிறார்கள் இப்பொழுதும்). இவர் களைப் பிச்சையெடுப்பவர்கள் என்று ஒருவரும் நினைப்ப தில்லை. தமக்கென வாழாது பிறர்க்குரியாளர்களாய் நாட்டுக்கும் பொதுமக்களுக்கும் உழைக்கும் தந்நல மற்ற தகைமையாளர்கள் அல்லவா இவர்கள்! ஆனால் திருவள்ளுவர் இவர்களையும் பிச்சையெடுப்பவர்க ளாகவே கருதினார். "நீங்கள் பிறரிடம் சென்று கேட்பது இலவசமாய்க் கிடைக்கக்கூடிய தண்ணீரேயானாலும், அது உங்களுக்காகவன்றிச் சாகக்கிடக்கிற ஒரு பசுவைக் காப்பாற்றுவதற்கேயானாலும், நீங்கள் புரியும் தொழில் பிறரிடம் சென்று இரத்தலாய் இருத்தலால் அது மிக்வும் இழிவானது" என்று கூறிவிட்டார் திருவள்ளுவர்:—

> "ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்
> கிரவி னிளிவந்த தில்."

ஆகாத் தோம்புதல் பேரறம் என்று கருதப்படும். அப்படிப்பட்ட பசுவின் உயிரைக் காப்பாற்றுவதற்குச் சென்று இரப்பது தண்ணீரானதால், அச்சொல்லள விலேதான் இளிவு ஏற்படக்கூடியதாயிருக்கிறது. இருந்தாலும் அந்த இளிவும் எல்லா இளிவரலையும்விட

மிகக் கீழானது என்று திருவள்ளுவர் கருதவேண்டு மானுல், மனிதனே அவர் எத்தகைய உயர்ந்த அமர நிலேயிலே வைத்துக் காணவேண்டும் என்று ஆசைப் படுகிருர் பாருங்கள்!

இக்காலத்தில், வெள்ளத்தால் வருந்தும் மக்கள் நிதிக்கென்றும், நில நடுக்கத்தால் அலக்கணுற்ற அனுதைகள் உதவிக்கென்றும், இன்னும் பல பொது நலக்காரியங்களுக்காகவும் பெரிய பெரிய தலைமையதி காரிகள் கடியவூர்திகளில் நெடுகிலும் சென்று, பணக் காரர்கள் வீட்டு வாயிலே யடைந்து பணம் கேட்கிருர் கள் அல்லவா? இவர்களும் சும்மா கேட்பதில்லே ஒரு புகழ்பெற்ற பாடகியின் இசைக் கச்சேரியென்று. ஆயிரம் பதினுயிரம் கறந்துவிடுவார்கள். இது மிகவும் நல்ல காரியம்தான், இதை வேண்டாம் என்று ஒருவரும் கூறமாட்டார்கள். ஆயினும், திருவள்ளு வருக்கு இந்த நிலே பிடிக்கவில்லே. உதவ முன்வந்த காரியம் நல்லதுதான். இதில் கட்டாய வற்புறுத்தல் எதுவும் இல்லே. அதிகாரியாய் இருப்பவர் அதிகாரம் எதுவும் காட்டாமல் வீடு தேடி வந்து சிரித்துக் கொண்டே கேட்கிருர். கொடுக்கிறவரும் முகம் கோணுமல், இல்லேயென்னுமல், சிரித்துக்கொண்டே கொடுக்கிருர். இது புறத்தே காட்டும் ஒரு பெரு நடிப்பாகவே இருக்கிறது. பண வசூலுக்கு வந்த அதிகாரி தன் அதிகார ஆணவத்தின் முனேப்பில் நின்றே பணத்தைப் பிடுங்குகிருர். கொடுக்கிறவரும் அதிகாரியின் அதிகார ஆணேக்கு அஞ்சிக் குலேநடுங் கிக்கொண்டே பணத்தை அவிழ்க்கிருர். கேட்கிறவர் அதிகாரியாய் இல்லாவிடில் இம்மியும் ஈந்திருக்க மாட்டார் அதிகாரியும் தம் அதிகார ஆதிக்கம் இல்லா விடில் அவர் அகல் வாசலே எட்டியும் பார்த்திருக்க மாட்டார். இவ்வாறு இவ்விரு திறத்தாரும் தம்

அதிகார அச்சங்களைச் சிரிப்பென்னும் போர்வையால் மூடிக்கொண்டே பணத்தைப் பரிமாறிக்கொள்கின்றனர். இந்த முறையைத் திருவள்ளுவர் வன்மையாகக் கண்டிக்கிறார். இதுபோலவே திருவள்ளுவர் நாளிலும் நடந்துவந்திருக்கிறது. இதனை இரவு என்பதா? புரவு என்பதா? கரவு என்பதா? இது வரிவசூலும் இல்லை: பிச்சை யெடுத்தலும் இல்லை: "இது பகற்கொள்ளை அல்லது வழிப்பறி" என்கிறார் திருவள்ளுவர்:

"வேலொடு நின்றான் இடுவென் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு."

இக்குறளின் கருத்தை அனைவரும் சிந்தித்துக்கொள்ள வேண்டும்.

இவர்களை விட்டுவிடுவோம். இன்னும் சில இளைஞர்களைப் பார்ப்போம். அவர்கள் செல்வந்தர்களின் வழி வழித்தோன்றல்கள். தம்முடைய மூதாதையர் தேடிவைத்த ஏராளமான பொருளைத் தாராளமாய்ச் செலவழித்து மேனி வலியாமல் கூனியிருந்து தின்றுகொண்டு சுகபோகங்களில் காலத்தைக் கழிப்பார்கள். சோம்பலும் சொகுசுங் கொண்ட இவர்களைக் கண்டு மற்றவர்கள் நமக்கு இந்தப் புண்ணியம் கிடைக்கவில்லையே என்று தேம்புவார்கள். திருவள்ளுவர் காலத்திலும் அவ்வாறுதான் இருந்துவந்தது. அவர்களைக் கண்டு கூசினார் திருவள்ளுவர். யாதொரு முயற்சியுமின்றி, முன்னோர் வைத்துப்போன முதலை அரித்துத் தின்னுகின்ற இவ்வுதவாக்கறைகள் அமுதமே புசிப்பதானாலும் அது கொடிய நஞ்சாகும். அது இனிதாகமாட்டாது. பாடுபட்டு உழைக்காதவன் உண்பதற்கே உரிமையற்றவனாவான். தன் உடல் உழைப்பினால் ஒருவன் உண்பதற்குக் கிடைப்பது கீரைச் சோறும் பச்சைத் தண்ணீருமாய் இருந்தாலும்

கூட, அவை தன் முயற்சியால் வருவதால், அவையே உண்பதற்கு மேலானவை, இனியவை, உகந்தவை, தகுந்தவை, என்று கூறினர் திருவள்ளுவர்.

"தெண்ணீர் அடுபுற்கை யாயினும் தாள்தந்த
துண்ணலின் ஊங்கினிய தில்."

உழைத்து உண்ணும் உணவுக்கு மேலாக வேறெதுவும் கிடையாதாம். பிச்சையெடுக்கும்படியான நிலைமை நமக்கு வந்துவிடக்கூடாதே என்று ஒவ்வொருவனும் கவலையுடன் பணத்தைப் பாதுகாக்கிருன். மேன்மேலும் அதைப் பெருக்குகிருன். தானும் தன் குடும்பத்தாரும் பசியால் வாடாது வயிருர உண்டு சுகமாய் வாழவேண்டுமே என்று கவனம் செலுத்து கிருன். ஊரெல்லாம் உணவுப் பொருள்களுக்குப் பஞ்சமாய் இருக்கும்பொழுது, எங்கிருந்தாவது சாமான் தட்டுமுட்டுகளைத் திரட்டிக் கொண்டுவந்து தனது வீட்டுச் சரக்கறையை நிறைத்து வைத்துக்கொண்டு ஆனந்தமாய் அமர்ந்துவிடுகிருன். தினமும் வயிருர உண்டுகளித்துத் தேக்கிடுகின்ருன். சுற்றிலும் பஞ்சமும் நோயும் வறுமையும் தாண்டவமாடுகின்றன. இவஞே இம்மியும் பிறர்க்கு ஈயாது, மகிழ்ச்சி வாழ்க்கையில் மிதந்து செல்கிருன். தன் வாழ்க்கையே மேலானது என்று தருக்கிடுகின்ருன். இத்தகையவனைப் பார்த்துத் திருவள்ளுவர் அருவருத்தார். கொஞ்சமும் மனம் இரங்காத நெஞ்சழுத்தக்காரன் பஞ்சாமிர்தமும் பாலும் அருந்திப் பஞ்சணையில் புரள்கிருன். பக்கத்தில் ஒட்டிய வயிறும் கட்டிய கையுமாய்ப் பட்டினிகிடக்கும் பிச்சைக்காரன் வீதியில் உருள்கிருன். இவர்கள் இருவரில் எவன் நல்லவன்? எவன் இளிந்தவன்? இரவுத் தொழில் பூண்பது ஆற்றல் இழந்த அறியாமையின் செயல். கரவுத்தொழில் கொள்வது கல்மனதுடையதீயவனின் செயல். ஆகவே தனக்கென

வாழ்ந்து தன் வயிற்றையே நிரப்பிக்கொள்ளும் நிலை பிச்சையெடுக்கும் நிலையைவிட மிகக்கெட்டதும் பொல்லாததும், துயரமானதும், இழிவானதும் ஆகும் என்று கூறினார் திருவள்ளுவர் :—

"இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல்."

பிச்சையெடுப்பவனையும் திருவள்ளுவர் ஒப்பவில்லை. ஆனால் அதற்காகப் பிச்சை கொடாதிருப்பவனைத் திருவள்ளுவர் சும்மா விடவில்லை. உயிர்வாழும் ஒவ்வொரு மனிதனும் தன்னால் இயன்ற அளவு ஏழைகளுக்குக் கொடுத்து வாழவேண்டும். ஒவ்வொருவனும் இது செய்தல் இயலும். ஒன்றும் செய்ய இயலாது போயினும், தான் உண்ணும் உணவில் ஒரு பிடியாவது பசிப்போர்க்குக் கொடுத்து வாழலாம். இதுவும் செய்ய இயலாது என்றால், அவன் வாழ்வதிலேயே ஒரு பயனும் இல்லை. அவன் உடனே உயிர் விட வேண்டும். இறத்தல் என்பது மிகத் துயரம் வாய்ந்ததுதான். ஆனால் அதனால் இழிவில்லை. இல்லையென்று சொல்வது மிகவும் இழிவுடையது. அதை நோக்க விளிதல் மிகவும் நல்லது. பிறருக்கு உதவி செய்ய இயலாத நிலையில் ஒருவனுக்கு இவ்வுலகில் வேலையில்லை. இவ்வுலகில் வாழ்வதானால், பிறருக்கு உபகாரியாக ஒருவன் வாழவேண்டும். அது முடியாவிடில் அவன் சாக வேண்டியது தான். சாவு துன்பந்தான். ஆனால் அதை விடத் துன்பம் ஈதலைச் செய்ய இயலாது வாழ்தல். அது மட்டும் அன்று. ஈய முடியாது வாழ்வதிலும் சாவது இன்பம் தரக் கூடியது. ஈதல் இல்லையேல் சாதல் என்கிறார் திருவள்ளுவர் :—

"சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை."

ஆனால் இதற்காக ஒரு கூட்டத்தார் பிச்சை யெடுப்பதையே தொழிலாகக் கொண்டு வாழ்வது திருவள்ளு

வருக்குப் பிடிக்கவில்லை. அவர்களிற் பலரையும் திருவள்ளுவர் சென்று வினுவினுர். அதற்கு அவர்கள் "எங்கள் தலையிலே பிரமன் பிச்சை யெடுக்கும்படி எழுதியிருக்கிருன்" என்று விதியை நொந்து கொண்டனர். திருவள்ளுவருக்குக் கோபம் வந்தது. "இது சுத்தப் பொய்! அப்படியும் இவ்வுலகை உண்டுபண்ணியவன் எழுதுவானுகில், அவனும் ஓடு ஏந்திப் பரதேசியாய்ப் பரிதவிப்பானுக!" என்று சபித்தார்:—

"இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக உலகியற்றி யான்."

திருவள்ளுவர் காலத்திலே எங்கும் சாதிக்கொள்கை பரவத் தொடங்கியது. பிறப்பினுல் ஒருவன் சிறப்படைகிருன் என்று மக்கள் நினைத்தனர். திருவள்ளுவர் இதனை அதிதீவிரமாக எதிர்த்து, சமூகத்தை அரித்துத் தின்னும் அப்பொல்லாத வகுப்புவாத நோயைத் தீர்க்க முயன்ருர். அவரவர்கள் செய்யும் தொழிலின் காரணமாக மக்களைப் பல வகுப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளதே தவிர, பிறப்பின் காரணமாக அன்று. ஏனெனில் உலகில் எல்லா உயிர்களும் பிறக்கும் முறையில் யாதொரு விதமான வேறுபாடும் கிடையாது. வினை வயத்தாலும் ஐம்பூத சேர்க்கையின் விளைவாகவுமே உயிர்கள் உடல்களைக் கொண்டு பிறக்கின்றன. ஆதலால் பிறப்பினுலே வேறுபாடு கிடையாது. வேறுபாடு அவ்வுயிர்கள் செய்யும் நற்செயல் தீச்செயல்களாலேயே உண்டாகிறது. நற்செயல்களைப் புரியும் உயிர்கள் மேம்படுகின்றன. தீச்செயல் புரிவன இகழ்ச்சியுறுகின்றன:—

"பிறப் பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்."

பெரியோர் சிறியோர் என இரண்டு பிரிவுகளே மக்களினத்தில் உண்டு. சிறியோர் கயவர் என்றும் கீழ்கள் என்றும் கூறப்படுவர். பெரியோர் சான்ருேர் என்றும் குறிக்கப்படுவர். அவனவனுடைய செயல்

செயல்களைக் கொண்டே பெரியோன் என்றும் சிறி யோன் என்றும் அளந்தறியப்படும். இது போன்ற கருத்துக்களைத் திருவள்ளுவர் எங்கும் பரப்பினர். இது அவர் காலத்திலேயே பெரியதொரு சமூகப் புரட்சியாக மாறியது :—

" பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல் "

ஆகவே பதவி பட்டங்களினாலும், பிறந்த சாதியின் உயர்வாலும் ஒருவன் மேலாசனத்தில் உயர்த்தி யிருத்தப்படுவதால், அவன் மேலானவன் ஆகிவிட மாட்டான். அவையில்லாமையால் ஒருவன் மேலா சனத்தில் வீற்றிருக்காது கீழே தரையில் இருத்தப்படு வதால், அவன் கீழானவன் ஆகிவிடவும் மாட்டான். மேலானவன் கீழானவன் என்பதை அவனவன் இருக்கையிடத்தைக் கொண்டு மதித்துவிடக்கூடாது. ஒரு கயவன் உயர்ந்த அமளிமிசை ஏறி அமர்ந்து கொள்வதும் உண்டு. ஒரு சான்றவன் தாழ்ந்த வறுநிலத்து இருத்தப்படுவதும் உண்டு :—

" மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்."

ஒத்த பிறப்பினராய மக்களுள், மனம் போனபடி நடவாமல் அதனை அடக்கி ஒழுக்க நெறியில் நின்று அறத்தைக் கடைப்பிடிப்பவர்களே பெரியர். அவர்களே செய்தற்கு அரியவற்றைச் செய்யும் மேலானவர்கள். செய்தற்கு எளியவாவன மனம் வேண்டியவாறே அதனைப் பொறிவழிகளால் புலன்களிற் செலுத்தலும், வெஃகலும், வெகுடலும் முதலாயின. சிற்றினத்தவர் களே இவ்வாறு செய்வர். சிறியர் உயர்ந்த சாதியின ராயினும் கீழானவர்களே. இவ்வாறு சாதி வேற்றுமை களை ஒழித்துக்கட்டி மனிதனுடைய உயர் குணங் களுக்கும் விழுமிய செயல்களுக்கும் ஏற்றம் தந்து புரட்சி செய்தார் திருவள்ளுவர் :—

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்."

உலகம் தோன்றிய நாள் தொட்டு, உலகில் எந்தப் பகுதியைப் பார்த்தாலும், எந்த மக்களை எடுத்துக் கொண்டாலும், புலால் உண்ணாத மக்கள் இனத்தார் கிடையாது. நமது தென் தமிழ் நாட்டிலேதான் சிலரிடையாவது புலாலைக் கைக் கொள்ளாத பழக்கம் நடைமுறையில் இன்றளவும் இருந்து வருகிறது. திருவள்ளுவர் காலத்தில் புலால் உண்ணாதவர் கிடையாது. அக்கால இலக்கியங்களின் வாயிலாக நாம் அதை அறிகிறோம். அத்தகைய சூழ்நிலையிலே தோன்றிய திருவள்ளுவர் எழுப்பிய குரலைக் கேளுங்கள் :—

"உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின்."

முதலில், புலால் உண்ணக்கூடாது என்பதற்கு, அதை உண்ண நினைப்பவன் நன்மையைக் கருதியே ஒரு காரணம் கூறுகிறார். தன்னுடம்பின் புண்ணைத் தானே ஒருவன் தின்பானா? மாட்டான். அது போலப் புலாலும் பிறிதோருடம்பின் புண்தான் என்று காட்டி அதனிடம் அருவருப்பு உண்டு பண்ணுகிறார். உணர் வார்ப்பெறின் என்பதால், நம் மனதைத் தட்டி யெழுப்பிச் சிந்திக்க வைக்கும் திறம் போற்றற்பாலது. ஒன்றன் உடல் சுவையுண்டார் மனம் நன்றூக்காது என்பதைத் தெளிந்து கண்ட பின்னரே, திருவள்ளுவர் உணவு முறையிலும் புரட்சி செய்யத் தொடங்கினார். அருளை மருளால் இருளிலே உருளவிட்டுப் பொருள் கொடுத்து ஊன் வாங்கித் தின்னுகின்ற மக்கள் அருளுடையராவது ஒரு நாளும் இல்லை. ஆதலால் திருவள்ளுவர் புலாலை மறுத்து ஒரு புரட்சியைக் கிளப்பி னார். திருவள்ளுவரின் புலான் மறுப்புக் கொள்கைக்கு எத்தகையதோர் எதிர்ப்பு அக்காலத்தில் இருந்திருக்கும்

என்பது சிந்திக்கத்தக்கது. மக்கள் எளிதாகத் திருவள்ளுவர் வாக்கை ஏற்றுக்கொண்டிருப்பார்களா? ஏன்? இன்றுகூட இக்கொள்கையை எடுத்துப் பேசினுல் நகைக்குள்ளாக வேண்டியதாகத்தான் இருக்கிறது. பத்து ஆண்டுகளுக்கு முன் ஒரு பெரிய நகரத்துக் கல்லூரி ஒன்றில் நான் திருக்குறளைப் பற்றிப் பேச நேர்ந்தது. அப்பொழுது அவ்வூரில் நீதிபதியாக இருந்த ஒரு பெரியார் தலைமை தாங்கினுர். அவர் குழந்தைகளும் அக்கல்லூரியில் மாணவிகளாய்ப் படித்து வந்தார்கள். நான் புலாலுண்ணுமையைப் பற்றி வள்ளுவர் கூறியவற்றை விரிவாகப் பேசினேன். தலைவர் முடிப்புரையில் கூறினதாவது: "புலாலுணவில் வெறுப்பு வரும்படி கல்லூரிகளிற் பேசக்கூடாது. என் குழந்தைகள் சாதாரணமாகவே புலாலை வெறுக்கிருர்கள். உங்கள் பேச்சைக் கேட்டால் இனி உண்ணவே மாட்டார்கள். சுதந்திர நாட்டு மக்கள் வலுவுடையராய் இருப்பதற்குக் காரணம் இறைச்சி உணவுதான்" என்று கூறி முடித்தார். இக்காலத்திலேயே இப்படி இருக்குமாளுல், திருவள்ளுவர் புரட்சி அக்காலத்தில் எத்தகைய அடக்குமுறைக்கு ஆளாகியிருக்கும் என்பதை ஊகித்து உணரலாம்.

கொல்லுவதுதான் பாவமேயொழிய ஊனருந்துவது பாவம் இல்லை என்று சிலர் கருதி வந்தனர். புத்த சமய நெறிக் கோட்பாடுகளும் அவ்வாறே கருதுவனவாகும். அதனையும் திருவள்ளுவர் மறுத்துப் புலால் உண்பது பெரும் பாவம் என்றும், ஊன் உண்பவன் நரகம் புகுவான் என்றும், பின் அங்கிருந்து திரும்பி வரவேமாட்டான் என்றும் வற்புறுத்தினுர்:—

"உண்ணுமை யுள்ள துயிர்நிலை ஊன் உண்ண
அண்ணுத்தல் செய்யா தளறு."

ஊன் உண்ணுது போனுல், ஊன் விற்பவர்கள் எவ்வாறு பிழைக்க முடியும்? என்று சிலர் வாதாடினர்.

'கொன்றால் பாவம் : தின்றால் தீரும்' என்பது ஒரு பழமொழியாகப் பயின்று வருவதை இன்றும் காண லாம். புத்த மதத்தினர் கூட விலைக்கு விற்கும் ஊனை வாங்கி அருந்தலாம் என்று கருதுவர். இச்சொத்தை வாதத்தையும் அடித்துப் பேசினார் திருவள்ளுவர் :—

" தினற்பொருட்டால் கொல்லா துலகெனின் யாரும்
விலைப் பொருட்டால் ஊன் தருவார் இல்."

கொள்வது (Demand) இருந்தால்தான் கொடுப்பதும் (Supply) உண்டு என்ற உண்மையை இக்குறள் எடுத்துக் காட்டுகிறது. இத்துறையில் திருவள்ளுவர் எடுத்த பெருமுயற்சி தென் தமிழ் நாட்டில் ஓரளவுக்கு வெற்றி பெற்றது பெரு மகிழ்ச்சிக்குரிய காரியம். பிறிதின் நோய் தன் நோய் போற் போற்றுவதே அறி வின் பயன் எனக்கொண்ட திருவள்ளுவருக்குப் புலா லுண்ணுமை ஒரு பேரறமாகத் தோன்றியது. இதனைத் திருக்குறள் அன்பர்கள் சிந்திக்க வேண்டியது அவசிய மாகும்.

திருவள்ளுவர் காலத்தில் போலித்துறவிகள் பலர் நாடெங்கும் மலிந்து திரிந்தனர். அவர்கள் கழுத்திலே தாழ்வடமும் மனத்திலே கரவடமும் கொண்டு புறக் கோலத்தால் மக்களை ஏமாற்றி வந்தனர். தாம் அணிந்த புனிதமான காவியுடையை மாசுபடுத்தித் திரியும் அவர்களைக் கண்டு அஞ்சிய திருவள்ளுவர் உலகை எச்சரித்துக் கூறுவதைப் பாருங்கள் :

" புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து."

திருவள்ளுவர் காலத்தில் காபாலியர், சாக்தேயர், பாசுபதர், மாவிரதர், பைரவர் போன்ற பல சமயவாதி களும் இருந்தனர். அவர்கள் திருநீற்றை அங்க மெல்லாம் பூசியும், எலும்புகளை அங்கமெல்லாம்

அணிந்தும், மதுவினை உண்டும் மதிமயங்கித் திரிந்து பிறரையும் மயக்கினர். ஆசாரக்கள்ளர்களுள் திருநீறு குழைக்கும் கள்ளரும் ஒரு வகையினர். அன்னார் கள்ளர்களுக்குள்ளே மிகவும் பொல்லாத கள்ளர் என்று தண்டலையார் சதகமும் தண்டாமற் கூறுகிறது :

"செழுங்கள்ளி நிறைசோலைத் தண்டலைநீ
ணெறியாரே திருடிக்கொண்டே
எழுங்கள்ளர் நல்லகள்ளர் பொல்லாத
கள்ளரினி யாரோ வென்றால்
கொழுங்கள்ளர் தம்முடன்கும் பிடுங்கள்ளர்
திருநீறு குழைக்குங் கள்ளர்
அழுங்கள்ளர் தொழுங்கள்ளர் ஆசாரக்
கள்ளரிவர் ஐவர்தாமே."

இத்தகைய ஆஷாடபூதிகளையும் போலிப் பத்தர் களையும் உருத்திராக்கப் பூனைகளையும் திருவள்ளுவர் கண்டித்தார். தீர்த்தங்கள் ஆடித் திருட்டுத்தனமாய்த் திரிபவர்களையும் திருவள்ளுவர் அம்பலப்படுத்தினர். எவ்வாறு?

"மனத்தது மாசாக மாண்டார் நீராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்."

என்பது திருக்குறள். இதற்குத், "தவத்தான் மாட்சிமை யுடையராய் நீரில் மூழ்கிக்காட்டித் தாம் அதன்கண்ணே மறைந்துசெல்லும் மாந்தர் உலகத்துப் பலர்" என்று உரைகாரர் பொருள் கூறினர். ஆனால் நீரிலே மறைந்து செல்லுவதாகக் கூறுவது பொருத்தமாயில்லை. ரகாரம் வல்லின இடையின வேறுபாடில்லாமல் ஏடுகளில் எழுதப்படுவதுண்டு. இங்கு 'நீராடி' என்பதில் வல்லின 'று'வுக்குப் பதில் இடையின 'ரா' தவறாக ஏடுகளில் எழுதப்பட்டுமிருக்கலாம். அங்ஙனமாயின், 'மாண்டார் நீறாடி' என்பதற்கு, 'இறந்தவர்களுடைய சாம்பலைப் பூசிக்கொண்டு' என்று பொருள் கூறலாம். காபாலியர், பைரவர் முதலியோர் அவ்வாறு திரிந்தனர். திருநீறு என்பது காடுடைய சுடலைப்பொடி என்பதும் அறியத்

தகும். இக்கருத்தை நான் காஞ்சிபுரத்தில் ஒரு கூட்டத்தில் எடுத்துக் கூறியபோது, ஒரு வைணவ நண்பர் எழுந்து, "திருநீற்றை ஆடுதல் என்று சொல்வது வழக்கமில்லை. ஆடுதல் என்றால் நீராடுதலைத் தான் குறிக்கும். திருநீற்றைப்பூசி என்றுதான் சொல்ல வேண்டும். ஆகவே, நீராடி என்பதுதான் பொருத்தம்' என்று கூறினர். உடனே எனக்கு மாணிக்கவாசகர் முன்வந்து உதவிசெய்தார். 'செய்யா! வெண்ணீருடி! செல்வா!' என்பது திருவெம்பாவையில் வரும் அடியல்லவா? இதனை எடுத்துக் கூறினேன். மற்றும் இதனைப் பெரியோர்களுடைய ஆராய்ச்சிக்கு விட்டு விடுகிறேன்.

தலையை மொட்டையடித்தும், தாடியை நீள வளர்த்தும் பல சாமியார்கள் ஏமாற்றி வந்தார்கள். இவர்களையும் திருவள்ளுவர் கண்டித்து,

> "மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
> பழித்த தொழித்து விடின்."

என்று பாடினர். நாம் திருக்குறளை நன்கு படித்து விட்டுத் திருவள்ளுவருக்குத் தாடி வளர்த்துப் படம் எழுதி வைத்திருக்கிறோம். இதையும் அறிஞர்கள் நன்கு சிந்திக்கவேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

சிந்தனை யுலகிலே, அறிவுத்துறையிலே செந்நாப் போதார் செய்துபோந்த புரட்சிகள் பலவாகும். அவற்றுள் தலைசிறந்தது வாய்மையைப் பற்றியது. மெய்ந்நூல்கள் பலவற்றையும் வள்ளுவர் துருவி ஆராய்ந்தபொழுது, வாய்மையின் மிக்கதோர் அறம் வேறு ஒன்று இல்லை என்பதைத் தெளிந்துகண்டார்:

> "யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
> வாய்மையி னல்ல பிற."

என்பது திருக்குறள். ஆனால், எது வாய்மை என்பது தான் விளக்கமுறாமலிருந்தது. உள்ளதை உள்ளபடிக்

கூறுவதுதான் வாய்மை என்று பலரும் கருதினர். உள்ளதை மறைத்துக் கூறுவதுதான் பொய் என்னப் பட்டது. பிறர்க்கு மனமொழிமெய்களால் எவ்வாற் ருனும் தீமை பயத்தலாகாது என்ற அடிப்படையிலே எழுந்தது திருக்குறள். ஆதலால் வாய்மையென்பது கலப்பற்ற நலத்தைத் தன்னகத்தே கொண்ட ஒரு தூய்மையான வாய்மொழியாக இருக்கவேண்டும் என்று வள்ளுவர் கொண்டார். அத்தகைய வாய்மொழி எவ்விதத்திலும் பிறருக்குத் தீங்கு விளைப்பதாய் இருக்கமுடியாது. அப்படித் தீங்கு விளைப்பதாய் இருந்தால் அது வாய்மையாகாது. ஒரு சொல் உண்மையாக இருந்து அது பிறருக்கு ஊறு விளைப் பதாய் இருக்குமானுல், அதனை வாய்மையென்று கொள்ள அவர் உள்ளம் ஒருப்படவில்லை. ஆனுல் பிறரெல்லாம்,ஊறு விளைப்பதாயிருந்தாலும் உள்ளதை உள்ளபடி உற்றுரைப்பதுதான் வாய்மையென்று கூறினர். பிற உயிர்களின் நோயையும் தன் நோய் போற் போற்றும் தலையாய அறிவின் தலைமுகட்டிலே நின்ற வள்ளுவர் அதனை ஒப்பவில்லை. ஆகவே, ஒரு புதிய முறையிலே வாய்மையின் இயல்பையெடுத்து உலகிற்கு விளக்கினுர் :

> "வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
> தீமை யிலாத சொலல்."

மெய்ம்மை யென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது யாதென்று வினவின், அது பிறிதோருயிர்க்குத் தீங்கு சிறிதும் பயவாத சொற்களைச் சொல்லுதல் என்பது இக்குறளின் பொருள். 'யாதொன்றும் தீமையிலாத சொலல் வாய்மை'எனவே, தீமையுள்ளன, நிகழ்ந்தன வாயினும், சொல்லப்படுவனவல்ல என்று ஓதினுர் வள்ளுவர். இங்ஙனம் யாதொன்றும் தீமையில்லாதன வற்றையே ஒருவன் சொல்வது என்று மேற்கொண்டால்

தீமையுள்ளனவாய உண்மைகளைக் கூருது விடுதல் பொய்மையாகுமே என்ற கேள்வி எழா நிற்கும். பொய் சொல்லலாமா? என்று ஒருவன் திருவள்ளுவரிடம் கேட்டுவிட்டான். அதற்குச் சிறிதும் தயங்காது திரு வள்ளுவர் "பொய்யும் சொல்லலாம், அது குற்றமில்லாத நன்மையை விளைப்பதாய் இருந்தால்'' என்று உடனே கூறினர் :—

'' பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.''

குற்றம் தீர்ந்த நன்மையே அறம். அறப்பயனை விளைவிக்கும் பொய்யும் மெய்யேயாம். பொய் அறப் பயனை எவ்வாறு தர முடியும்? என்பது அடுத்த கேள்வி. ஓர் உயிருக்குப் பெருங்கேடு அல்லது சாவு ஏற்படக் கூடிய தறுவாயில் அது துன்பம் நீங்கி இன்புறும்படிச் செய்யவல்லதாயிருந்தால், பொய்யும் சொல்லலாம். அது பொய்யாளுலும், மெய்யாகவே கொள்ளப்படும். அப்படி யாயின், ஒரு கொலையாளி தூக்குத் தண்டனை பெறு வதைத் தவிர்க்க நம் சொல்லாலே மறைத்துத் தப்பு விக்கச் செய்வது வாய்மையாகுமா? என்ற ஐயம் நிகழக்கூடும். அது சட்டப்படி குற்றமாகுமாகையால், அது போன்றவற்றை நீக்கவே, 'புரை தீர்ந்த நன்மை பயக்குமெனின்' என்று வள்ளுவர் அளந்து கூறினர். அது எவ்வாறு நிகழக்கூடும் எனின், ஓர் எடுத்துக் காட்டால் விளக்கலாம். உயிரோடு போராடிக் கொண் டிருக்கும் நோயாளி ஒருவன் தான் பிழைக்க முடியாதோ என்ற ஏக்கத்தில், அருகிலுள்ளவர்களை வினவும் பொழுது, உண்மையைக் கூறின் அவன் நோய் மிகும் என்று அஞ்சிக் கூறும் பொய்மைகள் பொய்யாகாவாய் வாய்மையேயாகும். இவ்வாறு நன்மை பயக்கும் நிகழா தது கூறலும், தீங்குபயவாத நிகழ்ந்தது கூறலும் வாய்மை யெனவும், நன்மை பயவாத நிகழாதது கூறலும் தீங்கு பயக்கும் நிகழ்ந்தது கூறலும் பொய்மை

யெனவும் துணிந்து கூறினர் திருவள்ளுவர். இதனுல் பொய்மையைத் திருவள்ளுவர் போற்றுகிருர் என்று கொள்ளலாகாது. அக்குறளின் சொற்களே நன்கு நோக்குதல் வேண்டும். பொய் ஒரு நாளும் வாய்மை யாகிவிட முடியாது. வாய்மை யிடத்த என்று தான் கூறினர். வாய்மை தீமையாகி வலியிழந்து காலிசெய்த இடத்திலே பொய்ம்மை நன்மையின் உதவியால் ஏறி நிற்கும் அவ்வளவுதான். அதன் இயல்புக்குக் கூடாத ஒன்றும் அதன் கண் இருக்கவேண்டும் என்ருர். அதாவது அது நன்மையைக் கொடுக்க வேண்டும் என்ருர். அந்த நன்மையும் சாதாரண நன்மையாய் இருத்தல் போதாது. புரை தீர்ந்த நன்மையாய் இருக்க வேண்டும் என்ருர். இவ்வளவு இருந்தாலும் அது வாய்மைக்கு வலத்தில் கூட வரமுடியாது; இடப்பக்கத்தில்தான் இருத்தக் கூடியதாகும் என்ற பொருள்பட வாய்மை யிடத்த என்ருர். இது பொய்ம்மைக்கும் வாய்மைக்கும் புதியதோர் இலக்கணமாகவே அமைந்தது. திருவள்ளுவர் கருத்தை விளக்குவது போல், சிவப்பிரகாசர் திருவெங்கைக் கோவையில் ஒரு பாடல் பாடியுள்ளார். அஃது ஈண்டைக்கு நோக்கத்தகும். இரவுக்குறியின்கண் தலைவன் தலைவியர் கூட்டத்திற்கு இடையூருகச் சேவல் கூப்பிட்டது. அது உண்மையிலேயே பொழுது விடிந்ததைக் கூறுவதாயிருந்தும், அதன் குரல் காதலர் களுக்குப் பிரிதலாகிய தீமையைக் கொடுத்ததால், சேவல் கூவியது வாய்மையாகாது பொய்மையேயாகும் என்று தலைவி கூறியதாக வரும் பாடல் :—

> "வாய்மை யெனினும் புலரியைக் கூறுதல் வாரணங்காள்
> சேய்மை யறுநங் கொழுநர்தம் கூட்டஞ் சிதைத்தெமக்குத்
> தீமைபுரிந்தமை யால்வெங்கை நாயகர் செய்தஅறத்
> தூய்மை யுணர்ந்தவர் வாய்மையன் ருமெனச் சொல்லுவரே."

இதனுல் அறத்தூய்மையின் அடிப்படையிலே வாய்மையை வகுத்துக்கூறினர் திருவள்ளுவர் என்பது

நன்கு விளங்கும். அறத்திற்கு மாருக வாய்மையே வந்தாலும் அதனைப் புறத்தே வீசியெறிந்தார் திருவள்ளுவர். அறத்திற்கு உதவும் விதத்திலே பொய்ம்மையே வந்தாலும் அதனை அஞ்சாமல் விரும்பி ஏற்றுக் கொண்டார். சத்தியம் என்ருல் என்ன என்பதை வள்ளுவர் போல் வேறு எவரும் விளக்கியதில்லை. வள்ளுவரின் விளக்கம் ஒரு புரட்சிபோலத் தோன்றினும், அது அறிவுக்கும் அறத்திற்கும் ஒப்ப முடிந்ததோர் உயர்ந்த கருத்து என்பதை யாவரும் உணர்வர்.

இது போன்று பொறுமையைப் பற்றி வள்ளுவர் கூறிய கருத்துக்களும் பலருக்குப் புரட்சியாகவே தோன்றும். இக்காலத்திலுங் கூட, பழிக்குப்பழி வாங்குபவனை வீரன் என்றும் மானமுடையவன் என்றும் பாராட்டுவர். A tooth for a tooth and a nail for a nail என்பது ஓர் ஆங்கிலப் பழமொழி. அதன்படி, பல்லுக்குப் பல்லும் நகத்திற்கு நகமும் எனப்பழிவாங்குதல் பொருந்தும். சிலர் வஞ்சினம் கூறும்பொழுது, 'என் நிழலை மிதித்தால் உன் தலையை மிதித்துவிடுவேன்' என்று பலர் மெச்சக் கூறுவர். தற்காப்புக்காக (Selfdefence) ஒருவன் எதுவேண்டுமானுலும் செய்யலாம் என்பது சட்டவரம்புக்குட்பட்ட ஒரு நியதியாகும். நஞ்சு போன்று கொடியவர்களையும், நன்றிகெட்டவர்களையும், வாக்குத்தவறுபவர்களையும் கொன்ருல் அது பாவமாகாது என்று, மனுதர்ம சாத்திரத்தில், இராசதருமம் கூறும் ஏழாவது அத்தியாயத்தில் தண்டப்பிரசம்ஸையிற் காணப்படுகிறது. அதனை இராமன் மேற்கோள் காட்டிக் கூறினதாகக் கிட்கிந்தாகாண்டத்தில் கம்பர் பாடியுள்ளார். கார்காலம் கழித்துப் படைகளுடன் வருவதாகச் சொல்லிப்போன சுக்கிரீவன் அவ்வாறு வரவில்லை. இராமன் வாலியைக் கொன்று தனக்குப் பட்டம் அளித்துள்ள நன்றியையும் அவன் மறந்து, மதுமயக்

கத்தில் பெண்கள் கூட்டத்தனுய் இன்ப வாழ்க்கையில் ஆழ்ந்துவிட்டான். இராமனுக்கு அளவுகடந்த சீற்றம் பிறந்தது. வாலியைக் காலி செய்த கோலினுல் அப் போலிப் பதரையும் தீர்த்துக் கட்டுவேன் என்று கொதித்தெழுந்து இலக்குவனை அவன்பால் அனுப் பினுன். அப்பொழுது தம்பியிடம் அவன் கூறியதாவது:

''நஞ்சு மன்னவ ரைநலிந் தாலது
வஞ்ச மன்று மனுவழக் காதலால்
அஞ்சி லைம்பதி லொன்றறி யாதவன்
நெஞ்சி னின்று நிலாவ நிறுத்துவாய்.''

இவ்வாறு பழிக்குப்பழி வாங்குவது மனுதருமத் தில் கூறப்படும் ஒரு நீதியேயாஞலும் சான்ருேராகிய வள்ளுவருக்கு அது ஏன்றதாக இல்லே.

''எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானு
மாணு செய்யாமை தலை.''

என்ற தூய உள்ளம் கொண்டவர் வள்ளுவப் பெருந்தகையார். பழிவாங்கும் மனப்பான்மை அறக் கழிவுடையது என்பதை அறிவாற் கண்டார். தனக் குக்கேடு செய்தவர்களுக்கும் திருப்பித் தீங்கு புரியா திருப்பதுவே அறிவாளியின் செயல் எனக்கொண்டார். 'தனக்குத் தீங்குபுரிந்தவனைச் சும்மா விடலாமா? அது அறிவாகுமா? அது மடமை யல்லவா?' என்று ஒருவன் கேட்டான். 'பழிவாங்காதிருப்பதா மடமை ? தமக்குத் தீங்குகளை வேண்டுமென்று செய்கிறவர்களுக்கும் தீங்கு புரியாதிருத்தலைத் தமக்குறுதிநாடும் அறிவுக ளெல்லாவற்றுள்ளும் தலை சிறந்த அறிவென்று நல்லோர் சொல்லுவர்'' என்று வள்ளுவர் கூறினுர் :—

''அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்.''

இது பலருக்கும் மயக்கம் விளைவித்தது. ஒருவன் கேட்கலுற்ருன்: ''நம்மைக் கொல்லவருபவனை நாம் கொல்லாமல் விடலாமா ? அப்படி விடுவதானுல் அவன்

நம்மைக் கொன்றுவிடுவானே'' என்ருன். பாவம் கொலை யுண்டவழித்தேய்தலையும் கொன்றவழி வளர் தலையும் நோக்கிய வள்ளுவர்,

"தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.''

என்று விடையிறுத்தார். அப்படியானல் தனக்குத் தீங்கு செய்யும் ஒருவனை எப்படித்தான் தண்டிப்பது? என்று ஒருவன் கேட்டான். அதற்குத் திருவள்ளுவர் "உனக்குத் தீங்கு செய்தவரை நீ தண்டிப்பது எவ்வா றெனில், தீங்கு செய்தவர்கள் நாணும்படி அவர்களுக்கு நன்மையைச் செய்து, அவர் செய்த தீங்கையும் அதுபற்றி அவரைத் தண்டிக்கும் கருத்தையும் ஒருங்கே மறந்துவிடுதலாகும்'' என்ருர்:

"இன்னா செய்தாரை யொறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.''

இதைக் கேட்டுக் கொண்டிருந்தவன் வள்ளுவரை நோக்கி, "ஐயா! தாங்கள் அவன் செய்த தீங்கை மறந்துவிடவேண்டும் என்று சொல்வதே ஒரு புரட்சி யாக இருக்கிறது. தாங்கள், அதற்கு மேலும், அவனுக்கு நன்மையையும் செய்யவேண்டும் என்று சொல்கின்றீர்களே, அது ஏன்?'' என்று கேட்டான். அதற்கு வள்ளுவர், "தீங்கு செய்தவனுக்கும் நன்மை யைச் செய்யாதுபோனல் ஒருவன் சால்புடையவனுதல் எப்படி? தீங்கு செய்தவனுக்கு அவனைத் திருத்தும் விதத்தில் நன்மையைச் செய்யாது, நீயும் தீங்கு செய்யத் தொடங்கினல், உனக்கும் அவனுக்கும் என்ன வேற்றுமை இருக்கிறது? நீயும் அவனும் ஒன்று என்று ஆகிவிடுமே. நீ அவனைவிட மேலானவன், பெருந்தன்மையுள்ளவன், சான்ருேன் என்பது எவ்வாறு விளங்கும்? ஒரு நாய் கடித்துவிட்டால்

அதனைத் திருப்பிக் கடிப்பவர்கள் உண்டா? தீங்கிழைப் பவனுக்கும் நன்மை செய்வதல்லவா நீ கொண்ட சால்பின் பயன்?" என்று பதில் வினவினுர்:

"இன்னுசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு."

இதனைக் கேட்டுக் கொண்டிருந்தவன் திருவள்ளுவரிடம், "அறமுடைய நல்லவர்க்கு நாம் அன்பு செலுத்துவது பொருந்தும்: மறமுடைய தீயவர்க்கும் நாம் அன்பு காட்டுதல் ஒக்குமா?" என்று கேட்டான். உடனே அவன் திடுக்கிடும்படியாகப் பதில் வந்தது:

"அறத்திற்கே அன்புசார் பென்பர் அறியார்
மறத்திற்கும் அஃதே துணை."

திருவள்ளுவரை விடாது மீண்டும் அவன் வினவலுற்ருன்: "நமக்குத் தீங்கு செய்தவனுக்கு நாமும் ஒரு தீங்கைச் செய்து அவனை வருத்தப்படுத்தினுல், நம் மனம் ஆறுதல் அடைகின்றது. அது ஒரு தனி இன்பத்தைக் கொடுக்கிறது என்பதை யாவரும் அறிவார்களே. தாங்கள் ஏன் அதனைக் கூடாது என்று கூறவேண்டும்?" என்று கேட்டான். அதற்குத் திருவள்ளுவர் "பழிக்குப்பழி வாங்குவதால் உண்டாகும் இன்பம் ஒரு நாளைக்குத் தோன்றிப் பின் மறைந்து விடும். ஆனுல் ஒருவன் செய்த தீங்கை நீ பொறுத்துக் கொண்டு பதிலுக்குத் தீங்கு செய்யாதிருந்தால், உன் ஆயுள் உள்ள மட்டும் உனக்கு அது பெரும் புகழை விளைத்து இன்பூட்டிக் கொண்டிருக்கும் என்பதை உணர்ந்துகொள்" என்று கூறினுர்:—

"ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்."

பின்னும் விடாது தொடர்ந்து அவன் திருவள்ளுவரைக் கேட்கலுற்ருன்: "ஒருவன் நெருப்பைக் கொண்டு வந்து நம் மீது கொட்டினுலும் நாம்

பொறுத்துக்கொண்டிருப்பதா? அவனுக்கு ஒரு கெடுதலும் செய்யக்கூடாதா?'' என்ருன். "சுவாலைவிட்டு எரிகின்ற நெருப்பிலே தோய்விப்பது போன்ற கொடிய தீங்கை ஒருவன் இழைத்தாஞயினும், அவன் ஒருகால் உன்னுழைவர நேர்ந்தால், அவனுக்கு நீ மலர்ந்த முகத்துடன் வேண்டுங் குறைகளை முடித்துக் கொடுத்து நல்லவஞய் நடந்துகொள்ள வேண்டும்'' என்று கூறிஞர் திருவள்ளுவர் :—

"இணரெரி தோய்வன்ன இன்ன செயினும்
புணரின் வெகுளாமை நன்று."

"வெகுளவும் கூடாதா?'' என்று முணுமுணுத்தான் கேட்டவன். "வெகுள்வது கூடாது என்பது மட்டும் இல்லை. செய்யத்தகாத கொடியவற்றைச் செய்த அவன் துன்பத்திற்கு ஆளாவானே என்று பரிந்து அவனுக்காக நீ இரங்கவும் வேண்டும். அதுதான் மனிதத் தன்மைக்கு நல்லது'' என்றும் கூறிஞர் வள்ளுவர் :—

"திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று."

இவ்வருமைக் குறளின் பொருளை விளக்கி நாலடியாரிலும் ஒரு பாடல் வந்துள்ளது :—

"தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்—நும்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று
பரிவதுஉம் சான்ருேர் கடன்."

தகாத செய்தொழுகும் கொடியோருடைய அறியாமை நோக்கி நாம் அளியராக வேண்டும் என்று சிலப்பதிகாரமும் கூறுகிறது :—

"நெறியி னீங்கியோர் நீரல கூறினும்
அறியா மையென் றறிதல் வேண்டும்."

திருவள்ளுவர் வகுத்த இவ்விலக்கணத்திற்குச் சிறந்த இலக்கியமாகத் திகழ்ந்தவர் இயேசுநாதர். அவரைச் சிலுவையிலே ஆணியால் அழுத்தியபோது

அவர் உடலம் நடுங்கிக்கொண்டிருந்தது. அப்பொழுது ஒரு கொடியவன் ஒரு வேற்படையை அவர் வயிற்றிற் பாய்ச்சினான். குருதி கொப்புளித்துப் பொங்கியது. உடல் துடித்தது. அந்த நிலையிலும் இயேசுவானவர் தமக்கு இன்னல் இழைத்தவர்களை யாதும் சினந்து கூறவில்லை. அவர்களின் அறியாமைக்காகப் பரிந்து உருகினார். தம்மை மிறைப்படுக்கும் செயலுக்குப் பின்னர் குறைப்படுவார்களே என்று குழைந்தார். "ஆண்டவனே! அவர்கள் செய்வது அறியாது செய்கின்றனர். அவர்களை மன்னித்துவிடு" என்று வேண்டினார். மனிதர் இயேசு அமரராகிவிட்டார். அதுபோல் ஒவ்வொரு மனிதனும் அமரனாக இம் மண்ணில் வாழவேண்டும் என்பது வள்ளுவரின் ஆசை. பகைத்தவர்களையும் நட்பாக்கி நல்வழிப்படுத்துவது ஓர் உயர்ந்த எல்லை. அவ்வெல்லையை அடையும் பொழுதுதான் மனிதன் தேவனாக மாறுகிறான். வள்ளுவரின் கனவு இயேசு வாழ்க்கையில் நனவாக மலர்ந்தது. இந்த ஒரு பண்புக்கு மனிதனாய்ப் பிறந்த எவனும் இயேசுவைத் தொழாமலிருக்கமுடியாது. அத்தகைய பொறுமையின் சிறப்பினைப் பல கோணங்களில் நமக்கு எடுத்துக்காட்டிப் பல குறள்களை வள்ளுவர் நமக்கு வழங்கியுள்ளார். அவற்றுள் சில வருமாறு:

1 "நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று."

2 "கொன்றன்ன வின்னா செய்யினு மவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்."

3 "கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்."

4 "செய்யாமற் செற்றார்க்கு மின்னாத செய்தபின்
உய்யா விழுமந் தரும்."

5 "ஒறுத்தாற்றும் பண்பினர் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை."

6 "பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்."

7 "இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்."

8 "பேராண்மை யென்ப தறுகண்ஒன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றத னெஃகு."

9 "பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
இன்னா செய் யாமை தலை."

10 "இகலானும் இன்னாத வெல்லாம் நகலானும்
நன்னயம் என்னும் செருக்கு."

11 "பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கட் டங்கிற் றுலகு."

12 "நகையுள்ளும் இன்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு."

13 "நண்பாற்றா ராகி நயமிலவே செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை."

14 "அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை."

15 "பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று."

16 "இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை."

17 "நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும்."

18 "ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து."

19 "மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல்."

20 "துறந்தாரிற் றூய்மை யுடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர்."

21 "உண்ணாது நோற்பார் பெரியர் பிறர் சொல்லும்
இன்னாச் சொல் நோற்பாரிற் பின்."

இவை போன்று பல குறள்களிற் பழி வாங்கும் பொல்லாங்கைத் தவிர்த்துப் புரட்சிகரமாக அறிவு புகட்டியுள்ளார் திருவள்ளுவர். வேறு எப்பொருளைக் குறித்தும் வள்ளுவர் இத்தனை குறள்கள் செய்ததில்லை. இதனால் பொறுமையைப் பற்றிய அவரின் உறுதிப் பாடு நன்கு புலனாகும்.

பழிக்குப்பழி வாங்கப் பாரதப் படுகளத்தில் பார்த்தனுக்குப் பரந்தாமன் பாரித்துரைத்தது பகவத் கீதை. அதனை இன்றும் பல்லாயிரவர் பரவிப் பாராட்டுவர். வள்ளுவரும் அதனைப் பார்த்திருக்கிறார். படித்து வேர்த்திருக்கிறார். அதில் செய்யவேண்டுவன இவையென்ற வரையறை காணப்படும். ஒரு குலத்துக்கொரு நீதியென வெவ்வேறு வருணங்களுக்கு வெவ்வேறு நீதிகள் புகலப்படும். நன்மைகளையும் கடமைகளையும் அவ்வாறு வரையறை செய்துவிட முடியாது என்பதை வள்ளுவர் கண்டார். அதற்கும் ஒரு புரட்சி செய்தார். நல்லன எல்லாவற்றையும் எல்லா மனிதரும் ஒல்லும் வாயெல்லாம் செய்து முடிப்பது கடமையாகும் என்று முழங்கினார். பகவத்கீதை ஒவ்வொருவருடைய சாதிக்குமுரிய கடமைதான் கடமை என்று அறுதியிட்டுக் கூறுகிறது. திருக்குறள் எது நன்மையோ அதைச் செய்வது தான் கடமை என்று கூறுகிறது :—

"கடனென்ப நல்லவை யெல்லாம் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு."
"ஒல்லும் வகையான் அறவினை யோவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல்."

இன்றும் வாஜபேயம் முதலிய வேள்விகளை வளர்க்கின்றனர். உயிர்ப்பலி கொடுக்கின்றனர். ஊன்மிச்சிலை மிசைகின்றனர். திருவருட் பிரசாதம் என்று அசை போடுகின்றனர். வேதம் ஓதி, உயிர்களைக் காதி, வேள்விகளை ஊதிப் பலரும் வழிபடும் இம்முறைகண்டு

வள்ளுவர் உள்ளம் வெதும்பினுர். எண்ணில் உயிர் களைக் கொன்று குவித்துத் தீயிலிட்டுப் புண்ணியம் தேடுவதைவிட, ஓர் உயிரையாயினும் கொன்றுதின்ரு திருந்தால் பெரும் புண்ணியம் கிட்டுமே. வேதத்தின் உட்பொருள் காணுது ஏதத்தில் விழுந்து ஏமாறு கின்றனரே என்று ஏங்கினுர். வேள்விகளை எதிர்த்துப் புரட்சி செய்தார் :

"அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணுமை நன்று."

இவ்வாறு வள்ளுவர் செய்த புரட்சிகள் பல. அவை உண்மையில் புரட்சிகள் அல்ல: பெருஞ் சீர்திருத்தங்கள் : மக்களைத் தேவராக்கும் மாண்புமிக்க மாற்றங்கள். வள்ளுவர் வகுத்தது பொய்தீர் ஒழுக்க விழுப்ப நெறி.

# எல்லாம் தெரிந்தவர்

படித்தவர்களைக் கண்டால் படியாதவர்களுக்குப் பிடிக்காது. படித்தவர் முன்னிலையில் தாங்கள் சிறுமை யுறுவதைப் படியாதவர்கள் ஒவ்வொரு கணமும் உணர்ந்துகொண்டேயிருப்பார்கள் அதனால் அவர்கள் பொறுமையும் அளவு கடந்து வளர்ந்துகொண்டே யிருக்கும். படித்தவன் எங்காவது தவறுவதைக் கண்டாலும் உண்மையில் தவறுதிருந்தாலும் தவறின தாக இட்டுக்கூட்டியும் படித்த முட்டாள் என்று பட்டம் சூட்டத் தவறமாட்டார்கள். படித்தவன் செய்யும் சிறிய தவறையும் பெரிதாகக்காட்டி முட்டாள் பட்டம் கட்டுவதில் படியாதவன் ஆத்திரம் கொண்டவனாய் இருப்பான். படியாதவன் ஒரு பெரிய தவறு செய்துவிட்டாலும், ஐயோ! அறியாதவன் என்று விட்டுவிடுவார்கள். ஆனால் படித்தவன் ஒரு சிறு குற்றம் செய்துவிட்டாலும் கூட, அது பிறர் கண்ணுக்குப் பெரிதாகிவிடும். அவன் கற்ற கல்விக்கே ஒரு சொட்டை ஏற்பட்டுவிடும். ஆதலால் கல்விச் செல்வத்தை யுடையவன் உலக வாழ்க்கையில் தன் கல்வியின் பெருமைக்கு ஒரு பங்கம் வந்து விடாதபடி கண்ணும் கருத்துமாய்க் காத்துவரவேண்டும். கத்தியின் கூர்முனையில் நடப்பது போல் மிகுந்த எச்சரிக்கையுடன் வாழ்க்கைப் பாதையில் நடந்தேற வேண்டும். கல்விப் பொறுப்பைத் தாங்குவதில் சிறிது அசட்டையாக இருந்துவிட்டால் தனக்குக் குறை வரும் என்பது மட்டுமல்ல, படித்த உலகிற்கே ஒரு பழிச்சொல் ஏற்பட்டுவிடும்.

கற்றவர்கள் அவ்வாறு அறியாமைக் குழியில் விழுந்துவிடக் கூடாது என்று திருவள்ளுவர் பல

முறையும் பல விதங்களில் எச்சரித்துள்ளார். படித்தவர்கள் எல்லாரும் அறிவாளிகளாகிவிட முடியாது. படியாதவர்களிலும் அறிவாளிகள் இருக்கிறார்கள். ஒருவன் மிகச் சிறந்த நூல்கள் பலவற்றைப் படித்திருந்தாலும், அவ்வளவுக்கு அவன் அறிவு பெருகிவிடப் போவதில்லை. அவனது இயற்கை யறிவே மேம்பட்டு நிற்கும்.

"நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும்."

ஒருவன் படித்துப் பெறுகிற அறிவு செயற்கை யறிவு. அவன் ஊழின்படி வளர்கிற அறிவு இயற்கை யறிவு. விதிவசத்தால், வேண்டிய சமயத்தில் கற்ற கல்வி பயன்படாது போய்விடும். அவனுடைய உண்மையறிவே முன்வந்து நிற்கும் அவன் எவ்வளவு படித்து வைத்தும் கொடுத்து வையாது படித்த முட்டாள் ஆகிவிடுவான். அறிவாளி என்று பிறரால் மதிக்கத் தக்கவனாய் இருந்தும் பேதைமைத் தொழில் புரிந்து அறியாதவனாவான். புத்தியில் ஆதவனும் புத்தியில்லாதவனாவான். கடல் போலும் கல்வியுடைய பெரிய மேதாவியாயிருந்தாலும் கூட, எத்தனையோ காரியங்களில் அவன் அறிவிலியாகவே நடந்து கொள்வான். சிறந்த அறிவாளியிடத்திலும் ஒரு பக்கத்திலே அறியாமை இருக்கத்தான் செய்யும்.

"அறியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கால்
இன்மை யரிதே வெளிறு."

ஒவ்வொருவன் ஒவ்வொன்றிலே கெட்டிக்காரனும் இருப்பான். அறிவின் காரணமாக நாம் எவரையும் இகழ்தல் கூடாது :—

"வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கறையான்
தேன்சிலம்பி யாவர்க்கும் செய்யரிதால்—யாம்பெரிதும்
வல்லோமே யென்று வலிமை சொல வேண்டாங்காண்
எல்லார்க்கும் ஒவ்வொன் றெளிது."

சிலர் அரைகுறையாய்ப் படித்திருந்தாலுங்கூட, எல்லாம் தமக்குத் தெரிந்துவிட்ட மாதிரித் தலைதருக்கித் திரிகிறார்கள் இத்தகைய போலிகளுக்கு வள்ளுவர் வகுத்த அறவுரை வியக்கத் தக்கதாகும்.

"கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉம் ஐயம் தரும்."

தம்மிடம் இல்லாத அறிவையும் இருப்பதாகச் சொல்லிப் பொய்யாக நடித்தால், தம்மிடம் உண்மையிலே இருக்கக்கூடிய யாதானுமொரு தெளிந்த நூலறிவையும் உலகம் நம்பாது ஐயப்படும்படியாகி விடும் என்றார். உண்மையிலேயே ஒருவன் நிறையக் கற்றிருந்தாலும்கூட, நிறைந்த அறிவைப் பெற்றுவிட்டோம் என்று அவன் எப்பொழுது எண்ணுகிறானோ அப்பொழுதே அவன் முட்டாள் ஆகி விடுகிறான். தனக்கு எல்லாம் தெரியும் என்று தலை தருக்கித் தடுமாறிய ஒருவன் திருவள்ளுவரிடம் சென்று "முட்டாள்தனம் எப்படியிருக்கும்?" என்று கேட்டான். 'உன்னைப் போலத்தான் இருக்கும்' என்று அவர் பதில் கூறினார்.

"வெண்மை யெனப்படுவ தியாதெனின் ஒண்மை
உடையம் யாம் என்னும் செருக்கு."

எல்லாம் தனக்குத்தான் தெரியும் என்று எவன் நினைக்கிறானோ அவனே முதல் தரமான முட்டாள் என்கிறார் திருவள்ளுவர். இப்படி எத்தனை முட்டாள்கள் உலகில் அலைகிறார்களோ என்று எண்ணவே உள்ளம் பதறுகிறது.

பரந்து கிடந்த கடல் போன்று ஆழமுடைய ஓர் ஏரி. அதிலே ஒரு விளையாட்டுப் படகு. அதில் ஓர் தத்துவப் பேராசிரியர் ஏறி உட்கார்ந்தார். காற்று சில்லென வீசி மெல்லெனத் தவழ்ந்தது. படகோட்டியும் படகைச் செலுத்த ஆரம்பித்தான். கரையில் வளர்ந்து வானளாவ ஓங்கிய வண்ண மரங்களின் வடிவழகைப் பேராசிரியர் கண்டு மகிழ்ந்தார். அவரோ பல்கலைப் புலவர்; தாவர நூல் அவருக்குத் தண்ணீர் பட்டபாடுதான். மல்லல் மலர்கள் மதுவினைப் பொழிவதும், மகரந்தத் தூள்களை வண்டு தூவி ஊதுவதும் இச்சையை விளக்கும் பச்சை இலைகள் இசை கூட்டி ஆடுவதும், ஊசலாடும் பழக்குலைகள் நீரின் அலைகளில் நிழற்படுவதும் உள்ளத்துவகையை ஊட்டிவளர்த்தன. அவ்வியற்கைக் காட்சிகளைப்பற்றிப் பிறருடன் பேசி மகிழப் பேராசிரியரின் உள்ளம் துடித்தது. அங்குத் தம்முடன் இருந்தவன் படகோட்டி ஒருவனே தான் அவனைப் பார்த்து "நீ தாவர நூல் படித்திருக்கிறாயா?" என்று கேட்டார். "இல்லை" என்றான் படகோட்டி. "உன் வாணாளிற் காற்பங்கு வீணாய் விட்டதே" என்றார் அறிஞர். படகு போய்க்கொண்டே இருந்தது. தண்ணீருள் கருத்தைச் செலுத்தினார் பேராசிரியர். வெவ்வேறு நிறங்கொண்ட பலவிதமான மீன்கள் நீரில் மிளிர்ந்து கொண்டிருந்தன. விலங்கு நூலின் நுண் பொருள்களுக்குள்ளே பேராசிரியரின் கவனம் சென்றது. ஆகா! அவை படிக்கப் படிக்க எவ்வளவு அற்புதமானவை! படகோட்டியை நோக்கினார் பேராசிரியர். 'நீ விலங்கு நூல் படித்திருக்கிறாயா?" என்ற கேள்வி பிறந்தது. "இல்லை" என்ற பதில் வந்தது. அவனுக்காகப் பரிதாபம் கொண்டார் அறிஞர். "அந்தோ! உன் வாழ்க்கையில் பாதி பாழாகி

விட்டதே!'' என்று இரங்கிப் பேசினர். படகோட்டி கவலையின்றித் துடுப்பை உந்திக்கொண்டிருந்தான்.

விரைந்து செல்லும் மேகங்களினூடே மாலை மதியம் மன்ருடிக்கொண்டிருந்தது. காற்றும் கடுமையாகக் கிளம்பியது. இடையிடையே நட்சத்திரங்கள் கண் சிமிட்டிக் கொண்டிருந்தன. அவை பல்கலைப் புலவரைப் பாராட்டினவா, படகோட்டியைப் பார்த்துப் பரிகசித்தனவா என்று சொல்ல முடியவில்லை. பேராசிரியர் அந்தரத்தகில கோடி தாழாமல் நிலை நிற்கும் தன்மையைக் கண்டு வியந்து கொண்டிருந்தார். அவரோ வான நூற்கலையைக் கரை கண்டவர். அதைப் பற்றி மணிக்கணக்காகப்பேச வல்லவர்; ஆனுல் கேட்கத்தான் அங்கு ஆளில்லை. படகோட்டியை நோக்கினர். "உனக்கு வான நூலாவது தெரியுமா?'' என்று கேட்டார். அவருடைய முகத்திலே ஓர் ஏளனப் புன்னகை ஏறி இழிந்தது. 'இல்லை' என்றுதான் அவன் சொல்லக் கற்றிருந்தான். "அதெல்லாம் நான் என்னத்தைக் கண்டேன் சாமி!'' என்ருன். "ஐயோ! வான நூலும் உனக்குத் தெரியாதா? உன் வாழ்க்கையில் முக்காற் பங்கு மோசமாய்ப் போய்விட்டதே!'' என்று பரிந்து உருகினர் பல்கலைப் புல்வர்.

இயற்கையும் அவருடன் சேர்ந்து கொந்தளித்தது போல், கடும் புயல் கிளம்பி நீரினைக் கலக்கி மலை மலையாய் அலைகளைக் கிளப்பியது. படகு அங்கு மிங்குமாய் மோதி அல்லோலப்பட்டது. படகோட்டி தத்துவப் பேராசிரியரைப் பார்த்தான். "உங்களுக்கு நீந்தத் தெரியுமா?'' என்று கேட்டான். 'நான் படிக்காதது அது ஒன்று தான்'' என்ருர் பேராசிரியர். "ஐயோ! கால், அரை, முக்கால் என்ற கணக்கு எனக்கு வராது. உங்கள் வாழ்க்கை முழுதுமே பாழாகிவிட்டதே. படகு

கவிழ்ந்து கொண்டிருக்கிறது !'' என்று சொல்லிக் கொண்டே நீரில் குதித்து நீந்தினுன் ஒன்றும் படியாத படகோட்டி. எல்லாம் தெரிந்தவர் நீரின் ஆழத்தை அளந்து கொண்டிருந்தார். எக்கலைகள் வல்லார்க்கும் நீச்சற் கலை யில்லார்க்குப் படகு மூழ்கும் போது உயிர் தப்ப முடியுமா? எல்லாரும் எல்லாம் தெரிந்திருக்க முடியாது போலும் !

'' கற்றதுகைம் மண்ணளவு கல்லா துலகளவென்
றுற்ற கலை மடந்தை யோதுகிருள்—மெத்த
வெறும் பந் தயங்கூற வேண்டாம் புலவீர்
எறும்பும் தன் கையாலெண் சாண்.''

---

# நாவுக்கரசும் திருவள்ளுவரும்

நாவுக்கரசும் திருவள்ளுவரும் என்ற தலைப்பை நினைத்தவுடனேயே அவ்விரு பெயர்களின் தலையெழுத்துக்களும் கூடிக் குதித்து ஒன்றாய் இணைந்து கைகோத்து நமக்குக் காட்சியளிக்கும். அவ்வீரெழுத்துக்களும் ஒரு சொல்லாய்ப் பொருந்தி நாதியென்றாகும். யாருக்கு நாதி? நம் தமிழன்னைக்குத்தான். தமிழ் மொழிக்கு நாதியாவார் நாவுக்கரசும் திருவள்ளுவரும் என்பது எவ்வளவு பொருத்தமும் உண்மையுமாகும்!

நாதி என்ற சொல்லை நாம் அடிக்கடி வழங்குகிறோம். மிகக்கிட்டின உறவுடன் தாயாதி முறையுள்ளவனையும் காப்பாற்றுபவனையும் நாதியென்று சொல்வர். யாதொரு திக்குமில்லாதவன் அநாதி. ஏனென்று கேட்க ஆளில்லாதவன் அநாதி. தழைக்கும் செழுங்கிளையைத் தாங்கி வளர்ப்பவன் எல்லாச் செல்வமும் குறைவறப் பெற்றவனாவான். நாதியற்றவனுக்கு இவ்வுலக வாழ்க்கையே சுவைக்காது; நான் யாருக்காக வாழப்போகிறேன்? என்னை யார்தாம் தாங்குவார்கள்? என்ற ஏக்கம்தான் பிறக்கும். நாதியற்றவன் என்ற நிலையைவிட இழிவானது வேறு இவ்வுலகில் இல்லை. மனிதர்களைப் போல மொழிகளிலும் நாதியுள்ள மொழிகளும் நாதியற்ற மொழிகளும் உண்டு. நல்ல இலக்கிய வளம்பெற்ற மொழிகள் நாதியுள்ள மொழிகள். நல்ல கவிகளும் கவிதைகளும் பெறாமல், இலக்கிய ஆதாரம் கிடையாமல், ஒரு குழுவினரின் பேச்சு வழக்கில்மட்டும் நின்றுவிடும் மொழிகள் நாதியற்ற அநாதி மொழிகள். உயர்தனிச் செம்மொழியாகிய நமது தாய் மொழியாந் தமிழுக்குக் கதியாவார் கம்பரும் திருவள்ளுவரும் என்று கூறுவர். அவ்விதம் கதியுள்ள தமிழுக்கு நாதி

உண்டா என்றே கேட்கத் தேவையில்லை. நாவுக்கரசர் என்ற பெயரிலுள்ள முதலெழுத்தும் திருவள்ளுவர் என்ற பெயரிலுள்ள முதலெழுத்தும் சேர்ந்தால் நாதி வந்துவிடும். பெயரளவில் மாத்திரமல்ல. உண்மையை உற்று நோக்கினுலும் நாவுக்கரசும் திருவள்ளுவரும் தமிழ் மொழிக்குச் சிறந்த நாதி யாவார்கள்.

நாவுக்கரசரையும் திருவள்ளுவரையும் இணைத்துப் பார்ப்பது ஒரு நல்ல படிப்பாகும். பிற தமிழ் இலக்கியங்களில் திருக்குறள் எவ்வாறு கையாளப்படுகிறது என்பதைக் காண்பதும், கூறுவதும், கேட்பதும், எழுதுவதும், படிப்பதும் அறிஞர்களுக்கு அளவில்லாத மகிழ்ச்சியைக் கொடுக்கும். ஆனுல் அப்படிப் பார்ப்பவர்களுங்கூட நாவுக்கரசரையும் திருவள்ளுவரையும் ஒட்டிப் பார்ப்பதில்லை. திருவள்ளுவர்எழுதிய திருக்குறள் ஒரு சிறந்த இலக்கியம். வள்ளுவர்சமயம் கடந்தவர். நாவரசரோ சைவசமயத் துறவி. அவர் திருவாய் மலர்ந்தருளியவை தேவாரத் திருமுறைகள். அவை சமயச் சார்புடைய பத்திச் சுவைப் பாடல்கள். இவ்விரு பெரியார்களுக்கும் என்னதான் தொடர்பு இருக்க முடியும்? என்று சிலர் எண்ணிவிடக்கூடும். தேவாரப் பாடல்களை இலக்கியக் கண்கொண்டு பார்ப்பதே வழக்கமில்லை. தெய்வத் திருமுறைகளை இலக்கியம் என்று சொல்வதுகூடத் தவறு என்று எண்ணுபவர்களும் சொல்லுபவர்களும் உளர். ஆனுல் திருக்குறளும் தேவாரமும் வேறுபட்டனவல்ல. அதிலும், நாவுக்கரசர் நற்றமிழும் திருக்குறளும் மிக நெருங்கிய தொடர்புடையன என்பதை நாம் முதலில் தெரிந்துகொள்ள வேண்டும். தேவார திருவாசகங்கள் திருக்குறள் போன்ற நூல்களெல்லாம் ஒரே பொருளையும் குறிக்கோளையும் கொண்டுள்ளன. அவை ஒத்த

மதிப்பும் சிறப்பும் பயனும் உடையன. இதனைப் பின் வரும் வெண்பாவால் நன்கு அறியலாம்.

> " தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
> மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை
> திருவா சகமும் திருமூலர் சொல்லும்
> ஒருவா சகமென் றுணர்."

திருக்குறளும் தேவாரமும் ஒத்த தன்மையுடையன என்பதோடு மட்டும் இவ்வொப்புமை நின்றுவிடவில்லை. திருவள்ளுவருடைய அடிச்சுவட்டைப் பின்பற்றி ஒழுகினவர் அப்பர். திருக்குறள் நெறியே அப்பர் கடைப்பிடித்த நெறியுமாகும். அதுவே திருநெறி, அருநெறி, செம்மைநெறி. திரு நின்ற செம்மையே செம்மையாக் கொண்டவர் திருநாவுக்கரசர். இத்திரு நின்ற செம்மை நெறியானது வேறு ஏதோ பொருள் புரியாத நெறி என்று நினைத்துவிடக்கூடாது. திருக் குறளில் திருவள்ளுவர் காட்டுகின்ற பொய்தீர் ஒழுக்க நெறியே இத்திரு நின்ற செம்மை நெறியாகும். இதனை இழிகட்பெருங் கண்ணனார் என்னும் சங்கப் புலவர் அந்நாளிலேயே நன்கு விளக்கியிருத்தல் கவனிக்கத் தக்கதாகும்.

> " இம்மை மறுமை யிரண்டும் எழுமைக் தம்
> செம்மை நெறியில் தெளிவுபெற—மும்மையின்
> வீடவற்றின் நான்கின் விதிவழங்க வள்ளுவனார்
> பாடினார் இன்குறள்வெண் பா."

இதனால் திருக்குறள் வகுத்த நெறி திரு நின்ற செம்மை நெறி என்பது நன்கு புலனாகும். திருக்குறளைக் கசடறக் கற்று அதன் நெறி வழியே உண்மையாக நடந்து காட்டிய பெரியார் திருநாவுக்கரசர். இதனாலேயே, திருக்குறளின் உயர்வை நன்குணர்ந்து அதன்படியே ஒழுகியும் பாடியும் ஓங்கு புகழ்கொண்ட சுந்தரமூர்த்தி அப்பரடிகளைத் 'திருநின்ற செம்மையே

செம்மையாக் கொண்ட திருநாவுக்கரையன் தன் அடியார்க்கும் அடியேன்' என்று உளங்குளிர்ந்து போற்றினர்.

திருநாவுக்கரசரைப் போல் திருக்குறளின்படி நடந்துகாட்டிய பெரியார் வேறு எவரும் இருந்ததில்லை. திருக்குறள் இலக்கணத்திற்குத் திருநாவுக்கரசர் ஒரு சிறந்த இலக்கியம் என்றே நாம் சொல்லிவிடலாம். திருக்குறளைத் திருநாவுக்கரசர் நன்கு பயின்றதோடல்லாமல் அதனிடத்தே பெருமதிப்புக்கொண்டிருந்ததால், தாம் பாடிய தெய்வ மணக்குஞ் செய்யுள்கள் பலவற்றிலும் பொருந்தும் விதத்திலே, திருக்குறளில் வந்துள்ள சொற்றொடர்களையும் அரிய கருத்துக்களையும், அழகுற ஆங்காங்கு அமைத்துப் போற்றியுள்ளார். அவர் பாடல்கள் சில திருக்குறளை விரித்து விளக்குவது போன்றிருக்கும்.

மேல்நாட்டு உடையணிந்து, உச்சியைப் பார்த்து நடந்து, முரட்டுத்தனமாய் எதற்கும் முந்திக்கொண்டு, தனக்கு மட்டுமே இவ்வுலகம் இருப்பதாகத் தலைதருக்கி, முன்னுலிருப்பவர் காலையும் சமட்டிவிட்டு, அதற்கு வருந்தாது வெறும் சீறலும், உறுமலும் தோற்றுவிப்பதே நாகரிகம் என்று கருதும் இந்நாளில், திருக்குறளைப் படிப்பதே அரிய காரியம். மேலும், அதன்படி நடப்பது என்பது மிகவும் அரிய காரியம். அப்படியே படித்தபடியே நடப்பதாய் இருந்தாலும், ஒரு குறளின் படி ஒருவராலும் நடக்கவே முடியாது. அது என்ன குறள்? இதோ வருகிறது பாருங்கள்!

"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்."

திருக்குறள் தோன்றிய காலத்திலிருந்து இதுவரையும் இந்தக் குறளின்படி ஒரே ஒருவர் தாம் நடந்து

காட்டியிருக்கிறுர் அவர் வேறு யாருமில்லை. திருநாவுக்கரசரேதாம்.

மனிதனை அமரனுக வாழச் செய்ய வேண்டு மென்பது திருவள்ளுவரின் ஆசை. அந்த நோக்கத் துடனேயே அவர் திருக்குறள் நூலை எழுதினுர் மனிதன் மக்கட்பண்புடனே உலகில் எப்படி வாழ வேண்டுமோ அப்படி வாழ்ந்துவிட்டால் அவன் தேவனேதான் என்பது வள்ளுவரின் நம்பிக்கை.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்."

என்ற அவர் வாக்காலேயே நாம் இதனை அறிய லாம். வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும் என்பதற்கு, வானேர்களோடு வாழ்வதற்காகத் தேவ லோகத்திற்கு எடுத்துச் செல்லப்படுவான் என்பது கருத்தன்று; வானேர்க்கு ஒத்த மதிப்புடையவனுய் இவ்வுலகிலேயே போற்றப்படுவான் என்பதாம். அப்படி வெறும் அமரனுகமட்டும் மனிதன் மாறினுல் போதாது. ஆதிசிவனைப் போன்ற ஆற்றலும் பண்பும் மனிதன் அடைந்துவிட வேண்டும் என்பது திருவள்ளுவரின் உயர்வுள்ளம். அதற்காக அரனுர் செய்த செயற்கரிய தொரு செயலை எடுத்துக் காட்டி, அதுவே நாகரிக மனிதனுடைய உன்னதக் குறிக்கோளாக இருக்க வேண்டும் என்று உரைத்தார்.

திருப்பாற்கடல் கடையப்பட்டபொழுது அமுதத் துடனே ஆலகாலவிடமும் பொங்கி எழுந்தது. அது மூன்று உலகங்களையுமே வாரி உண்டுவிடும் போலிருந்தது. தேவர்கள் எல்லாரும் அஞ்சியோடி அரனைத் தஞ்சமடைந்தனர். அனைத்துயிர்களும் உய்ய வேண்டிச் சிவபெருமான் சாவைத் தரும் நஞ்சை

அயின்று சாவாமருந்தாகிய அமுதத்தை அமரர்க்கு அளித்தார். அவர் இரங்கிய சிந்தையினால் அவ்வாறு செய்தார். அவ்விரக்கமாகிய கண்ணோட்டமே நாகரிகத்தின் சிகரம், நாகரிகத்தின் சின்னம், நாகரிகத்தின் வெற்றி எனக் கொண்டார் திருவள்ளுவர். சாவா மருந்தாகிய அமுதத்தை உண்டாலும் இறப்பு வருங்கால் இறந்தே தொலைந்தனர் தேவர்கள். பிழைத்தார்கள் இல்லை. ஆனால் சாவைக் கொடுக்கும் கொடிய நஞ்சை உண்டாலும் தாம் சாவாமல், என்றும் நிலையாக வீற்றிருந்து அமுதுண்ட அமரர்க்கும் எல்லோர்க்கும் அருள் புரிந்தார் சிவபெருமான். இதனை இளங்கோவடிகளும் சிலம்பில் எடுத்து இயம்பினார் :—

" விண்ணோர் அமுதுண்டுஞ் சாவ ஒருவரும்
உண்ணாத நஞ்சுண் டிருந்தருள் செய்குவாய்."

ஆகா! வேறு எந்தக் கடவுள்தான் இப்படி நஞ்சை உண்ண முடிந்தது? சிவபெருமான் ஒருவருக்குத்தான் அது கை வந்தது. இதனால் அவர் ஒருவரே ஒப்பற்ற ஒரு தனி முழுமுதற் கடவுள் என்பது நன்கு விளங்கவில்லையா? ஆதலால் அக்கடவுளுக்கே நாம் அடிமையாகித் தொண்டு செய்தல் வேண்டும் என்று பாடினார் திருநாவுக்கரசர் :—

" பொங்கி நின்றெழுந்த கடல் நஞ்சினைப்
பங்கி உண்டதோர் தெய்வமுண் டோசொலாய்
தொங்கி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்குத்
தங்கி நீபணி செய்மட நெஞ்சமே "

நாகரிகத்திற்கு இலக்கணம் வகுத்த திருக்குறளுக்கு இலக்கியம் போன்று அருள் உலகிலே சிவபெருமான் திகழ்கின்றார். அதற்கு இலக்கியமாக மண்ணுலகிலே சிவனடியாரும் தலையான மனிதருமாகிய திருநாவுக்கரசர் ஒருவரேதாம் காட்சியளிக்கின்றார். நீற்றறையிலே இறவாது பிழைத்துக்

கொண்ட திருநாவுக்கரசருக்குச் சமணர்கள் பாற் சோறுடன் நஞ்சைக் கலந்து கொடுத்தார்கள். சமணர் செய்த வஞ்சனை அப்பருக்கு நன்ருகத் தெரிந்தது. அப்பர் உடனே உண்ண மறுத்திருக்கலாம். ஆயினும் அவர் மறுத்தாரல்லர். அவருடைய நாகரிகம் வாய்ந்த உள்ளம் மறுக்க மறுத்துவிட்டது. பிறர் விரும்பிய ஒன்று தம் உயிருக்கே உலை வைப்பதாயிருந்தாலும், அதை மாட்டேன் என்று மறுத்து அவர் முகம் கோட்டமும் வாட்டமும் கொள்வதைக் காண அப்பர் மனம் நாட்டமுறவில்லை. சிவனை நம்பினவர்களுக்கு நஞ்சும் அமுதமாகும் என்று சொல்லி, மலர்ந்த முகத்துடன் இரு கையாலும் வாங்கி உண்டுவிட்டார் :—

" நஞ்சும் அமுதாம் எங்கள் நாதனடியார்க் கென்று
வஞ்ச மிந்த நெஞ்சுடையார் வஞ்சனையாம் படியறிந்தே
செஞ்சடையார் சீர்விளக்கும் திறலுடையார் தீவிடத்தால்
வெஞ்சமணர் இடுவித்த பாலடிசில் மிசைந்து இருந்தார்."

என்பது சேக்கிழார் திருவாக்கு. ஆகவே அப்பரடிகள் இன்னதென்று தெரியாது வாங்கி உண்டுவிடவில்லை. 'பெயக்கண்டும்'என்ற குறளின் சொற்பொருளுக்கேற்ப, விடமுட்டிய உணவு என்பதைத் தெரிந்தே விரும்பி ஏற்றுக்கொண்டார் நாகரிக அடிகளான நாவுக்கரசர். 'இருந்து அருள் செய்குவாய்' என்று இளங்கோவடிகள் கூறியதுபோல். சேக்கிழாரும் இங்கு 'மிசைந்து இருந் தார்' என்று கூறியது அறிதற்பாலதாம். நஞ்சை உண்டும் அப்பர் சாவாது பிழைத்திருந்தார். சிவ பெருமானுக்கு மூன்றுலகங்களையும் அழிக்கவல்ல ஆலகாலம் போன்ற கொடியவிடமே அமுதமாயிருந்த தென்ருல், அக்கடவுளின் அடியாராகிய அப்பருக்குச் சமணர் தந்த சாதாரண நஞ்சு அமுதமானது ஓர் ஆச்சரியமா? என்று நயம்படக் கூறினுர் சேக்கிழார் :—

"பொடியார்க்குந் திருமேனிப் புனிதர்க்குப் புவனங்கள்
முடிவாக்குந் துயர் நீங்க முன்னைவிடம் அமுதானல்
படியார்க்கும் அறிவரிய பசுபதியார் தம்முடைய
அடியார்க்கு நஞ்சமுதம் ஆவதுதான் அற்புதமோ."

மூன்றுலகங்களுக்கும் ஏற்பட்ட துயரைப் போக்குவதற்காக நாகரிக உள்ளத்தோடு சிவபெருமான் ஆலத்தை அருந்தினர். பல்லவ மன்னனின் ஆணைக்குக் கட்டுப்பட்டுத் தமக்கு நஞ்சைக் கொடுத்த ஏவலாளருக்குத் துயர் வராதிருக்கவும், சமணிருள் நீங்கவும் சிவனருள் ஓங்கவும் வேண்டி நாவுக்கரசர் நஞ்சை அருந்தினர் இது வரலாற்று உண்மையோ, அல்லது புராணப்புளுகோ என்று சிலர் ஐயம் கொள்ளலாம். சேக்கிழார் கூறும் இச்செய்திக்கு ஆதாரம் அகச்சான்ருக அப்பர் தேவாரத்திலேயே நமக்குக் கிடைக்கிறது நமச்சிவாய மந்திரத்தை ஓதி நஞ்சமும் அமுதாகும்படி தாம் உண்ட செய்தியை அப்பர் பின்வருமாறு பாடியுள்ளார் :—

"துஞ்சிருள் காலைமாலை தொடர்ச்சியை மறந்திராதே
அஞ்செழுத் தோதில் நாளும் அரனடிக் கன்பதாகும்
வஞ்சனை பாற்சோறுக்கி வழக்கிலா அமணர்தந்த
நஞ்சமு தாக்குவித்தார் நனிபள்ளி யடிகளாரே.'

இது உண்மையாயிருக்கலாம். ஆயினும் அப்பரடிகள் ஒருவர் தாம் இந்த நாகரிகக் குறளுக்கு இலக்கியம் என்று எப்படிச் சொல்ல முடியும்? மேலை நாட்டில் சிறந்த கிரேக்க அறிஞராய் விளங்கிய சாக்கிரடீசு என்பவர் தம் பகைவர் கொடுத்த நஞ்சினைத் தெரிந்துகொண்டே வாங்கி உண்டார். அவரையும் நாகரிகராகக் கொள்ளலாம். அவரை ஏன் சொல்லக் கூடாது? என்று கேட்கலாம். உண்மையே, அவரும் நாகரிகம் வாய்ந்தவர் தாம். ஆயினும் இந்த நாகரிகக் குறளுக்கு அவர் சிறந்த இலக்கியமாகமாட்டார். சாக்கிரடீசு நஞ்சை உண்டதும் இறந்து போனர்.

உயிர் பிழைக்கவில்லை. திருவள்ளுவர் 'நஞ்சு உண்டு அமைவர்' என்று கூறினர். 'நஞ்சு உண்டு அழிவர்' என்று கூறவில்லை. அமைவர் என்றது, நஞ்சு பெய்தவரோடு பொருந்தி (மேவி) இருத்தலைக் குறிக்கும். அதற்கு உயிர் பொருந்தி (மேவி) இருத்தல் வேண்டும். நாவுக்கரசர் நஞ்சு உண்டு இறவாது அமைவதானர். இதனல் நாவுக்கரசரின் நனி நாகரிகம் நன்கு புலனுகும்.

நாகரிகம் என்பதற்குக் கண்ணேட்டம் என்று பொருள் கூறினர் பரிமேலழகர். வெறும் கண்ணேட்டம் மட்டும் ஒருவனை நாகரிகமுடையவனகச் செய்துவிட முடியாது என்பது மணக்குடவர் துணிபு. ஆதலால், அறம் பொருள் இன்பத்தின்கண் நற்குணங்கள் பலவும் உடைமையே நாகரிகம் என்று அவர் கொண்டார். காரியத்தினுல் சுவர்க்கம் வேண்டுதலும் இந்தப் பூமி வேண்டுதலும் நாகரிகமாகும் என்பது பரிதியார் கண்டது. பெரியோரால் விரும்பத் தக்க உம்பர் உலகினுள் சிறப்புடைய உத்தரகுருவினைத் தாம் எய்தி இனிது வாழ்ந்திருக்க வேண்டுதலே நாகரிகம் என்பது காளிங்கருடைய சித்தாந்தம். புகழ் வேண்டத்தக்க செயல்களைச் செய்து கண்ணேட்டமும் கொள்ளுதலே நாகரிகம் என்பர் பரிப்பெருமாள். இவ்வாறு பலரும் பலவிதமாகக் கூறுவதிலிருந்து நாம் தெரிவது யாதெனில், பிறருடைய மனதை எந்தவிதத்திலும் வருந்தும்படி செய்யாமல் இளகிய மனத்தராய் நாம் நடந்து இன்பம் காண முயலுதலே நாகரிகம் என்பதாம்.

ஆயினும், நமக்கு வேண்டியவராவார் நஞ்சைக் கொடுத்துக் குடியென்ருலும் மறுக்காது அதனைக் குடித்தலே நாகரிகம் என்று திருவள்ளுவர் சொன்னுரே, உண்மையில் அவர் அவ்வாறு கருதியிருப்பாரா? அவ்வாறு அவர் கருதியிருக்க முடியாது. நஞ்சைக்

குடித்தால் சாவது திண்ணம். சாக வேண்டும் என்பது திருவள்ளுவர் கருத்தாயிருக்க முடியாது. மனிதன் வாழ்வதற்கு அவர் வழிகாட்டியேயொழிய மரணப் பாதைக்கு அவர் வழிகாட்டியல்ல. பின் ஏன் அவர் இவ்வாறு திருக்குறள் வகுத்தார்? பிறர் தமக்குச் செய்யும் தீமை நஞ்சுபோற் கொடிதாயிருந்தாலும், அதற்கும் உடன்படுவர் புகழ் வேண்டுபவர் என்பதே அக்குறளின் உண்மைக் கருத்தாகும். தீமையின் கொடுமைக்கு ஓர் உயர்வெல்லையாக நஞ்சு பெய்தலை எடுத்துக் கூறினரேயல்லது வேறில்லை. பொறுமையின் எல்லையும் கண்ணோட்டத்தின் அளவும் அதற்குமேற் போக முடியாதாதலால் அவ்வாறு கூறினர் எனலே பொருந்துவதாகும். செயக்கண்டும் நஞ்சுபோல் தீமைகளையும் சகித்துக்கொள்வர் என்றே நாம் கொள்ளுதல் முடியும். ஆகவே சாதாரண மக்கள் அக்குறளின் உட்கருத்தை அறிந்து அதன்படி நடக்க முயலலாமேயன்றி, எழுத்துக்கெழுத்து உண்மையாக அதன்படி நடத்தல் இயலாததொன்று. ஆனால் திருநாவுக்கரசர் அதன் உட்கருத்துக்கும் அப்பாற் சென்று, எழுத்துக் கெழுத்தும் உண்மையாக ஒழுகி, நஞ்சைத் தின்றும் சாவை வென்றும் நடந்துகாட்டி விட்டார் என்றே சொல்லலாம்.

நஞ்சை அருந்தியும் அவர் உயிர் விடவில்லை. யாவரும் அஞ்சக்கூடிய ஒரு காரியத்தை அவர் மிக எளிதாகச் செய்து காட்டினர். அவ்வாறு நடந்து காட்டுதல் திருநாவுக்கரசருக்கு எவ்வாறு முடிந்தது? அது அவருடைய எண்ணில் தவத்தால் தலைக்கூடிற்று. இதனுல் அல்லவோ திருவள்ளுவரும்,

"தவம்செய்வார் தங்கருமம் செய்வார்மற் றல்லார்
அவம்செய்வார் ஆசையுட் பட்டு."

என்று கூறியுள்ளார். உடலின் வருத்தத்திற்காக வருந்தி, உயிராகிய தன்னலம் பேணுதலை மறந்து தவம் செய்வதைத் தளரவிடக் கூடாது. இவ்வுடல் அநித்தமானது. தன்னைப்பற்றி வருவனவும் பிறவுயிர்களைப்பற்றி வருவனவும் தெய்வத்தைப்பற்றி வருவனவுமாய மூவகைப் பிறவித் துன்பங்களையுடையது. உயிரின் வேருயது. இத்தகைய உடலை நிலையாக எண்ணி நிலையான தன்னை மறந்துவிடாது தவம் செய்தால், பிறப்புப்பிணி மூப்பு இறப்புக்களான் அநாதியாகத் துன்பமெய்தி வருகின்ற உயிர் ஞானம் பிறந்து வீடுபெறும். ஆதலால் தவம் செய்வாரைத் தம் கருமம் செய்வார் என்றும், கணத்தின் அழிவதாய சிற்றின்பத்தின் பொருட்டுப் பல பிறவியும் துன்புறத் தக்க பாவம் செய்து கோடலின், அல்லாதாரை அவம் செய்வார் என்றும் கூறினர். சிவனை மறந்து அவமாகத் தாம் கழித்த நாட்களுக்கு வருந்தி அப்பரடிகள் இத் திருக்குறளை மனதிற் கொண்டு பாடியிருத்தலும் நோக்கத்தக்கது :-

> "ஒட்டாத வாளவுணர் புரமூன்றும் ஓரம்பின் வாயின் விழக்
> கட்டானைக் காமனையுங் காலனையுங் கண்ணினொடு காலின் விழ
> அட்டானை யாரூரில் அம்மானை ஆர்வச் செற்றக் குரோதம்
> தட்டானைச் சாராதே தவம் இருக்க அவம்செய்து தருக்கி னேனே."

மனிதனுய்ப் பிறந்தவன் இவ்வுலகத்திலே செய்யத் தக்கது தவத்தைத் தவிர வேறில்லை. உற்றநோய் நோன்றலும் மற்ற உயிர்க்கு உறுகண்செய்யாமையுமே தவத்திற்கு உருவாவது என்று திட்ப நுட்பமாகக் கூறினர் திருவள்ளுவர். ஆகவே தவம் என்னப்படுவது மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயில் நிலைநிற்றலும், மாரியினும் பனியிலும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்ருல் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்துப்

பிற உயிர்களைப் பேணுதல் ஆகும். இதற்கு மாறாக, வெயிற் காலத்தில் நீர் நிழலையும் மலைவாசத்தையும் தேடிச்சென்று, பனிக்கட்டிப் பானங்களில் பற்றுக் கொள்ளுதலும், குளிர் மழைக் காலங்களில் மயிர்க் கம்பளங்களை மாட்டிக் கொள்ளுதலும் சூட்டை விரும்புதலும் தவநெறிக்குப் புறம்பாய அவநெறி யாகும். திருநாவுக்கரசருடைய தவம் தலைசிறந்தது. அவருடைய பரிபக்குவ நிலையும் தவத்தின் சீலமும் மனத்தூய்மையின் மாண்பும் மதிப்பிடற்கரியன. அவருடைய திருத்தொண்டின் உயர்வையும் தவத்தின் தன்மையையும், முனிவராம் முதன்மையையும் சேக்கிழார் வாயாரப் புகழ்ந்து துதிக்கின்றார் :-

"திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டின் நெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவ லுறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குரைசெய்ய வொண்ணுமை யுணராதேன்."

நில்லாத உலகியல்பு கண்டு நிலையா வாழ்க்கை அல்லேன் என்று அறத்துறந்த பெரியார் திருநாவுக் கரசர். உலக வாழ்வின் பற்றுக்களை வெற்றிகரமாகச் செற்றுக்களைந்த செம்மையாளர். பொறிவாயில் ஐந்தினையும் அவித்தொழித்த தவச்செல்வர். திருவள்ளுவர் கூறினர் :-

"அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு."

ஐம்பொறிகளின் வழியாகப் பொருள்களை நுகர்தலைப் புலம் என்றார். இவ்வைம்பொறிகளே மனிதனுக்குத் தள்ளரிய பகைகளாய் உள்ளன. இவ்வைந்தும் மனத்தைத் துன்பத்தானும் பாவத் தானும் அன்றி வாராத பொருள்கள் மேலல்லது வீட்டு நெறியாகிய யோக ஞானங்களில் செலுத்தாமையின் அவற்றை அடல் வேண்டும் என்றும், அவை

அப்பொருள்கள் மேல் செல்லின் அநுகர்ச்சி விறகு பெற்ற தழல்போல் முறுகுவதல்லது ஒடுக்கப் படாமையின் வேண்டிய எல்லாம் ஒருங்கு விடல் வேண்டும் என்றும் கூறினர். இறைவனை நினைக்கவும் ஒட்டாத பொறிபுலன்களைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பதை அப்பர் எவ்வாறு பாடுகிருர் பாருங்கள் :-

"பொறிப்பு லன்களைப் போக்கறுத் துள்ளத்தை
நெறிப்ப டுத்து நினைந்தவர் சிந்தையுள்
அறிப்பு றும்மமு தாயவன் ஏகம்பம்
குறிப்பி னுற்சென்று கூடித் தொழுதுமே."

உள்ளத்தை நெறிப்படுத்துவதற்குப் பொறிப் புலன்களைப் போக்கறுத்தல் வேண்டும். ஐந்து பொறி களும் ஐந்து மதம்கொண்ட யானைகள். அவை மனதைப்பற்றி இழுத்துக்கொண்டு தத்தம் புலன்களின் மேலேயே சென்று கொண்டிருக்கும். அசையாத அறிவின் ஆண்மையே அந்த யானைகளை அடக்கும் அங்குசம். அதுவே மனவுறுதியுமாகும். அவ்வியானை களை எவன் அடக்குகிருனே அவனே முத்தியென்கிற முடிந்த நிலத்திற்கு முதற் காரணனுவான்.

"உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து."

என்பது திருக்குறள்.

அவ்வாறு ஐம்பொறிகளை வென்றவர் திருநாவுக் கரசர். அவர் இவ்வுலகிலேயே அமரராக வாழ்ந்தார். வீட்டுநிலத்திற்கு ஒருவித்தாக இப்பூமியில் முளைத்தார். அறிவாகிய அங்குசத்தாலே பொறியாகிய யானை ஐந்தினையும் புலன்களிற்செல்லாமல் மீட்ட பெருமையை யுடையவர் திருநாவுக்கரசர். மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் இந்தப் பஞ்சேந்திரியங்களின் வஞ்சகச் சேட்டையும் அதிகாரமுமே இந்த உலகில் மேலோங்கி மிக்குத் தோன்றியுள்ளன. மேலோர் முதல் கீழோர்

வரை அனைவோரும் இந்தப் பொறிகளின் நெறிவழிப் பட்டு அறிவழிந்து அல்லலுக்கு ஆளாகிறுர்கள்.

மக்களை மாக்களாக வாழச்செய்வன இவ்வைம் பொறிகளுமேயாகும். உயிர்களை நல்லவழியே செல்ல வொட்டாமல் அல்வழியே இழுத்துச் செலுத்திப் பேயாட்டம் ஆடுகின்றன பஞ்சேந்திரியங்கள். இவ்விந்திரிய மயக்கிஞலே உயிர்கள் தம் கடமையை மறந்து வேண்டாதவற்றைக் கட்டிக்கொண்டு வாழ்க்கையைப் பாழாக்கி வருகின்றன. இவற்றை வென்றவர் திருநாவுக்கரசர். பஞ்சேந்திரியங்களோடும் போர்புரிந்து அவற்றை மடக்கிப் புறமுதுகிட்டு ஓடும்படி செய்த சிவஞானச் செல்வர் திருநாவுக்கரசர். அப்படி அவற்றை வென்று விரட்டியடித்துங்கூட, அவை அவரைச் சும்மா விடுவதில்லை. இடையிடையே அவை திரும்பிவந்து அவர் முன் நின்றுகொண்டு பெருங்கூச்சலிட்டு ஆரவார முழக்கம் செய்யும். அவர் ஒருநாளாவது சோர்ந்து தம் வலையில் சிக்கிவிழ மாட்டாரா என்று ஏங்கி நிற்கும். அப்பொழுது அப்பரடிகள் அவற்றை வெகுண்டடர்த்து விரட்டியடிப்பார். எப்படி?

“முள்வாய தொழிற்பஞ்சேந் திரிய வஞ்ச
முகரிகாள் முழுதுமிவ் வுலகை யோடி
நாள்வாய நும்முடைய மம்ம ராணை
நடாத்துகின்றீர்க் கமையாதே யானேல் வானோர்
நீள்வான முகடதனைத் தாங்கி நின்ற
நெடுந்தாணைப் பாதாளக் கருவை ஆரூர்
ஆள்வானைக் கடுகச்சென் றடைவேன் நும்மால்
ஆட்டுணேன் ஓட்டந்தீங் கலையேன் மின்னே.”

முகரி – ஆரவாரம் செய்வோன்; மம்மர் - மயக்கம், துக்கம்.

இவ்வைம்பொறிகளும் இவ்வுலகில் உயிர்களை எவ்வாறு ஆட்டி வைக்கின்றன தெரியுமா? இந்திய

நாட்டு வரலாற்றைப் படித்தவர்கள் தக்கர்களைப்பற்றித் தெரிந்திருப்பார்கள். ஆறலைக்கும் கள்ளக் கூட்டத்தார் இத்தக்கர்கள். ஆறலை கள்வரை நினைத்தவுடனே அடி வயிறு பக் என்னும். ஆறலைத்துச் சூறைகொள்ளுதல் பல்லாயிரம் ஆண்டுகளாக நம்நாட்டில் பயின்று வந்திருக்கிறது. புகைவண்டிப் பிரயாணம் தோன்றிய பின்னர் வழிப்பறி அவ்வளவாகப் பழக்கத்தில் இல்லை. இருந்தாலும், இங்கொன்றும் அங்கொன்றுமாய் இக்காலத்திலும் நடந்துகொண்டுதானிருக்கிறது. தனிவழி ·செல்லும் வழிப் போக்கர்களைத் தடுத்து நிறுத்தி, அவர்களிடமுள்ள காசுபணங்களைத் தட்டிப் பறிப்பதுதான் ஆறலைத்தல் எனப்படும். ஆறு என்றால் வழி; அலைத்தல் என்றால் துன்புறுத்தல். தனி வழியிலும் காட்டு வழியிலும் துணையின்றிச் செல்லும் வழிப்போக்கர்களை முரடர்கள் பலர் சூழ்ந்துகொண்டு துன்புறுத்தினால் அவரால் என்ன செய்ய முடியும்? காட்டு வழியிலே கள்ளர் இட்டதுதான் சட்டம்.

எங்கணும் இருள் கவிந்து கிடந்தது. இரவு நேரம். கரடு முரடான காட்டுப்பாதை. தனியே சென்று கொண்டிருந்தார் திருநாவுக்கரசர். அக்கம்பக்கத்தில் யாதொரு துணையும் கிடையாது. ஐந்து வேடர்கள் அவரைக் கிட்டிச் சூழ்ந்து கொண்டனர். அவரை இழுத்து வளைத்து முரட்டுத்தனமாய்ப் பேசத் தொடங்கினர். அவர்கள் கையிலே கொலையாயுதங்கள் மின்னிக் கொண்டிருந்தன. திருநாவுக்கரசரை நல்ல வழியிலே முன்னேறிச் செல்ல விட்டார்களில்லை. அவர்கள் பண்ணின அட்டகாசம் மட்டுக்கடங்காது. அவர்கள் அடங்காது துள்ளிக்குதித்துத் துயரம் விளைத்தனர். திருநாவுக்கரசரை நல்லவழியிலே செல்ல வொட்டாது குறுக்குமறுக்குமாய்ச் செலவிட்டுத் துன்புறுத்தினர். அவரிடமிருந்த பெறுதற்கரிய இன்பப்

பொருளைக் கொட்டிக் கவிழ்த்துக் கொள்ளையடித்தனர். அவ்வைந்து வேடர்களின் குதியாட்டங்களைக் கண்டு நாவரசர் நைந்து வருந்தினர். அத்தனி வழியிலே உற்ற துணையாவார் ஒருவருமில்லை. ஆண்டவன் ஒருவனைத் தவிர வேறு யார்தான் அங்கு ஆதரவு அளிக்க முடியும்? நமது உலகில் சட்ட திட்டங்களும், அரசாங்கப் பாதுகாவலும், அரசியல் தந்திரங்களும், அருமை பெருமையாய் நாம் போற்றிவரும் உரிமைகளும் ஆறலைகள்வரிடத்தில் அதிகாரம் காட்ட முடியுமா? திருநாவுக்கரசர் செய்வதின்னதென்றறியாது திகைத்தார். மூன்று கண்ணுடைய மூர்த்தியான முழுமுதற் கடவுளின் திருவடிகளிலே சரண் புகுந்தார். உரனென்னும்படியான அசையாத அறிவின் திட்பத்தைக்கொண்டு அந்த வேடர்களை வென்றார். அவ்வாறே பிறரும் வெற்றியெய்தலாம் என்பதை யெடுத்து மன்பதை யுலகிற்கு விளக்கினர் :-

> "புள்ளுவர் ஐவர் கள்வர் புனத்திடைப் புகுந்து நின்று
> துள்ளுவர் சூறை கொள்வர் தூநெறி விளையவொட்டார்
> முள்ளுடை யவர்கள் தம்மை முக்கணன் பாத நீழல்
> உள்ளிடை மறைந்து நின்றங் குணர்வினல் எய்யலாமே."

இப்பாடலின் சொல்லும் பொருளும் சிவஞான போதத்தின் எட்டாவது சூத்திரமாக மிளிர்ந்துள்ளதென்றால் இதன் சிறப்பை வேறு எங்ஙனம் எடுத்து இயம்புதல் கூடும். வஞ்சக வேட்டைத் தொழில் புரியும் பாலைநில மாக்களாகிய கீழ்மைத் தொழில் புரிவோர் புள்ளுவர் எனப்படுவர். இங்கே புள்ளுவர் ஐவர் கள்வர் என்றது ஐம்புல வேடர்களை. இந்த ஐம்புல வேடர்களின் சேட்டையாலே ஆட்டம் ஆடிக் களியாதவர்கள் உலகத்தில் யாருமில்லை. தூய்மையான ஒழுக்க நெறியிலே செல்லவொட்டாது தடுத்து ஆறலைக்கும் தொழிலுடையனவாதலின் ஐம்புலன்களும் புள்ளுவர் எனப்பட்டன. அவை உயிருக்குள் அடங்காது

நிற்றலால் துள்ளுவர் என்றும், உயிரை உலக விடயங்களின் ஈர்த்துச் செல்லுதலால் சூறைகொள்வர் என்றும் கூறினர். சிற்றின்பத்தைத் தரும் மல அழுக்கு விரவிய உலக நெறியினின்றும் வேறுபட்டு, சிவமே மெய்ப்பொருள் எனத் துணிந்து அப்பொருளை அடையச் செல்லும் பேரின்ப வீட்டு நெறியினைத் தூநெறி என்ருர். வீட்டுநெறியிலொழுகும் மாந்தராகிய வழிப்போக்கரிடம் மறித்து எதிர்த்துக் குதித்து அவர்களுடைய மெய்யறிவு ஆகிய பொருளை அழித்து விடுதலின் சூறைகொள்வர் என்ருர். சிவபெருமானுடைய திருவடி நீழலாகிய அருள் வியாபகத்துள் அடங்கி நின்ருல் அல்லாமல் வீட்டு நெறியிலொழுகும் மாந்தர்கள் உலகப்பற்றுக்களை ஒழித்து மெய்யுணர்வை அடைதல் முடியாது. ஆகையால், முக்கணன் பாத நீழலுள்ளிடை மறைந்து நின்று உணர்விஞல் எய்யலாமே என்ருர். இதனையுட்கொண்டு கூறியது போலவே, மெய்கண்டாரும்,

"ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்டு
அன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே."

என்ருர். ஆசைவன் பாசமெய்தி அங்குமிங்கும் அலைந்துற்று ஊசலாட்டுண்டு வாளா உழந்து உழி தருகின்ற உயிரினிடத்தே இறைவன் திருவருளோடுங் கூடிய குருவடிவத்திலே வந்து காட்டிய பின்னரே, தன்னை இந்திரியத்தின் வேருவான் கண்டு அவ்வுயிர் இறைவன் சீபாதத்தையடையும். ஒருவன் ஏறியிருந்தாடுதற்கு ஆதாரமான ஊசல் கயிறற்றதாயின் அவனுக்கு உற்றுழியுதவுந் தாய்போல ஆண்டுத்தாரகமாவது நிலனேயன்றிப் பிறிதில்லாததுபோல் ஐம்புலன்களின் கட்டை அறுத்துக்கொண்ட உயிர் தடையின்றி இறைவன் திருவடிகளை எய்தும் என்று கூறி "ஊசல்

கயிறற்றுற்றுய் தரையேயாந் துணையான்" என்று எடுத்துக் காட்டியது சிவஞான போதம். இதனையே அப்பரும் கூறுகிறுர் :—

"உறுகயி றூசல் போல வொன்றுவிட் டொன்று பற்றி
மறுகயி றூசல் போல வந்துவந் துலவு நெஞ்சம்
பெறுகயி றூசல் போலப் பிறைபுல்கு சடையாய் பாதத்
தறுகயி றூச லானேன் அதிகை வீரட்ட னீரே."

வாய், கண், மெய், காது, மூக்கு என்பவை ஐம்பொறிகள். இவற்றின் மூலம் முறையே சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பவை தோன்றும். இவை புலன்கள். பொறிவழிவரும் இவற்றின் காரணங்களைத் தன்மாத்திரைகள் என்பர். இவை ஐந்தனது கூறுபாட்டையும் உள்ளபடி ஆராய்ந்து, அப்புலன்கள் வழியே மனம்போகாமற் காத்துக்கொள்பவர்களையே உலகத்து உயர்ந்தோர் எல்லாரும் சார்ந்து நிற்பர். சுவை முதலாகக் கூறிய ஐந்து புலன்களின் வகையை ஆராய்ந்து தெரிவான் கண்ணதே உலகம் என்று கூறினுர் திருவள்ளுவர் :—

"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகை தெரிவான் கட்டே யுலகு."

இக்குறளுக்குக் கவிராஜபண்டிதர் என்பார் எழுதிய விளக்கம் வருமாறு. "ஐந்தின் வகை தெரிதலாவது-ஐம்பொறிகளினுல் அறியப்படும் பொருள்களுள் எவ்வெவற்றை விடவேண்டும், எவ்வெவற்றைக் கொள்ள வேண்டும் என்று அறிதலாம். இதைப் பரமாகமம் அறிந்தார் ஹேயோபாதேய விஷயம் என்பர். ஹேயோபாதேயங்களை ஒழுக்கத்தின் மூலம் விளக்கிக் காட்டியுள்ளார். இவ்வாறு ஐம்புலன்களின் வசனந் தெரிந்து ஒழுகுதல் நீத்தாரின் பெருமை என்பது புலப்படும். இக்குறளிற்குப் பரிமேலழகர் சாங்கிய தத்துவத்தை விரித்துக் கூறியுள்ளார். அவர் கூறுவது குறளாசிரியன் கருத்தாதல் அரிது."

சாங்கிய நூலுட் கண்டவாறு தத்துவ வகை களையும் அவற்றை ஆராயும் முறையையும் பரிமேலழகர் கீழ்க்கண்டவாறு விரித்துக்கூறியுள்ளார். "தன் மாத்திரைகள் ஐந்தனது கூறுபாடாவன—பூதங் கட்கு முதலாகிய அவைதாம் ஐந்தும், அவற்றின் கட்டோன்றிய அப்பூதங்களைந்தும், அவற்றின் கூறுகிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரி யங்கள் ஐந்தும் ஆக இருபதுமாம். 'வகை தெரிவான் கட்டு' என உடம்பொடு புணர்த்ததனுல் தெரிகின்ற புருடனும், அவன் தெரிதற் கருவியாகிய மான் அகங்கார மனங்களும், அவற்றிற்கு முதலாகிய மூலப் பகுதியும் பெற்றும். தத்துவம் இருபத்தைந்தையும் தெரிதலாவது—மூலப்பகுதி ஒன்றில் தோன்றியது அன்மையின் பகுதியே யாவதல்லது விகுதியாகா தெனவும், அதன்கண் தோன்றிய மானும், அதன்கண் தோன்றிய அகங்காரமும், அதன்கண் தோன்றிய தன்மாத்திரைகளும் ஆகிய ஏழும் தத்தமக்கு முதலா யதனை நோக்க விகுதியாதலும், தங்கண் தோன்றுவன வற்றை நோக்கப் பகுதியாதலும் உடைய எனவும், அவற்றின்கண் தோன்றிய மனமும், ஞானேந்திரியங் களும், கன்மேந்திரியங்களும், பூதங்களும் ஆகிய பதினாறும் தங்கண் தோன்றுவன இன்மையின் விகுதியே யாவதல்லது பகுதியாகா எனவும், புருடன் தான் ஒன்றில் தோன்றாமையானும் தன்கண் தோன்றுவன இன்மையானும் இரண்டும் அல்லன் எனவும் சாங்கிய நூலுள் ஓதியவாற்றான் ஆராய்தல். இவ்விருபத்தைந்து மல்லது உலகு எனப்பிறிதொன் றில்லை என உலகினது உண்மை அறிதலின், அவன் அறிவின் கண்ணதாயிற்று." இவ்வாறு தத்துவ விசாரணை செய்பவன் உலகின் உண்மை இயல்பினையும்

அதன் நிலையாமையையும் உணர்ந்துவிட்டு, நிலைபேறுடைய வீட்டின்பத்தில் தலைப்படுவன் என்பதுபெற்றும்.

சுவை முதலிய புலன்களால் வரும் இன்பம் சிற்றின்பம், வெற்றின்பம். அது முதலில் இன்பம் போலவே தோன்றிப் பின் தொலையாத துன்பமாகவே மாறிவிடும். ஆனால் இப்புலன்கள் தாம் தரும் சிற்றின்பத்திலே உலகம் முழுவதையுமே சிக்க வைத்துள்ளன உலகமக்கள் இப்புலன்கள் மொண்டு தரும் இன்பத்தையே பெரிதெனநாடி, நெறியல்லா நெறிகளில் ஓடியுழல்கின்றனர். இப்புலன்கள் உயிர்களை அருள் நெறியினின்றும் அகற்றிச் சென்று, இருள் நெறியிலே இழுத்துவிட்டு, மருள் நெறியில் மயங்க விட்டு, பொருள் ஈட்டுவதிற் புகுதவிட்டு, ஆசையை வளர்த்து அல்லலுக்கு ஆளாக்குகின்றன. இப்புலன் களின் மாய வலையினின்றும் தப்ப முடியாமல் உலகம் தத்தளித்துக் கிடக்கிறது. இவற்றினின்றும் தம்மை மீட்டுக் கொண்டவர்கள் தத்துவங்களை யெல்லாம் தாண்டிச் சென்றவர்கள் ஆவார்கள். அவர்களின் சொல்லுக்கு உலகம் கட்டுப்பட்டு நிற்கும்.

அப்பர் அடிகள் இச்சுவை முதலிய ஐம்புலன்களின் வகை தெரிந்த வன்மையாளர். அதனால் அவர் தமக்கு வந்த இடுக்கண்களை எல்லாம் எளிதில் வென்றார். பகைத்து நின்ற பல்லவப் பேரரசனும் அவர் வயப்பட்டு நன்னெறியை உணரலானான். 'வகை தெரிவான் கட்டே உலகு' என்ற வள்ளுவரின் வாக்கு அப்பரிடத்தில் நூற்றுக்கு நூறு உண்மையானதை நாம் விளங்கக் காண்கிறோம். இவ்வைம்புலன்களும் அப்பர் இடத்தில் அடிக்கடி சென்று தம் மோக வலையை வீசித்தான் பார்த்தன. அவர் மயங்கவில்லை. அவற்றின் வகையை நன்கு தெரிந்து பாடுகிறார் பாருங்கள் :-

"உன்னுருவிற் சுவையொளியூ றோசை நாற்றத்
துறுப்பினது குறிப்பாகு மைவீர் நுங்கள்
மன்னுருவத் தியற்கைகளால் வைப்பீர்க் கையோ
வையகமே போதாதே யானேல் வானோர்
பொன்னுருவைத் தென்னாரூர் மன்னு குன்றைப்
புவிக்கெழிலாஞ் சிவக்கொழுந்தைப் புகுந்தென்சிந்தை
தன்னுருவைத் தந்தவனை யெந்தை தன்னைத்
தலைப்படுவேன் துலைப்படுப்பான் தருக்கேன் மின்னே."

திருக்குறளடியை மனதிலே நினைத்து அப்பர் அப்படியே தம் அருமைப் பாடலில் அழகுறப் பொறித்து வைத்துப் பாடியிருப்பதை ஈண்டுக் காணலாம். இவ்வாறு புலன் களிற்செல்கின்ற அவா ஐந்தினையும் அடக்கி ஆண்டவர் அப்பர் அடிகள்,

அப்பர் அடிகளையே இவ்வாறு வந்து துன்புறுத்திய ஐம்புலன்கள் ஏனையோர்களைச் சும்மாவா விட்டுவைக்கும்? ஒவ்வொரு விநாடியும் அதன் போர்ப்படைகளுக்கு மனிதன் இலக்காகி வீழ்கிறான். அவற்றை எதிர்த்துப் போராடி வெல்வது எளிதல்ல. கடுந்தவம் புரிந்தல்லது அவற்றை வெல்ல முடியாது. அவற்றை ஒழிக்க ஒழிக்க அவை ஒழியாது மேன்மேலும் அடர்ந்துவந்து நம்மை முற்றுகையிடும். ஆகையால் அவை தலை தூக்காதபடி சுட்டு அவித்துத் தொலைக்க வேண்டும். அதற்கு இறைவனுடைய திருவருளும் நமக்குத் துணைபுரிய வேண்டும். அதற்கு அத்திருவருளை நாடிச் சுந்தரர் பாடிய தேவாரமும் உண்டு:—

"கறிமாமிளகும் மிகுவன் மரமும்
மிகவுந்திவருந் நிவவின்கரைமேல்
நெறிவார்குழலா ரவர்காணநடஞ்செய்
நெல்வாயிலரத் துறை நின்மலனே
வறிதேநிலையா தவிம்மண் ணுலகின்
னரருகவுத் தணநானிலையேன்
பொறிவாயிலிவ்வைந் தினையும்மவியப்
பொருதுன்னடியே புகுஞ்சூழல்சொல்லே."

இப்பாடலின் ஈற்றடியில் ஒரு திருக்குறள் தலை நீட்டி நிற்பதை நாம் காணலாம். அது வருமாறு:—

''ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி.''

இங்கு நீத்தார் பெருமையையும் வலிமையையும் கூறும் இடத்துத் திருவள்ளுவர், கௌதம முனிவர் அகலிகையின் பொருட்டு இந்திரனைச் சபித்த புராணக் கதையை உதாரணம் காட்டினர். இந்திரன் தான் ஐந்தவியாது சாபமெய்தி நின்று அவித்தானது ஆற்றல் உணர்த்திநுதுகலின் சான்றுனுன். அதைவிடச் சிறப்பாக, ஐந்தவித்தான் ஆற்றலுக்குத் திருநாவுக்கரசர் மீது யானையை ஏவிய கொடியார்கள் சிறந்த சான்றுவர். அப்பர் மேல் ஏவப்பட்ட கொலைக் களிறு அப்பரைக் கண்டதும் சுற்றி வலம்வந்து வணங்கிவிட்டுத் திரும்பியது. சமணர்கள் மீண்டும் அதனை விரட்டி அப்பர் மேல் ஏவத் தொடங்கினர். ஆற்றுது வெஞ்சினம் கொண்ட அக்களிறு பாகனையும் கூடவந்த அமணர்களையும் காலால் இடறி மிதித் தழித்துப் பல்லவனது தலைநகரையும் பதங்குலையச் செய்துவிட்டது. அப்பர் சபிக்காமலே இந்நிகழ்ச்சி நடந்தது பன்மடங்கு சிறப்புடையதாகும். ஐந்தவித்து நின்ற அப்பரின் ஆற்றலுக்கு இது ஒன்றே போதிய சான்றுகும்.

அப்பர் அடிகள் தமது உயிரைத் தமக்கு உரித்தாகச் செய்து கொண்டவர். அத்தகைய மனிதர்களை அவ்வாறு செய்ய இயலாத ஏனை உயிர்களெல்லாம் கைகூப்பித் தொழுவது திண்ணம். இதனை,

''தன்னுயிர் தானறப் பெற்றுனை ஏனைய
மன்னுயிர் எல்லாம் தொழும்.''

என்ற திருக்குறளால் அறியலாம். 'தன்னுயிரைத்தான் அறப்பெறுதலாவது, தன்னோடு கூடிய கருமங்களை வென்று தன்னுடைய சுத்த சுபாவ குணத்தை யடைந்து பரிசுத்த ஆத்மஞகிற நிலையைப் பெறுதல்;

அத்தகைய ஆத்மனே பரமாத்மன் என்றும், கடவுள் என்றும், அருகன் என்றும் மூவுலகத்தோராலும் போற்றப்படும்' என்றும் விளக்கினுர் கவிராஜபண்டிதர். திருநாவுக்கரசர் சித்தம் சிவமாக்கப் பெற்றவர். "புகுந்தென் சிந்தை தன்னுருவைத் தந்தவனை" என்று அவரே பாடியுள்ளார். அப்பூதியடிகள் திருநாவுக்கரசரையே பூசித்து வழிபட்டு முத்தியடைந்ததும் அதனுல் என்க.

தன் உயிரானது தான் என்று கருதுங்கருத்து அறப்பெற்றவன் எண்புழி, உயிர் என்றது சலிப்பற்ற அறிவை, தான் என்றது சீவனுகி நிற்கின்ற நிலைமையை; தான் அறுதலாவது அகங்காரம் அறுதல். தன் உயிரையே ஈடேற்றமுடியாதவன் ஏனை உயிர்களை எவ்வாறு ஈடேற்ற முடியும்? ஆதலால் தன் ஆன்மா ஈடேறப்பார்ப்பானை, 'இவனுலே நாமும் ஈடேறுவோம்' என்று எல்லா ஆன்மாக்களும் கைதொழும் அல்லவா? எனவே, தன் உயிரைத்தான் அறப்பெறுதல் என்பது தன் நெஞ்சினைத்தான் முற்றிலும் தனதாக்கிக் கொள்ளுதல். தன் மனம் தன்னை இழுத்துச் செல்லாதவாறு கட்டுப் படுத்தித் தான் அதை இழுத்துத் தன் வசமாக்கிக் கொள்பவன் எவனே, அவனே உண்மையான தவம் செய்து கடவுளைக் கண்டவன் ஆவான். இவ்வாறு தமது நெஞ்சை வசப்படுத்தித் தமதாக்கி, அதில் இறைவனைக் கண்டு இன்பம் கொண்டவர் திருநாவுக் கரசர். அதனுல் எல்லா உயிரும் அவரை என்றென் றைக்கும் தொழுது எளிதில் முத்தியடையும். அவர் திருநாமமும் பெருநாம மந்திரமாகத் திகழும். இச்சிறந்த சாதனையாகிய தன் நெஞ்சினைத் தனதாக்கிக் கொள்ளுதலை முறையாக முயன்ருல் எல்லாராலும் செய்ய முடியும் என்பதை அப்பர் அடிகளே நமக்கு இனிதெடுத்துப் போதிக்கிருர் :—

"முன்னெஞ் சம்மின்றி மூர்க்கராய்ச் சாகின்றார்
தங்நெஞ் சந்தமக் குத்தா மிலாதவர்
வன்னெஞ் சம்மது நீங்குதல் வல்லீரே
என்னெஞ்சி லீசனைக் கண்டதென் னுள்ளமே."

இத்தேவாரப் பாடலில், திருவள்ளுவர் கூறிய 'தன்னுயிர் தானறப்' பெறுதலையே எதிர்மறைமுகத்தான் 'தங்நெஞ்சந் தமக்குத் தாமிலாதவர்' என அப்பர் குறித்துள்ளார் என்பது தெளிவாகும். தன் நெஞ்சைத் தனக்கு உரித்தாக்க முடியாதவனே உலகில் பலவகைக் குற்றங்களையும் பாவங்களையும் செய்கிறான். மரணத்திற்கு அஞ்சியஞ்சி ஓடி மரணத்தின் வாயிலேயே விழுகிறான். தன் மனத்தைத் தனதாக்கித் தன் கீழ்ப்படுத்திக் கொண்டு தவநெறி யொழுகுபவன் எவனோ அவனே இறையொளி பெற்று இறப்பினையும் வென்றவன் ஆவான். அத்தகையவன் இயமனுக்குப் பயப்படவேண்டியதில்லை. அவன் கூற்றுவனைக் கூவி யழைத்துக் குற்றேவல்புரிய வைப்பான். தவத்தான் வரும் சாப அருள்களைப்பெற்ற தலைமையோர்க்கு மன்னுயிரெல்லாம் தம்மைத் தொழுவதோடுகூட, கூற்றத்தைக் கடத்தலும் கைகூடும் என்றார் வள்ளுவர் :—

"கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு."

நடலைவாழ்வு வாழ்ந்து மக்கள் நாசமாய்ப் போவதைக் கண்டு நலிவுற்றவர் நாவுக்கரசர். 'மூர்க்கராய்ச் சாகின்றார்' என்றும், 'எற்றுக்கோ நமனால் முனிவுண்பதே?' என்றும் இரங்கி வருந்தினார். 'நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்' என்று பாடினார். தாம் அத்தகைய ஆற்றல் எய்தியதன் காரணம் தாம் பொய்வாழ்வு வாழாது மெய்வாழ்வு வாழ்வதால் என்பதையும் 'நரகத்திலிடர்ப்படோம் நடலையில்லோம்' என்று கூறி நன்கு விளக்கினார். அவருக்குச்

சுண்ணும்புக் காளவாயும் சுடாது குளிர்ந்துவிட்டது. நஞ்சமும் நலியாது நகர்ந்துவிட்டது. யானையும் அடர்க்காது அகன்றுவிட்டது. கடலும் கரங்களால் ஏந்திக் கரைசேர விட்டது. இவற்றினின்றும் தப்பிப் பிழைத்ததால் அப்பருக்குக் கூற்றங் குதித்தலும் கைகூடிற்று என்பது தெளிவாகும்.

தெற்காதிபதியாகிய தருமராசனைத் தாமே குற்றேவல் புரியவைக்கும் ஆற்றலுடையவராகிய அப்பர் அவன் அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டு அவனுக்கு ஏவல் செய்வாரா? செய்யார். அவர் பாடி அருளிய காலபாசத் திருக்குறுந்தொகைப் பாசுரங்களை யாவரும் படித்தறிதல் வேண்டும். கால தூதர்களுக்கு அவர் விடுக்கும் கட்டளைகள் பலவற்றில் ஒன்றை மட்டும் இங்கு நோக்குவோம் :—

"இறையென் சொன்மற வேல்நமன் தூதுவீர்
பிறையும் பாம்பும் உடைப்பெரு மான்தமர்
நறவம் நாறிய நன்னறுஞ் சாந்திலும்
நிறைய நீறணி வாரெதிர் செல்லலே"

இவ்வாறு இயமனையும் விளித்தழைத்து அதிகாரத்துடன் ஆணைகள் இடும் ஆற்றல் பெற்றவர் அப்பர் அடிகள். இதனால் அவர் காலனையும் கடந்த கடவுட்டன்மை வாய்ந்த பெரியார் என்பதை எளிதில் அறிந்து கொள்ளலாம். நோற்றலின் ஆற்றலாவது சாப அருள்களைப் பெறுவதாகும். தவத்தின் உயர்வு அத்தகையது. அப்பர் தமது தவ வலிமையால் சபிக்கவும் அருளவும் வல்லவராய் இருந்தார். தாம் இறப்பை வென்றதோடல்லாமல், இறந்தவர்களை எழுப்பிக்கொடுக்கும் ஆற்றலும் அவருக்கு அமைந்திருந்தது. அப்பூதியடிகளின் பெரிய மகனாகிய மூத்ததிருநாவுக்கரசு அரவு தீண்டி உயிர் நீத்துக் கிடக்கையில், அப்பர் சுவாமிகள் 'ஒன்று கொலாம்'

என்னும் விடம் தீர்த்த பதிகம் பாடி, அவனுக்கு உயிர் அளித்த வரலாறு இங்கே நினைத்தல் தகும். சிவன் திருவடிகளை அடையப்பெற்றவர் திருநாவுக்கரசர். சிவனும் அவருக்கு அருள்புரிந்து அவர் சிந்தையை விட்டு அகலாதிருந்தான். சிவனுடைய எட்டுக் குணங்களும் அப்பரிடத்தில் பதிந்து இருந்தன. சிவனுடைய எண்குணங்களையும் தம் குணங்களாகக் கொண்டுவிட்ட அப்பருக்குக் காலன் எம்மாத்திரம்? மறலியை மதிப்பாரா வாகீசர்? இதோ பாடுகிறுர் :—

"நாவார நம்பனையே பாடப் பெற்றோம்
நாணற்றார் நள்ளாமே விள்ளப் பெற்றோம்
ஆவாஎன் றெமையாள்வான் அமரர் நாதன்
அயனொடுமாற் கறிவரிய அனலாய் நீண்ட
தேவாதி தேவன் சிவன்என் சிந்தை
சேர்ந்திருந்தான் தென்திசைக்கோன் தானேவந்து
கோவாடிக் குற்றேவல் செய்கென் றாலும்
குண மாகக் கொள்ளோம் எண் குணத்து ளோமே."

இறைவனுக்குள்ள எட்டுக் குணங்களுள்ளும் தம்முடைய உயிர் தோயப்பெற்று நின்ற நிலையை அப்பர் இப்பாடலிற் குறித்துள்ளார். சைவாகமத்துக் கூறியபடி எண்குணங்களாவன :— (1) தன்வயத்தனுதல் (2) தூய உடம்பினனுதல் (3) இயற்கை உணர்வினனுதல் (4) இயல்பாகவே பாசங்களி னீங்குதல் (5) பேரருளுடைமை (6) முற்றுமுணர்தல் (7) முடிவிலாற்றலுடைமை (8) வரம்பிலின்பமுடைமை, என இவை. இவை எட்டுக் குணங்களும் சிவனுக்கே உரியவாகும். இவை எட்டுக் குணங்களும் அப்பர் அடிகளிடத்தில் பதிந்ததோடல்லாமல், வீறுபெற வெளிப்பட்டு விளங்கியும் நின்றன. அவை தமக்கு வாய்ந்து விளங்கிய தன்மையை அப்பரே அறிவிக்கிறுர் :—

சமண சமயத்தை நீத்துச் சிவநெறிக்கு ஆளாகி விட்டார் திருநாவுக்கரசர் என்பது தெரிந்தவுடன் தங்கள் நெறிக்குப் பெரும்பழி தந்துவிட்டதாகச்

சமணர்கள் அஞ்சினர்கள். தங்கள் சமயம் இனித் தலையெடுக்க முடியாது என்பதை நன்குணர்ந்து திருநாவுக்கரசரைத் தொலைத்துக் கட்டிவிட வேண்டும் என்ற முடிவுக்கு வந்து, தங்கள் சொற்படி ஒழுகிவந்த பல்லவ மன்னனிடம் இல்லனவும் பொல்லனவும் பல்லனவாய்ச் சொல்லி, அப்பர் அடிகளைப் பிடித்து வரும்படி தூண்டிவிட்டார்கள். காவலனும் ஏவலரை ஏவி விடுத்தான். பெரும் படையொன்று திரண்டு வந்தது. அப்பர் அரசன் கட்டளையை ஏற்க மறுத்தார். "நீங்கள் யார்? உங்களை ஏவி விட்ட அரசன் தான் யார்? களவு, கொலை முதலிய குற்றம் ஏதுவும் எம்மிடம் கிடையாது. நாம் சிவபெருமான் ஒருவனுக்கே அடிமை. நாம் வேறு எந்த அரசனுக்கும் அடிமை இல்லை. உங்கள் அரசன் அஞ்சுகின்ற இயமனுக்கும் நாம் அஞ்சமாட்டோம். இம்மையில் மட்டுமின்றி மறுமையிலும் எமக்கு நரக வேதனை கிடையாது. நாம் பொய்வாழ்வு வாழ மாட்டோம். நாம் பேரின்பக்களியினுல் பெருமிதத்தோடு இருப்போம். நோய் முதலியவற்ருலும் மலப் பிணிப்புக்களாலும் அல்லற்படோம். நாம் ஒருவருக்கும் கீழ்ப்படோம். இன்பம் தவிரத் துன்பம் இன்னதென்று அறியாதபடி இறைவன் திருவடி நீழலில் இணைபிரியா திருப்போம்" என்று முழங்கினர் :—

" நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை
தாமார்க்கும் குடியல்லாத் தன்மை யான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாம்என்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே."

இத்தெய்வமறைத் திருநெறிய தீந்தமிழ்ப்பாடல் சிவநேசச் செல்வர்களின் சுதந்திரப் பிரகடனமாய்த்

திகழ்கிறது: சிவனடியார்களின் உரிமைப் பட்டயமாய் ஒளிவிடுகிறது: பாசப்பிணிப்பினின்றும் விடுபட்டு வீடு பெற்ற ஓர் உயிரின் வெற்றிப் பறையொலி முழக்கமாய் விளங்குகிறது: தமிழின் இன்பச் சாற்றினை வடித்தெடுத்துத் தெளிய விட்ட தேறல் வெள்ளமாய்த் தித்தித்து நம்மை இறும்பூது கொள்ளச் செய்கிறது. இப்பாடலின் சொல்நயம் பொருள் நயங்களை எம்மனோரால் அளவிட்டுக் கூறவும் இயலாது. இப்பாடலை நாவினிக்க நாம் மேன்மேலும் பாடிக் கொண்டேயிருந்தால், நம் உள்ளத்தில் எழுகின்ற இன்ப உணர்ச்சியும், சுதந்திர தாகமும், வாழ்க்கையில் ஒரு புது மலர்ச்சியை உண்டு பண்ணும். சிவனடிகள் சிந்தைதோயச் சிம்மாந்து சிம்புளித்து அப்பர் அடிகள் சிறந்து விளங்கிய நிலையை இப்பாடல் நமக்குத் தெளிவாகக் காட்டா நிற்கும். இப்பாடலில் எண் குணங்களின் வெளிப்பாடுகள் யாவை என்பதை நோக்குவோம். (1) நாம் ஆர்க்கும் குடி அல்லோம் என்பது தன் வயத்தனுதல். (2) நமனை அஞ்சோம் என்பது தூய உடம்பினனுதல். (3) நரகத்தில் இடர்ப்படோம் என்பதில் மறுமை நிகழ்ச்சிகளையும் இப்பொழுதே கண்டு கூறும் உணர்வாற்றலால் இயற்கை உணர்வினனுதல் பெறப்படும் (4) நடலையில்லோம் என்பது இயல்பாகவே பாசங்களினீங்குதல். (5) ஏமாப்போம் என்பது பேரருளுடைமை (6) பிணி அறியோம் என்பது முற்றுமுணர்தல் (7) பணிவோம் அல்லோம் என்பது முடிவிலாற்றலுடைமை. (8) இன்பமே எந்நாளும், துன்பமில்லை என்பது வரம்பிலின்பமுண்டமை. இவை சிவபெருமான் திருவடிகளையடைந்ததால் தமக்கு உண்டாயின என்றும் கூறினர். சிவபெருமானுக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லையாதல் நோக்கித் தாமார்க்குங் குடியல்லாத் தன்

மையன் என்றும், ஒரு காதிற் குழையும் ஒரு காதில் தோடும் அணிந்த மாதொருபாகனுய் அம்மையப்பரின் திருவுருக் கொண்டிருத்தல் நோக்கிச் சங்கக் குழை யோர் காதிற்கோமான் என்றும் தெளிவு படுத்தினர். சீவனுய் நின்ற உயிர் இறைவன் திருவடியடைந்ததும் சிவனுகின்ற முறையும் இப்பாடலில் விளக்கமுறுகிறது. அவ்வாறு இறைமைக் குணங்களை அடைந்தாலும் சீவன் முத்தனுகிய உயிர் சிவனுடைய திருவடியாகிய வியாபகத் தன்மையுள் வியாப்பியமாய் ஒடுங்கி அடங்க வேண்டும் என்பதைக் 'குறுகினோமே' என்ற சொல் தெளிவிக்கிறது. உயிர் தன் முனைப்புக் கெட்டு ஒடுங்குதலே இங்குக் குறுகுதலாகும். இவ்வாறு ஆழ்ந்த கருத்துக்கள் பல இப்பாடலிற் செறிந்து மிளிர்கின்றன. தன்னைத் தொழுது வந்தடையும் அடியவர்க்கு இறைவன் தனது இறைமைக் குணங்களை அளித்து இன்பம் ஊட்டுகிருன் ஆதலின், அவ் இறைவனை வணங்குதல் நம் கடனுகும். எண்குணத்தான் தாளை வணங்காத தலையினுல் யாது பயனும் இல்லை என்று பாடினர் திருவள்ளுவரும் :

"கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை."

இங்கு 'எண்குணத்தான்' என்று வள்ளுவர் குறிப்பிடும் கடவுள் யார்? ஒவ்வொரு சமயத்தாரும் தத்தம் கடவுளையே கூறினதாகக் கருதுவர். அதுவோ, இதுவோ, எதுவோ என்று விவாதங்கள் நிகழ்த்துவர். பரிமேலழகர் சைவாகமத்தை மேற்கோள் காட்டி எண் குணங்களையும் விளக்கினர். அப்பர் சுவாமிகளும் ஈசன் ஒருவனுக்கே எட்டுக் குணங்கள் உண்டு என்பதை ஐயமறப் பாடிக் காட்டினர் :—

"எட்டு மூர்த்தியாய் நின்றிய லுந்தொழில்
எட்டு வான்குணத் தீசனெம் மான்றனை
எட்டு மூர்த்தியும் எம்மிறை எம்முளே
எட்டு மூர்த்தியும் எம்முள் ஒடுங்குதும்.'

எனவே, ஈசனை வணங்காத தலையால் யாதுபயனும் இல்லை. "அஷ்டாங்க யோகியான பரமேசுரனிட பாதத்தை வணங்காத் தலை, மெய்வாய் கண்மூக்குச் செவியுண்டாயினும், புலனில்லாத சித்திரம்போலும்." என்று ஒரு பழைய உரை மேலே கண்ட குறளுக்குக் காணப்படுகிறது. 'காணுதகண் முதலியனபோல வணங்காத தலைகள் பயனிலவெனத் தலைமேல் வைத்துக்கூறினர்: கூறினரேனும் இனம்பற்றி வாழ்த்தாத நாக்களும் அவ்வாறே பயனிலவென்பதூஉங் கொள்க' என்று பரிமேலழகர் கூறினர். இதனல் அப்பர் பாடிய திருவங்கமாலை முழுதுக்குமே இக்குறள் இடம் கொடுத்து நிற்பதை அறிஞர்கள் காணலாம்.

'தலையே நீ வணங்காய்!' என்று தலையை நோக்கி வேண்டுகிறார் அப்பர் அடிகள். ஏன்? தலைக்கு இலேசில் வணக்கம் வராது. அது ஆணவத்தாலும் அறியாமையாலும் நிமிர்ந்தே தான் நிற்கும். "வணங்காத் தலை வந்தெங்கே யெனக்கிங்ஙன் வாய்த்ததுவே?" என்று அருணகிரிநாதர்கூட வருந்தவேண்டி வருமானல், ஏனையோரைப்பற்றி என் சொல்வது? 'வணங்குத் தலை வைத்து' என்றார் வாதவூரண்ணல். இறைவன் நமக்குத் தலையைக் கொடுத்தது, அதனைச் சீவிச் சிங்காரித்துப் பூச்சுற்றி மகிழ்வதற்கல்ல. இறைவனுடைய தாளடியில் அதை வணக்குவதற்காகத்தான். இக்கருத்தை அப்பர் அடிகளும் வலியுறுத்துகிறார் :—

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே."

எண் குணத்தானுகிய இறைவன் தாளைத் தலையால் வணங்க வேண்டும் என்ருர் திருவள்ளுவர். அப்படி வணங்கும் பொழுது எப்படி வணங்க வேண்டும், வணங்காவிடில் என்ன விளையும் என்பனவற்றையும் சேர்த்துக் கூறினுர் அப்பர் அடிகள். இறைவனுடைய தாளை வணங்காத தலை என்ன தலை? அது தறுதலை. இறைவனுடைய திருப்புகழை எடுத்து ஓதாத வாய் என்ன வாய்? அது கடுவாய். இறைவனுடைய திருக்கோலத்தைக் காணுத கண் என்ன கண்? அது புன்கண் அல்லது இடுக்கண் அல்லது மரக்கண். இறைவனுடைய திருப்புகழை ஓதாத நாக்கு என்ன நாக்கு? அது புண்ணுக்கு. இறைவனுடைய திருநாமப் பெரும் புகழினைக் கேளாத செவி என்ன செவி? அது கட்செவி. 'தோளாத சுரையோ தொழும்பர் செவி?' என்றும் பாடி வருந்தியிருக்கிருர் அப்பர் அடிகள்.

இறைவனுடைய பொருளுடைய திருப்புகழை நம் வாயால் எடுத்து ஓதினுல் நம்முடைய வினைகள் எல்லாம் தீரும். தீராத வினைகளைத் தீர்த்து வைப்பான் இறைவன் ஒருவனே :—

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு."

என்ருர் திருவள்ளுவர். இருவினைகளாகிய நல்வினையும் தீவினையும், பொன்விலங்கும் இரும்பு விலங்கும் போல்வன ஆகலானும், நல்வினையும் தீவினைபோலப் பிறப்பதற்கு ஏதுவாகலானும், அவை இன்ன தன்மைத் தென ஒருவராலும் கூறவொண்ணுத மயக்கத்தைத் பற்றி வருவனவாயிருப்பன ஆதலாலும் "இருள் சேர் இருவினையும்" என்ருர். 'இறைமைக் குணங்கள் இலராயினுரை உடையர் எனக் கருதி அறிவிலார் கூறு கின்ற புகழ்கள் பொருள் சேரா (மெய்மை உடையன

வல்ல) ஆகலின், அவை முற்றவும் உடைய இறைவன் புகழே பொருள் சேர் புகழ் எனப்பட்டது. புரிதல் – எப்பொழுதும் சொல்லுதல் என விளக்கினுர் பரிமேலழகர். தன் பெயரைச் சொல்லி அடைக்கலமாகப் புகுந்த மாத்திரத்தே வினைகளைத் தீர்க்கவல்லவன் எவனே அவனே முழுமுதற் கடவுளாகிய இறைவன்.

*" தன்னை யடைந்தார் வினை தீர்ப்பதன்றே*
*தலையாயவர்தங் கடனுவதுதான்."*

என்று பாடினுர் அப்பர் அடிகளும். தன்னை வணங்கும் அடியார்களுடைய வினைகளைக் களைய வல்லவனுய், இவ்வுலகிற்குத் தலையாயவனுய்த் தழைத்து நிற்பவன் சிவன் ஒருவனே. அவனே அது செய்ய வல்லவன். ஏனையோரெல்லாரும் வினைகளாற் கட்டுண்டிருப்பவர் ஆகையால், வினை தீர்க்க வல்லவராய் விளங்க முடியாது. ஆகவே வள்ளுவர், வினைகளைத் தீர்த்து வைப்பதையும் இறைமைக் குணங்களுள் ஒன்ருக அமைத்துக் கூறினுர். அப்பரும் பாடுகிருர் பாருங்கள்:-

*" எந்தை யேயெம்பி ரானே யெனவுள்கிச்*
*சிந்திப் பாரவர் தீவினை தீருமால்*
*வெந்த நீறுமெய் பூசிய வேதியன்*
*அந்த மாவளப் பார்அடைந் தார்களே."*

புண்ணியம், பாவம் ஆகிய இரு வினைகளையும் ஒழித்த பின்னரே பிறவிச் சுழலினின்றும் பிழைத்துக் கரையேறலாம். அப்பர் சுவாமிகள் சிவபெருமானுடைய திருவடிகளைச் சரண் புகுந்து இரு வினைகளையும் வென்ருர். அவ்விரு வினைகளும் அவரை விடாது பின் சென்று தம் வலையில் வீழ்க்கப் பார்த்தன. அவற்றின் தூண்டுதல்களுக்கு அப்பர் மனம் துளங்கவில்லை. சிவன் திருவடிகளை உறுதியாகப் பற்றி நின்று அவற்றினை வென்ருர். அவை பின்னும் அவரிடம்

சென்று முயன்று பார்த்தபோது, 'உங்கள் வலியெல்லாம் என்னிடம் செல்லாது' என்று வீரவுரை பகரும் வீறுபெறு பாடல் இதோ இருக்கிறது : —

"பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை யரித்துத் தின்பீர்க்
கில்லையே கிடந்துதான் யானேல் வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்ண லாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும்
எம்மான்றன் அடித்தொடர்வான் உழிதர் கின்றேன்
இடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே."

செம்மை நெறிசேர் திருநாவுக்கரசருக்கு வெம்மை விளைத்து இடறித்தள்ளிக் கெடுக்க யத்தனித்த இருவினைகளைக் கெடுவீர்காள் என்றும், இறைவன் தாளை அடைந்ததால் இடைந்து இடறிவிழுதல் தமக்கு இல்லை என்றும், சிவபெருமானே இறைவன் என்பதை வானோர் தம்மான், தலைமகன், தடங்கடல் என்றும், சிவன் வினைகளை அறுப்பவன் என்பதைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும் எம்மான் என்றும், இருவினைகளையும் புண்ணியங்காள், தீவினைகாள் என்று விளித்தும் அப்பர் அழகாகப் பாடியுள்ளார்.

வினைத்தொடர்பு உள்ளவரையில் உயிர் உடலோடு கூடியேயிருக்கும். உயிர் உடலில் உள்ளவரையும் தீவினையும் விடாது தொடர்ந்து பற்ற முயன்று கொண்டே யிருக்கும், அதன் சூழ்ச்சிகளுக்கு ஓய்வே கிடையாது. எங்காவது எப்பொழுதாவது உயிர் அயர்ந்து மறந்து அசட்டையாய் அரன் நாமத்தை நினைப்பதினின்றும் நெகிழ்ந்தால் தீவினை நெஞ்சினுட் புகுந்து இடம் பிடித்துவிடும். எப்படிக் காற்று இல்லாத வெற்றிடத்தைத் தெரிந்துகொண்டு காற்றானது அங்குக் காலியாய் இருக்கும் செவ்வி

நோக்கி விரைந்து பாய்ந்து நிறைந்துவிடுகிறதோ அதுபோன்று, இறைவன் நினைப்பின்றி வறிதாய்ப் பாழ்பட்டுக் கிடக்கும் நெஞ்சத்தையும் தீவினை உடனே தெரிந்து உள்ளே புகுந்துவிடும். ஆனால் இறைவனுடைய திருப்புகழை எப்பொழுதும் வாயால் ஓதியும் மனத்தால் நினைந்தும் வழிபட்டுவரும் நெஞ்சில் ஈசன் எப்பொழுதும் குடிகொண்டிருப்பதால், அங்குத் தீவினை சென்று புகுவதற்குக் காலி இடம் கிடையாது. அதனாலேயே 'இருவினையும் சேரா' என்று கூறினார் திருவள்ளுவர். அப்பர் சுவாமிகளை நிழல்போலே விடாது பின் சென்று பார்த்தது தீவினை. அதன் குறும்புகள் ஒன்றும் அவரிடம் பலிக்கவில்லை. அதனால் அதன் வலியெல்லாம் குன்றி, ஓய்ந்து தேய்ந்து, வற்றலாய்ச் சுருங்கி மெலிந்துவிட்டது. அதன் கண்கள் கிடங்கு விழுந்து போயின. ஒருநாள் தளர்ந்து ஒடுங்கிப்போன அத்தீவினை அப்பருடைய எதிரே போகவும் அஞ்சி, ஒருபுறமாக ஒதுங்கி நின்றுகொண்டு பல்லை நறநறவென்று கடித்தும், நாக்கைச் சுவைத்து நீட்டி உரப்பியும், ஒளிமாறி விழுந்துபோன கண்ணை உருட்டி உருட்டி விழித்தும் தன் வெறுப்பைக் காட்டியது. அவர் தன் பிடியில் அகப்படாததால் அதற்கு ஆத்திரம் தாங்கவில்லை; ஆனால் சிறந்த சிவனடியாராகிய அவரை அதனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. உலகத்து உயிர்களையெல்லாம் வென்று தன் கீழ்ப்படுத்து ஓங்கி நிற்கும் ஊற்றம் வாய்ந்த அத்தீவினை அப்பருடைய அருகில் அண்டவும் முடியவில்லை. ஆதலால் அவரைப் பார்த்து வவ் வவ்வென்று அழகு காட்டி வலித்துக்கொண்டே தன் வயிற்றெரிச்சலை வெளிப்படுத்தியது. அதனை நோக்கி அப்பரும் பதில் மாற்றம் விடுத்தார்: "ஏ தீவினையே! நான் என்ன செய்வேன்? திருவொற்றியூரிலுள்ள

சிவபெருமான் என் நெஞ்சினை உள்ளும் புறமுமாய்ச் சூழ்ந்து நின்றுகொண்டு ஒருபோதும் பிரியாதிருக்கிருன். நீயோவென்ருல், உலகம் பூராவும் நான் செல்லுமிடம் எல்லாம் விடாது ஒற்றனைப்போலத் தொடர்ந்து வந்து பற்றப் பார்க்கிருய். உன்ஞல் அது முடியுமா? என் நெஞ்சில் சிவபெருமானுக்குத்தான் இடம் உண்டேயொழிய, உனக்கு இடமில்லை. நீ கண் குழிவிழுந்து, பல்லைக் கடித்து, நாக்கைத் துருத்தி உரப்பலாமேயன்றி, வேறு நீ என்ன செய்யக் கிடக்கிறது? மரியாதையாய் ஓடிப்போய்விடு'' என்று பாடினுர்:

''சுற்றிக் கிடந்தொற்றி யூரனென் சிந்தை பிரிவறியான்
ஒற்றித் திரிதந்து நீயென்ன செய்தி யுலகமெல்லாம்
பற்றித் திரிதந்து பல்லொடு நாமென்று கண்குழித்துத்
தெற்றித் திருப்பதல் லாலென்ன செய்யுமித் தீவினையே.''

இப்பிறவியில் நம்மைப் பல துன்பங்கள் வந்து துயருறுத்துகின்றன. அவைகளைக் கண்டு அஞ்சிப் பின்வாங்குகிருேம். பல நன்மைகளால் நலம் அடைகிருேம். பெரிதும் மகிழ்கிருேம். அவற்றிற்கு உரிய காரணம் நமக்கு நன்கு விளங்குவதில்லை. அவை முற்பிறப்பிற் செய்த தீவினை நல்வினைகளின் விளைவே என்பதை உணர்கிருேம். பெரிதும் வருந்துகிருேம். முற்பிறப்பில் நல்வினைகளையே செய்து இப்பிறப்பில் நலமடையாது போனேமே என்று நாணுகிருேம். ஏங்குகிருேம். முற்பிறப்பின் தீவினைகள் இப்பிறப்பில் பல துன்பங்களாகச் சூழ்ந்துவந்து நம்மை நலிவுறுத்துவது உண்மையாயின், நாம் இப்பிறப்பிற் செய்யும் தீவினைகளும் நல்வினைகளும் மறுபிறப்பில் பலவித புண்ணிய பாவங்களாய் வந்து நம்மைச்சாரும் என்பது உண்மையல்லவா? இவ்வுண்மையை உணர்ந்த பின்னரும் மறு பிறப்பில் துன்பங்களாய் மாறவல்ல தீவினைகளை

இப்பிறப்பில் நாம் சிந்தையாலும் தொடாது சேய்மைக் கண்ணே அகலவேண்டும் அல்லவா? அதுமட்டும் அல்ல. நாம் மறுமையில் நற்கதியடைந்து பிழைத்துப் போதற்குரிய புண்ணியங்களையும் இம்மையிலேயே நாம் உள்ளபொழுதே, இப்பொழுதே, செய்யவேண்டும் அல்லவா? அங்ஙனம் செய்யாது, செய்யவும் முயலாது, அந்த எண்ணமும் இல்லாது, மேலும் மேலும் தீவினைகளை அடுக்கடுக்காய்ச் செய்து கொண்டேயிருப்போமாயின், நமது மறுமை வாழ்க்கை இன்பத்தை இல்லையாய் அடித்து இருளில் இழுத்து விடும் அல்லவா? இதனை எள்ளத்தனையும் எண்ணாது கள்ளத்தனமாய் இம்மையைக் கழிப்போர் பேதையரே யன்றோ? திருஞானசம்பந்தர் நம்மை விளித்துப் பாடுகின்றார்.

> "அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மஃதறிவீர்
> உய்வினை நாடா திருப்பது முந்தமக் கூனமன்றே
> கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுது நாமடியோம்
> செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறாதிரு நீலகண்டம்."

இதனை அப்பர் அடிகள் எப்படிப் பாடுகிறார் பாருங்கள்!

> "பண்டு செய்த பழவினை யின்பயன்
> கண்டுங் கண்டுங் களித்திகா ணெஞ்சமே
> வண்டு மாமலர்ச் செஞ்சடை யேகம்பன்
> தொண்ட னாய்த்திரி யாய்துயர் தீரவே."

மேல்வரும் பிறவியில் நாம் இன்பநிலையடைவதற்கு இப்பிறவியில் இறைவன் திருவடியை மறவாது மனத் திருத்தி அருள் நெறியின்கண் ஒழுகுதல் வேண்டும். எல்லா உயிர்களிடத்தும் நாம் அன்பு செலுத்தி அருள் வாழ்வு வாழ வேண்டும். நாம் முற்பிறப்பிலேதான் உறுதிப்பொருளைச் செய்யாது வீணே கெட்டோம்

அதற்காக இப்பிறவியில் துன்புறுகிரேம். இதை மறந்து இப்பொழுதும் தூங்கிவிடலாமா? கூடாது. உயிர்கள் மாட்டுச் செய்யப்படும் அருளைத் தவிர்ந்து தவிரப்படும் கொடுமைகளைச் செய்தொழுகுவோர் அவ்விதம் மறந்தவரேயாவர் என்கிருர் திருவள்ளுவர்.

"பொருள் நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி
அல்லவை செய்தொழுகு வார்."

முற்பிறப்பில் அருளினின்றும் நீங்கி அல்லாதவற்றைச் செய்தே நாம் இப்பிறப்பில் இந்த கதிக்கு ஆளானேம் என்னும் புத்தி ஒவ்வொருவருக்கும் ஏற்படத்தான் செய்யும். அந்தப் பாடத்தைக் கைவிட்டு விடாது மனத்திருத்தி உடனே நம் வாழ்க்கையை நல்ல முறையில் திருத்துதல் வேண்டும். நாம் முன் உறுதியை மறந்துபோன தீவினையையும், நம்மை இப்போது அடர்ந்து வரும் துன்பங்களையும் கண்டு கண்டு நம் கருத்தமயிரும் வெளுத்த மயிராய் மாறி விடுகிறது என்கிருர் திருநாவுக்கரசர். அவ்வளவுக்கு அஞ்சுகிரேம். இந்த அச்சம் நமக்கு நல்ல பாடத்தைக் கற்பிக்க வேண்டாமா? நம்மை நன்னெறிப்படுத்த வல்ல நாதன் திருவடியை மறவாமல் தொழுது வரும் பிறப்பில் வர இருக்கின்ற தீவினைகளை வரவொட்டாமல் தடுக்க வேண்டாமா? அவற்றைத் தலையெடுக்க வொட்டாமல் தகர்க்க வேண்டாமா? இப்பிறவியிலும் கங்கை வேணியன் கழலடி மறந்து, கணகணவென்று இருமிக் கால் தளர்ந்து மூப்புமேலிட்டுவறிதே வாழ்க்கையைக் குலைத்துக்கொள்ளலாமா? இதற்காகவா பிறவி எடுத்தது? அப்பர் வருந்திப்பாடுகிருர்.

"விளைக்கின்ற வினையை நோக்கி வெண்மயிர் விரவிமேலும்
முளைக்கின்ற வினையைப்போக முயல்கிலே னியலவெள்ளம்
திளைக்கின்ற முடியினுன்றன் திருவடி பரவமாட்டாது
இளைக்கின்றேன் இருமியூன்றி என்செய்வான்தோன்றினேனே,"

எவ்வளவு துயரம் ததும்ப இப்பாடலைத் திருநாவுக்கரசர் பாடியிருக்கிறார், பாருங்கள்! திருநாவுக்கரசருடைய முற்பிறப்பின் வாழ்க்கை இத்தகையது எனச் சிவபெருமானால் திலகவதியாருக்குத் தெரிவிக்கப்பட்டுள்ளது. திருநாவுக்கரசர் முற்பிறவியில் பெருந்தவமுனிவராயிருந்து சிவனடி அடையத் தவ முயன்றார். அவர் பண்டு புரிந்த நற்றவத்தில் இறையளவு பழுது வந்துற்றதற்காக மீண்டும் ஒரு பிறவியெடுத்துச் சமண் புகுந்து சூலைநோயால் தொடக்குண்ண நேரிட்டது. அதனை நினைந்து திருநாவுக்கரசர் எவ்வாறு உருகியிருக்கிறார் தெரியுமா? இதோ பாடுகிறார் பாருங்கள் :—

"செம்மைவெண் ணீறுபூசுஞ் சிவனவன் தேவதேவன்
வெம்மை நோய் வினைகள் தீர்க்கும் விகிர்தனுக் கார்வமெய்தி
அம்மை நின் றடிமை செய்யா வடிவிலாமுடிவில் வாழ்க்கைக்கு
இம்மை நின் றுருகுகின்றேன் என்செய்வான் தோன்றினேனே."

அவ்வாறு உயிர்களுடைய வினைகளைப் போக்க வல்லவனாய் இருக்கும் இறைவன் அவ்வுயிர்களையே போல் வெறும் பாச அறிவு பசு அறிவு படைத்தவனாய் இருத்தல் கூடாது. அவனுடைய அறிவு பதி அறிவாகிய தூய பேரறிவாய் இருத்தல் வேண்டும். தூய ஞானமயமாய் இருப்பவன் எவனோ அவனே இறைவன். அறிவித்தால் அறிந்தும், மறதியுடையதாயும், ஒன்றையறியும் பொழுது மற்றவைகளை அறிய முடியாதும், கருவிகரணங்களைக் கொண்டே அறிந்தும் இவ்வாறு அல்லற்பட்டு, அந்தகாரத்தின் அகத்தே மின்போற் சுருங்கின அறிவுள்ளதாய் இருப்பது உயிர். ஆனால் இறைவன் எல்லாவற்றையும், எங்கும் எப்பொழுதும் தானாகவே உள்ளவாறு அறிந்துகொண்டிருக்கும் ஞானச் சுடரொளியாய் இருப்பவன். அதனால் இறைவனை 'வாலறிவன்' என்று கூறினார் திருவள்ளுவர் :—

"கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்ருள் தொழாஅர் எனின்."

நாம் கற்ற கல்வியறிவின்பயன் அம்மெய்யுணர் வினயுடைய இறைவன் தாளைத்தொழுது பிறவியறுத்தல் என்பது இக்குறளின் பொருள். பிறவிப்பிணிக்கு மருந்தாகலின் 'நற்ருள்' என்ருர். பாச ஞானம் பசு ஞானத்தால் எட்டியும் பார்க்கொணுத பேரறிவாய் இருக்கின்ருன் என்ற உண்மையை உணர்வதே நாம் கற்கும் கல்வியின் பயன். இதனைக் 'கற்ற நூற்கருத்து நீ என்றும், "நல்வினைப்பயன் நான்மறையின் பொருள், கல்வியாய கருத்தன் உருத்திரன்" என்றும் திருஞான சம்பந்தர் பாடினுர். "கலைஞானமெல்லாம் ஆனுய் நீயே" என்பதும், "கல்லாதார் மனத்தணுகாக் கடவுள் தன்னைக், கற்ருர்கள் உற்ருேரும் காதலானை" என்பதும் அப்பர் திருவாக்கு. "கற்ற கல்வியினும் இனியானை" என்ருர் சுந்தரமூர்த்தி நாயனுர். இது மட்டுமா? இன்னும் அப்பர் பாடுகிருர் பாருங்கள் :

"ஓதிய ஞானமும் ஞானப் பொருளும் ஒலிசிறந்த
வேதியர் வேதமும் வேள்வியும் ஆவன விண்ணு மண்ணும்
சோதியுஞ் செஞ்சுடர் ஞாயிறும் ஒப்பன தூமதியோடு
ஆதியு மந்தமு மான ஐயாறன் அடித்தலமே."

"வானைக் கடந்தண்டத் தப்பால் மதிப்பன மந்திரிப்பார்
ஊனைக் கழித்துய்யக் கொண்டருள் செய்வன உத்தமர்க்கு
ஞானச் சுடராய் நடுவே யுதிப்பன நக்லகயஞ்ச
ஆனை யுரித்தன காண்க ஐயாறன் அடித்தலமே."

இறைவனை உள்ளபடி உணருமாறு உதவும் நூல்களே உத்தமமான நூல்கள். அவற்றைப் படிப்பதே உண்மையான கல்வியாகும். நல்ல நூல்களின் கருத்தும் பொருளுமாய் இருப்பவன் இறைவன். கடலின் ஆழத்திலே நன்மணிகள் காணப்படுதல்போல்

நல்ல நூல்களின் பொருளாழத்திலே இறைவனைக் காணலாம். இறைவனை இல்லையென்று நாத்திகம் உரைக்கும் நூல்களைப் படிப்பது நல்ல கல்வியாக மாட்டாது. அதனால் ஏற்படும் அறிவும் நல்லறிவு ஆகாது. அக்கல்வியாற் பயன் யாதொன்றும் இல்லை. மனிதன் எவ்வளவுதான் கற்றாலும் அக்கல்வியாற் பெறப்படும் அறிவு சிற்றறிவேயாகும். அச்சிற்றறிவு நமக்கு ஓர் கை விளக்கு ஆகி இருளில் பாதையைத் துலக்கிக் கடவுளாகிய ஞான சூரியனை அடையச்செய் கிறது. அந்தச் சிற்றறிவையும் உதவாத கல்வியாற் பெறும் பயன் வெற்றறிவேயாகும். கடவுளைக் காட்டாத படிப்பு மனிதனை அழித்துவிடும்.

"ஆலின்கீழ் அறங்களெல்லாம் அன்றவர்க் கருளிச் செய்து
நாலின்கீழ் அவர்கட்கெல்லாம் நுண்பொருள் ஆகிநின்று
காலின்கீழ்க் காலன் றன்னைக் கடுகத்தான் பாய்ந்து பின்னும்
பாலின்கீழ் நெய்யுமானார் பழனத்தெம் பரமனாரே."

என்று பாடினார் அப்பர் அடிகள். அவ்வாறு நூலின்கீழ் நுண்பொருளாகி நிற்கும் இறைவனை அறிவதே உண்மையான கல்வியறிவின் பயன். அவ்வறிவு வந்து ஒருவனுக்கு வாய்க்கும்பொழுது அவன் இறைவன் தாளடியில் விழுந்து வணங்குவான். நம் சிறுமை யையும் இறைவன் பெருமையையும் உணர்த்தும் அறிவே உண்மைக் கல்வியின் பயன் என்பது திருவள்ளுவருக்கும் திருநாவுக்கரசருக்கும் ஒப்பமுடிந்த முடிவாகும்.

எண்ணிறந்த உயிர்களின் வினையைப் போக்க வல்லவனாய் இருக்கும் ஒருவன் தூய அறிவு மயமானவ னாய்மட்டும் இருந்தால் போதாது. அவன் விருப்பு வெறுப்பு அற்றவனாயும் இருக்கவேண்டும். வேண்டியவர் இன்னார், வேண்டாதவர் இன்னார்

என்னுதபடி யாவர்க்கும் நடுநிலைமையில் நின்று நீதி வழங்குபவனுதல் இன்றியமையாதது. வேண்டுதல் இல்லாமையால் இன்பத்தையும் விழையமாட்டான். வேண்டாமை இல்லாமையால் வெகுளியையும் மேற் கொள்ளான். அத்தகைய கடவுளே நடுநின்று யாவர்க்கும் நலம் புரிவான். அவனுடைய திருவடியை அடைந்தவர்களுக்கு எப்பொழுதும் எக்குறையும் வராது. பிறவித் துன்பங்கள் அறவே நீங்கிவிடும். இவ்வாறு வள்ளுவர் கூறினுர்,

"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல."

அவ்விதம் விருப்பு வெறுப்பற்றிருப்பவன் சிவ பெருமான் என்றும், அவன் அருச்சுனனை வேடன் உருவிற் சென்று சோதித்தான் என்றும், அவன் அரும் பெருஞ் சோதி என்றும், சூலத்தைக் கொண்ட வன் என்றும், காலனைக் காலாற் கடிந்தவன் என்றும், மண்ணுள்ளார்க்கும் விண்ணுள்ளார்க்கும் ஆண்டவன் என்றும், அவன் திருவடியையே தாம் அடைந்து இடும்பை நீங்கி உய்ந்ததாகவும் அப்பர் அருளி யுள்ளார் :—

"வேண்டாமை வேண்டுவதும் இல்லான் தன்னை
விசையனைமுன் னசைவித்த வேடன் தன்னைத்
தூண்டாமைச் சுடர்விடுநற் சோதி தன்னைச்
சூலப் படையானைக் காலன் வாழ்நாள்
மாண்டோட வுதைசெய்த மைந்தன் தன்னை
மண்ணவரும் விண்ணவரும் வணங்கி யேத்தும்
ஆண்டானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே."

விருப்பு வெறுப்பற்றிருத்தற்குப் பொறி புலன்களை வென்றிருக்க வேண்டும். மேலும், பொறி புலன்களை வென்றவர்களே இறைவனை அடைய முடியும் என்றி

ருத்தலாலே, அவ் இறைவனும் பொறி புலன்களை வென்றவனாகவே இருக்கவேண்டும். சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்கின்ற ஐம் புலன்களையும் நுகர்தற்கு வழிக் கருவியாகிய வாய் கண் மெய் செவி மூக்கு என்கின்ற ஐம்பொறிகளையும் அவித்தவன் எவனோ அவனே இறைவன். அவன் வகுத்துள்ள நெறியே பொய்யில்லாத மெய்யான ஒழுக்க நெறி. அந்தப் பொய்தீர் ஒழுக்க நெறியைக் கடைப்பிடிப்ப வர்களே அவ்விறைவனை அடையலாம் என்றார் திருவள்ளுவர் :—

> "பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
> நெறிநின்றார் நீடுவாழ் வார்."

பொறிவாயில் ஐந்தவித்தான் எவனோ அவனே தீவினை தீர்க்க வல்லவன். அவ்விறைவன் ஓதிய நெறியே மெய்ந்நெறி. அவ் ஒழுக்கப் பாதையிலே ஒழுகி அவனை வணங்கினாலே சித்தம் செம்மைப்பட்டுச் சிவமாகும். அந்நிலையே சிவஞானம் சித்திக்கும், அந்த ஞானமயமாய் இருக்கும் இறைவனை என் உள் ளம் கண்டு கொண்டது என்று பாடுகிறார் அப்பர் அடிகள் :—

> "வெலவ லான்புல னைந்தொடு வேதமும், சொலவலான்."

> "வென்று னைப்புல னைந்துமென் தீவினை
> கொன்று னைக்குணத் தாலே வணங்கிட
> நன்று நன்மனம் வைத்திடு ஞானமாம்
> ஒன்று னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே."

உள்ளத்தினுள்ளிருக்கும் - கள்ளத்தைத் தள்ளினால் மெள்ளவே இறைவன் அங்கு வெளிப்படுவான் என்க.

தான் பொறி புலன்களை வென்று இவ்வாறு வேண்டுதல் வேண்டாமையற்று, உயிர்களின் வினையைத் தீர்க்கவல்ல ஞானப் பொருளாய் இருக்கும்

இறைவனை இத்தகையவன் என்று நம்மால் எடுத்துச் சொல்ல முடியுமா? அவனுக்கு நேரான ஒப்புவமை எங்கேனும் உண்டா? இல்லை. இறைவனை ஒப்பாரும் மிக்காரும் இவ்வுலகில் இருத்தல் முடியாது. அப்படி யிருந்தால் அவன் இறைவனாய் இருக்க முடியாது. இரண்டு கடவுளர்கள் ஒரே உலகில் ஆட்சி செலுத்த முடியாது. இறைவனைப்போல மற்றொரு பொருள் உலகில் உண்டாயின் அல்லவா நாம் இறைவனுக்கு ஓர் எடுத்துக்காட்டு கொடுக்க முடியும்? ஆகவே இவ்வாறு ஒப்புவமை இல்லாதிருப்பதும் இறைவனுக்கு ஓர் இன்றியமையாத இலக்கணம் ஆகிறது. இதனைத் திருவள்ளுவர் கூறுகிறார் ;—

*" தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்*
*மனக்கவலை மாற்றல் அரிது."*

அப்பர் சுவாமிகள் தனக்குவமையில்லாதிருப்பவன் ஈசன் ஒருவனே என்பதைக் கண்டார். அவனுக்கு ஒரு பொருளை எடுத்து உவமையாகச் சொல்லவும்முடியாது. அவனும் மற்றொரு பொருளுக்கு உவமையாக மாட்டான். அப்படிப்பட்ட இறைவனை எவ்வுவமை கூறி விளக்கமுடியும்? எச்சொல்லைக்கொண்டு பேச முடியும்? எவ்வெழுத்தால் எழுதிக் காட்டமுடியும்? அவன் திருவருளைக் கண்ணாகக்கொண்டே அவனைக் காண முடியும். வேண்டுமானால் அவனை மாதொருபாகன், சடைவிரித்த சங்கரன், கச்சி மயானத்துக் கடவுளான் என்றெல்லாம் சொல்லிக் கொள்ளலாம் என்று இவ்வாறு அப்பர் பாடுகிறார் :—

*" மைப்படிந்த கண்ணாளும் தானும் கச்சி*
*மயானத்தான் வார்சடையான் என்னி னல்லால்*
*ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன்*
*ஓரூர னல்லன் ஒருவம னில்லி*

*அப்படியும் அந்நிறமும் அவ்வண் ணமும்*
*அவனருளே கண்ணுகக் காணி னல்லால்*
*இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்*
*இவன்இறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே."*

மனவருத்தங்களைத் தீர்த்து வைக்க மருந்தே கிடையாது. உள்ளத்து வேரூன்றி மூளையிலே தளிர் விடுகின்ற வாட்டங்களைத் தீர்த்து வைக்க வாகட நூல் உதவாது. நெஞ்சிலே கிழங்கு விடும் கவலைகளை அகழ்ந்தெடுக்க மருத்துவனுல் முடியாது. மனக் கவலையை மாற்றியமைக்க மாத்திரை கிடையாது. கவலையை ஒழித்து அமைதியடைய இறைவன் தாளையே நாம் பற்ற வேண்டும். இறைவனைத் தொழுது நாம் மனக் கவலையைப் போக்க வேண்டுமே தவிர வேறு வழியில்லை. அதுவன்றி நாம் மனக் கவலையை மாற்றல் அரிது என்று திருவள்ளுவர் கூறினர். நம் வாட்டத்தையும் மனக் கோட்டத்தையும் தீர்த்து வைப்பவன் நாம் நாட்டத்துக்கொள்ளும் நம்பன் இறைவனே என்பதை நாவுக்கரசரும் நலமுறக் கிளர்ந்துள்ளார். மனவருத்தங்களும் அவலக் கவலைக் கையாறுகளும் இறைவனைக் கொண்டே நாம் போக்க வேண்டியவையாயுள்ளன. மனத்தில் நிம்மதி நிலவவும், சாந்தம் சாரவும், அமைதியடையவும், நாம் ஆண்டவன் திருவடியையே கதியாகக் கொள்ளவேண்டும். இந்த உயிர் உடம்பில் உள்ளபோதே இறைவனுக்கு நாம் ஆளாகி, அவனுடைய திருவடிகளை நம்முடைய மனத் திருத்தி, மலர் தூவித் துதித்து வலஞ்செய்து வழுத்தினுல், நமது வாட்டங்களையெல்லாம் இறைவன் தீர்த்து வைப்பான். அரிச்சிராப்பகல் ஐவராலாட்டுண்டு சுரிச்சுக் கிடக்கும் நமது நெஞ்சம் நேர்பட்டு அங்கே அமைதி பிறக்கும் என்று பாடுகிருர் அப்பர் அடிகள் :—

"ஒட்டை மாடத்தி லொன்பது வாசலும்
காட்டில் வேவதன் முன்னங் கழலடி
நாட்டி நாண்மலர் தூவி வலஞ்செயில்
வாட்டம் தீர்த்திடும் வான்மியூர் ஈசனே."

கவலையில்லாதவர்கள் உலகத்திற் கிடையாது. அதிலும் ஆசை அதிகமாக வளர வளர உள்ளக் கவலைகளும் வெள்ளத்தனையவாய் மேன்மேலும் பெருகி வரும். அதிலும், கள்ளத்தனமாகிய வஞ்சகமும், இறைவன் உண்டோ இல்லையோ என்ற சந்தேகமும் இருக்கும் வரை கவலைகளும் இருந்துகொண்டே வரும். இவற்றைப் போக்குவதற்கு இறைவழிபாடும், தியானமும், தொழுகையும், முக்கரண சுத்தியோடு முக்கணனைப் பூசித்தலுமே சிறந்த வழிகளாகும். கவலைகள் நிரம்பிய உள்ளத்தில் சிவம் விளங்கிப் பேரின்ப உணர்வு உண்டாகாது. சமணர்களோடு கூடித் திரிந்த காலத்தில், திருநாவுக்கரசருக்கும் கவலைகள் கடல்போல் மண்டிக் கிடந்தன. வஞ்சகமும் ஐயமும் அவரை வாட்டியெடுத்தன. குடல் நோயும் குத்திக்கொண்டு கூடியெழுந்தது. அவர் தம் அக்கையாரான திலகவதியார் தேற்றத் தேறினார், தெளிந்தார். திருவதிகை வீரட்டானத்தை அடைந்தார். ஆண்டவனை அஞ்சலித்து அலறி விழுந்து அடிதொழுதார். ஆடினார். பாடினார்:—

"துன்பே கவலை பிணியென் றிவற்றை
நணுகாமல் துரந்து கரந் துமிழ்
என்போலிக ளும்மை யினித் தெளியார்
அடியார் படுவ திதுவே யாகில்."

என்று வேண்டினார். இறைவன் அவரை ஆட்கொண்டான். அவருடைய உள்ளம் குற்றங்கள் நீங்கிச் செம்மையடைந்தது. அவர் தூயவுள்ளத்திலே பேரறிவு விளக்கமும் அதனோடு உடனிகழ்கின்ற

பேரின்பவுணர்வும் உண்டாயின. கள்ளமும் ஐயமும் நிறைந்த தமது உள்ளத்துக் கவலை வெள்ளம் இன்பக் கடலாக எங்ஙனம் மாறிவிட்டது என்று விம்மிதம் கொண்டு பாடினார் அப்பர் :—

"தெள்ளத் தேறித் தெளிந்து தித்திப்பதோர்
உள்ளத் தேறல் அமுத வொளிவெளி
கள்ளத் தேன்கடி யேன்கவ லைக்கடல்
வெள்ளத் தேனுக் கெவ்வாறு விளைந்ததே."

(கடி - ஐயம்) தெள்ள என்பதனால் ஞானத்தில் சரியை யாகிய கேட்டல் அறிவு நிலையும், தேறி என்பதனால் ஞானத்தில் கிரியையாகிய சிந்தித்தல் அறிவு நிலையும், தெளிந்து என்பதனால் ஞானத்தில் யோகம் ஆகிய தெளிதல் அறிவு நிலையும், தித்திப்பதோர் உள்ளத் தேறலமுதவெளி ஒளி என்பதனால் பேரின்பம் உணரப் பெறும் ஞானத்தில் ஞானமாகிய நிட்டை அறிவு நிலை யும் கூறப்பெற்றன. இந்த நான்கு அறிவு நிலைகளும், முறையே ஒன்றன்பின்னொன்று ஏதுவும் பயனுமாய் அமைந்து, ஒவ்வொரு நிலையிலும் அருட்சத்தி பதிதல் மிகுந்து மிகுந்து நான்காவது நிலையில் நிறைவு அடைவதாயினும், சிவன் திருவருளால் திருநாவுக்கரச ருக்கு ஒரு சேர உடனே வந்து கூடுவதாயிற்று. அதற்கு ஏது அவர் முன்னமே முனியாகிச் சிவம் அடை யத் தவமுயன்றிருந்தார் என்பதும் ஈண்டு உணரப் படும். அந்நிலையில் அவர் ஆன்மாவின் உள்ளமும் சிவ கரணமாய் மாறி அறிவாற் சிவனேயாகி நின்றார். ஆகவே அவர் சிவனுடைய வியாபக அறிவுடன் இரண் டறக் கலந்து, சிவனுடைய எண் குணங்களும் பதியப் பெற்று,யாதொருகுறையும் இல்லாதவராய்த் திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்டவராய்ப் பேரின்பப் பெருவாழ்வு உடையவராய்ச் சீவன் முத்தராய்த்திகழ்ந் தார். பசுகரணம் நீங்கிச் சிவமாய்த் திகழ்ந்த அவ

ருடைய உள்ளத்தில் பேரின்பம் ஊறிப்பெருகியது. அது தெள்ளுதலினுலும் தேறுதலினுலும் தெளிதலினுலும் தித்திப்பதோர் உள்ளத்தேறலமுத வெளி ஒளியாய்ச் சுடர்விட்டு இலங்கியது. நோய் நீக்க மருந்தாய் உதவு கின்ற தேன், மலநோய் நீக்கத்தால் உண்டாகும் அறிவு விளக்கத்தைக் குறிப்பதாகும். இறப்பைத் தவிர்க்கின்ற அமுதம் நிலையான நித்தியமாயுள்ள இன்ப விளக் கத்தைக் குறிப்பதாகும். அப்பர் உள்ளத்தில் இவ்வாறு பேரறிவு விளக்கமும் பேரின்பப் பெருக்கமும் உண்டான வுடன் வஞ்ச ஆறுகளும் கவலைக் கடல்களும் வற்றி இல்லையாய்ப் போய் விட்டன. தாம் அடைந்த அனு பூதி நிலையை வெகு அழகாக எடுத்துக் கூறிவிட்டார் அப்பர் அடிகள். இவ்வாறு வஞ்சம் தீர்ந்து செம்மை பெறும் நெஞ்சிலே இன்பத்தேறல் ஊறிப் பெருகுமாம். அதைப் பதம் அறிந்து பற்ற வேண்டுமாம். பற்றிப் பருக வேண்டுமாம். பருகி உருக வேண்டுமாம். உருகி நைய வேண்டுமாம். அப்பொழுது ஆண்டவன் அருகிலேயே வந்து நின்றுவிடுவானும்:—

*" திருகு சிந்தையைத் தீர்த்துச்செம் மைசெய்து*
*பருகி யூறலைப் பற்றிப் பதமறிந்*
*துருகி நைபவர்க் கூனமொன் றின்றியே*
*அருகு நின்றிடும் ஆனைக்கா வண்ணலே."*

இறைவனுக்கு மலர்மிசை யேகினுன் என்று ஒரு பெயர் கொடுத்தார் திருவள்ளுவர்:—

*" மலர்மிசை ஏகினுன் மாணடி சேர்ந்தார்*
*நிலமிசை நீடுவாழ் வார்."*

இதற்குப் பலரும் பலவாறு பொருள் கூறினர். அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின் 'ஏகினுன்' என இறந்த காலத்தாற் கூறினுர் என்ருர் பரிமேலழகர். அப்பர் சுவாமிகளும்,

"ஆரொருவர் உள்குவார் உள்ளத் துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்"

என்று சிவபெருமானைக் குறிக்கின்றார். இக்கருத்தை உட் கொண்டே பரிமேலழகரும் அவ்வாறு விளக்கினார் போலும்.

மலர்மிசை யேகினான் என்பதற்கு மலரின்மேல் நடந்தான் என்று மணக்குடவர் பொருள் எழுதினார். பழைய உரை ஒன்றில், "அடியாரிடும் திருப்பள்ளித் தாமத்தின்மேல்எழுந்தருளியிருக்கும்சிவன் சீபாதத்தை மனசிலே பற்றவைத்தார் பூமியின்கண் சகல பாக்கியமும் அனுபவிப்பார் என்றவாறு" என்று விளக்கம் கொடுக்கப்படுகிறது. தாமரை மேல் உறைவது அருகக்கடவுள். ஆகையால் வள்ளுவர் மலர்மிசை யேகினான் என்றார் என்று சிலர் நினைப்பதும்கூறுவதும், உண்டு. சிவபெருமானும் தாமரைமேல் உறைபவர் என்பதை அப்பர் கூறியுள்ளார். அதைப் பின்வரும் பாடலிற் காணலாம்:—

"பிரியாத குணமுயிர்கட் கஞ்சோ டஞ்சாய்ப்
பிரிவுடைய குணம்பேசிற் பத்தோ டொன்றும்
விரியாத குணமொருகால் நான்கே யென்பர்
விரிவிலாக் குணநாட்டத் தாறே யென்பர்
தெரிவாய குணமஞ்சுஞ் சமிதை யஞ்சும்,
பதமஞ்சுங் கதியஞ்சுஞ் செப்பி னாரும்
எரியாய தாமரைமேல் இயங்கி னாரும்
இடைமருது மேவிய ஈச னாரே."

காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின் பிறவியைக் கடல் என்று கூறுவர். கடவுளுடைய திருவடியென்னும் புணையைச் சேர்ந்தவர்கள் பிறவியாகிய பெரிய கடலை நீந்துவர் என்றும், அதனைச் சேராதார் நீந்தமாட்டாராய் அதனுள் அழுந்துவர் என்றும் வள்ளுவர் கூறினார்:—

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்."

இதன் விளக்கமாகப் பழைய உரையொன்று கூறுவ தாவது :— 'பரமேசுவரனுடைய சீபாத கமலமாகிற தெப்பத்தைப் பிடித்தபேர் செனன சாகரம் நீந்திக் கரை யேறுவார் : அவரிட பாத தெப்பையைப் பிடியாத பேரெல்லாம் கரையேற மாட்டார்கள்.' இக்குறளி னுடைய கருத்தை உள்ளடக்கி அப்பர் அடிகள் ஒரு தேவாரம் பாடியுள்ளார் :—

"துன்பக் கடலிடைத் தோணித் தொழில்பூண்ட தொண்டர்தம்மை
இன்பக் கரைமுகந் தேற்றுந் திறத்தன மாற்றயலே
பொன்பட் டொழுகப் பொருந்தொளி செய்யுமப் பொய்பொருந்தா
அன்பர்க் கணியன காண்க ஐயாறன் அடித்தலமே."

இங்குப் பிறவிப் பெருங்கடலைத் துன்பக்கடல் என்றார். திருவையாற்றிலுள்ள சிவபெருமானின் திருவடிகளையே பற்றித் துதிக்கும் அடியார்களைத் "தோணித் தொழில் பூண்ட தொண்டர்" என்றார். முத்திநிலை யடைதலை இன்பக் கரை என்றார். இங்கே குறிக்கப்பட்ட தோணித் தொழிலை எவ்வாறு பூண்டு நடத்துவது என்பதை அப்பர் அடிகள் இன்னொரு பாடலில் மிகத் தெளிவாகக் கூறியிருப்பதும் இங்கே கருதத்தகும். நமது மனதையே தோணியாக அமைக்க வேண்டும். இத்தோணியைத் தள்ளுவதற்கு ஒரு கோல் வேண்டும் அல்லவா? நமது அறிவையே கோலாகக் கொள்ளவேண்டும். ஆனால் நமது மனதிலே பாரமாக ஏறியுள்ள சரக்கோ கோபம் என்பது. அதைச் சுமந்து கொண்டு பிறவியாகிய துன்பம் செறிந்த கடலிடைச் செல்லும்போது அவா, காமம் என்னும் பாறைகள் தாக்கித் தோணியைக் கவிழ்த்துவிடும். ஆகவே அந்தச் சினமாகிய சரக்கைத் தோணியி லிருந்து தள்ளிவிட்டு, இறைவன் திருவடித் தியான

மாகிய சரக்கையேற்றினுல்,ஆசாபாசங்களாகிய பாறைகளிற் சென்று தாக்குண்ணுது இன்பக் கரையைச் சென்றடையலாம். "ஆதலால், இறைவனே! உன்னை இடைவிடாது நினைக்கும்படியான அறிவை அடியேனுக்கு நீ நல்கவேண்டும். திருவொற்றியூர் உறையும் உத்தமனே! என் கோவே! உன் திருவடியை நினையாது நான் தோணித் தொழிலை மேற்கொண்டால், சினமாகிய சரக்கையும் தள்ள முடியாது. மதன் என்னும் பாறையையும் தப்ப முடியாது. படகு கவிழும் போது அறிவும் இழந்து தெரியாது போவேன்." என்று உருகிப் பாடுகிறுர் அப்பர் :—

"மனமெனும் தோணிபற்றி மதியெனும் கோலை யூன்றிச்
சினமெனும் சரக்கையேற்றிச் செறிகடல் ஓடும் போது
மதனெனும் பாறைதாக்கி மறியும்போ தறிய வொண்ணு(து)
உனையுனும் உணர்வை நல்காய் ஒற்றியூ ருடைய கோவே."

(மதன்—மன்மதன், செருக்கு, மடமை, கலக்கம்.)

ஒருவன் நினையும் நினைவுகளே அவனுடைய வாழ்க்கையாக வந்து பொருந்தும். ஒருவனை எடுப்பதும் கெடுப்பதும் நினைவுதான். ஆகவே அந்த நினைப்புக்குக் களனுகவுள்ள மனதைத் தோணியாக உருவகித்தார். அவன் உடல் ஒரு பொருளுமாகாது என்பது இதனுல் பெறப்படும். தோணி துறைமுகத்தைப் பிடிக்க வேண்டுமானுல், அதில் விலக்கப்படும் பொருள்கள் (Contraband goods) ஒன்றும் இருத்தல் ஆகாது. இருந்தால் சுங்க அதிகாரிகள் பிடித்துக்கொள்வார்கள். மதன் எனும் பாறையைச் சுங்க அதிகாரிகள் அல்லது சுங்கச்சாவடி (Customs) யாகக் கொள்ளலாம். சினம் எனும் சரக்கு விலக்கப்படும் பொருள். இதை மனம் எனும் தோணியில் ஏற்றிச் சென்ருல் மதன் எனும் பாறை இடித்துக்

கவிழ்த்துவிடும். தோணி முத்தி யென்னும் துறையை (Haven or Harbour) அடைய முடியாது.

ஒன்றனைத் துன்பம் என்று கண்டவிடத்து அதனை உடனே ஒழித்துக்கட்ட வேண்டுமே தவிர, அதனை கட்டிக்கொண்டு அழுவதாற் பயன் இல்லை. துன்பம் ஒரு நாளும் இன்பமாக மாறப் போவதில்லை. இவ்வுலகில் நாம் ஆசைப்பட்டுப் பட்டு அடைவது அத்தனையும் தொல்லையாகவே முடிகிறது. பிறப்பு என்பது பேசற் கரிய துயரங்கள் நிறைந்ததொன்று. கிருமி மலம் சேர்ந்த பாண்டம் இவ்வுடல். அதனுள்ளே உயிர் வந்து கூடியிருப்பது அருவருக்கத் தக்க இகழ்ச்சியான ஒரு காரியம். அங்கே ஐம்பூதங்களினுடைய ஆட்டத்திற்கும், ஐம்புலன்களுடைய சேட்டைக் கும், ஐம்பொறிகளினுடைய அட்டகாசத்திற் கும், பித்தவாத சிலேப்பனங்களின் அதிகாரத் திற்கும் அடிமைப்பட்டு, உயிரானது தன் சுதந்திரம் இழந்து ஒளி குன்றி, எண்ணிலா நோய்களுக்கும் ஆளாகிறது. இன்ன நேரம் என்றில்லாமல், இடி விழுந்ததுபோல் இறப்புவந்து சாடுகிறது. இல்லையேல், முப்பு வந்து மூடுகிறது. ஆகவே உலக வாழ்க்கையை யும் பிறவியையும் இழித்தொழிக்க வேண்டும் என்கிறார் அப்பர் அடிகள்:—

*" நடுவிலாக் காலன் வந்து நணுகும்போ தறிய வொண்ணா*
*அடுவன அஞ்சு பூதம் அவைதமக் காற்ற லாகேன்*
*படுவன பலவுங் குற்றம் பாங்கிலா மனிதர் வாழ்க்கை*
*கெடுவதிப் பிறவி சீசீ கிளரொளிச் சடையி னீரே."*

இவ்வுலகத்திலே உண்மையாக ஒருவன் வேண்டக் கூடியது ஒன்று உண்டாயின், அது பிறவாமையே யாகும். பிறவாதிருக்க வரம் தரவேண்டும் என்றுதான் பெரியோர்கள் எல்லாரும் இறைவனை வேண்டுவர்.

வேண்டாமையை ஒருவன் மேற்கொள்ளும் பொழுது தான் பிறவாமை கைகூடும். ஒருவன் உலகத்தில் வேண்ட வேண்ட, அவா அல்லது ஆசை அதிகரிக்கிறது. இந்த அவா பிறப்புக்கு வித்தும் ஆகிறது. ஆகவே பிறப்பை வளர்க்கக்கூடிய அவா என்னும் வித்தினை நாம் விதையாவிடில் மேலும் பிறவி தோன்ருது என்பதைத் திருவள்ளுவர்கண்டுகூறினுர்:-

''வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.''

இந்த ஆசையை அறுத்துப் பிறவாமையை அடைவதற்கு ஒரே வழிதான் உண்டு. அதுவே சிவநாமத்தை உச்சரிப்பதாகும். இடைவிடாது இறைவன் நாமத்தை ஓதவேண்டும் என்கிருர் அப்பர் அடிகள்:—

''பேர்த்தினிப் பிறவா வண்ணம் பிதற்றுமின் பேதை பங்கன்
பார்த்தனுக் கருள்கள் செய்த பாசுபதன் திறமே
ஆர்த்துவந் திழிவதொத்த அலைபுனல் கங்கை யேற்றுத்
தீர்த்தமாய்ப் போதவிட்டார் திருச்சோற்றுத் துறையனுரே.''

ஒருவன் எவ்வளவு பணக்காரனுய் இருந்தாலும், மேன்மேலும் ஆசை அவனுக்குப் பெருகிக்கொண்டே போகிறது. அது வேண்டும், இது வேண்டும், அதை விளக்கவில்லையே இதை வளக்கவில்லையே அதை ஆக்கவில்லையே, இல்லையே இல்லையே என்று மேலும் அலைகிருன். இல்லை என்பது தரித்திரம். ஆகையால் அவனைப்போல் தரித்திரம் வாய்ந்தவன் வேறு இல்லை என்பது புலனுகிறது. ஒருவன் ஒன்றும் இல்லாதவனுய் வறுமையுற்றிருந்தாலும், ஒன்றும் வேண்டியதில்லை என்று ஏக்கமற்றிருந்தானுகில், அவனைவிட மேலான செல்வந்தன் இவ்வுலகிலும் வேறு எவ்வுலகிலும் கிடையாது. போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து என்பார்கள். குறைவற நிறைந்த மனநிறைவும்

அமைதியுமே மாற்றறியாத பசும் பொற்கட்டி. ஆகவே, வேண்டாமையை விழுச்செல்வம் என்ருர் வள்ளுவர். செல்வம் என்பது ஒருவனுடைய கையிலுள்ள காசல்ல; அவன் பையிலுள்ள பணமல்ல; அவன் கொண்டுள்ள வேண்டாமை என்னும் மனநிலேயே மேலான செல்வம்.

இவ்விதம் பிறவாமையை நாடுதற்கும், ஆசையை அகற்றுவதற்கும் நிலேயாமையை நன்கு உணர வேண்டும். மண்ணுலகத்திலிருந்து ஒருவன்மேல் எழும்பிப் பொன்னுலகத்திற்குச் சென்று கொண்டிருந்தான். வழியில் பொன்னுலகத்திலிருந்து இழிந்து வரும் ஒருவன் அவனேக்கண்டான். அவன் மண்ணுலகத்தவன் என்பதைத் தெரிந்து கொண்டு, "ஐயா! மண்ணுலகம் எதற்குப் பெயர் பெற்றது? அங்குள்ள சிறப்பு என்ன? அதன் பெருமை யாது?" என்று வினுவினுன். அதற்கு அந்த மனிதன் என்ன பதில் சொன்னுன் தெரியுமா? இங்குள்ள மனிதனின் அறிவாற்றலேயோ அணுக்குண்டு ஆராய்ச்சியையோ, கோயில் குளங்களின் மகிமையையோ எடுத்துக் கூற வில்லே. அவன் கூறியதாவது: "ஐயா, அங்குச் சுடுகாட்டின் பெருமையே பெரியதொரு பெருமையாய் அருமையாய் விளங்குகிறது" என்ருன். ஆம்; நேற்று இருந்தவன் இன்று கூற்றுக்கு இரையாகிருன். இந்த இறப்பாகிய ஒரு நிகழ்ச்சியே உலகில் பெரிதாக இருக்கிறது. இயமனுடைய பெருமையே பெருமை. இந்தப் பெருமையே உலகத்தின் பெருமை என்கிருர் திருவள்ளுவர்:—

"நெருநல் உளனெருவன் இன்றில்லே என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு."

(நெருகல்—நேற்று.)

"நேற்று இருந்தவன் இன்று இல்லாது போனுல் போகட்டும்: நமக்கு ஏன் அதைப் பற்றிக் கவலை? நேற்றும் நாம் இருந்தோம், இன்றும் இருக்கிரும், என்றும் இருப்போம்" என்று சிலர் நினைத்து இறுமாந்து விடக்கூடாதே என்று அஞ்சினுர் அப்பர் அடிகள். இவ்வாறு எண்ணிறந்தபேர் அறியாமையில் அழுந்தி அவலப்படுவதையும் கண்கூடாகக் கண்டார். "ஐயோ! நேற்று உள்ளவன் இன்று இல்லை என்பதன் உண்மைப் பொருளை உணராதிருக்கிறீர்களே. இன்று இருந்தவர் தாமும் நாளை இல்லை. இன்று உள்ள நாம் நாளை இருப்பது நிச்சயம் இல்லை. இன்றுள்ளவன் நாளை இறப்பது திண்ணம். இதை அறியாது திரிவோர் மடையர்கள். ஆதலால் இன்றே இறைவன் தாளைச் சரண் அடையுங்கள்" என்று சாற்றினுர் அப்பர் அடிகள்:-

"இன்றுளார் நாளை இல்லை எனும்பொருள்
ஒன்றும் ஓரா தழிதரும் ஊமர்காள்
அன்று வானவர்க் காக விடமுண்ட
கண்டனுர் காட்டுப் பள்ளிகண் டுய்ம்மினே."

"இன்றுளேன் நாளையில்லேன் என்செய்வான் தோன்றினேனே"

"பொய் வாழ்வே வாழ்ந்து பொய்யாக நடிக்கும் பொய்யர்களே! வெட்கங்கெட்டவர்களே! சத்தியமாக ஒவ்வொருவனும் சுடலைக் காட்டை நோக்கியே வழி நடக்கிருன்" என்று அப்பர் ஆணையிட்டு அறைவதைப் பாருங்கள் :—

"நடலை வாழ்வுகொண் டென்செய்தீர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலி னஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலி னுர்கிடந் தூர்முனி பண்டமே."

ஒருவன் எவ்வளவு பெரியவனுய் வாழ்ந்தாலும், உயிர் பிரிந்த பின், சவம் என்றும் பிணம் என்றும் திட்டப்படுவான். மக்கள் எல்லாரும் மூக்கிலே விரலே வைத்து மூடிக்கொண்டு நாற்றம் தாங்காமல் நகன்று விடுவார்கள். மனிதன் வாழ்க்கைக்கு எத்தகைய இழிவான முடிவு காத்திருக்கிறது, பாருங்கள் !

இவ்வாறு உலகில் ஒவ்வொருவருக்கும் நாளே நாள் நமனுடை நாளாக இருக்கிறது. நாளே வரை ஏன் நாம் நீட்ட வேண்டும்? காலேயிலுள்ளவன் கடிப்பொழுதிற் காணும்ற் போகிறுன்: அல்லது முன்வேளேயிலேயே முடிந்து போகிறுன். உச்சிப் பொழுதில் உள்ளவன் பின்வேளேக்குள் உடைந்து போகிறுன். மாலேப் பொழுதிற் கண்டவன் இரவுக்குள் மாய்ந்துவிடுகிறுன். இரவிலுள்ளவன் விடிவுக்குள் இறந்து விடுகிறுன். ஒவ்வொருவனுக்கும் அடுத்த விஞடியில் என்ன நடக்கும் என்பது தெரியாது. திடீர் மாரடைப்பால் திண்ணென்று விழுந்து விடுகிறுன். இமைப்பொழு தளவில் சாதல் வந்து சாடுகிறது: பிறத்தல் வந்து பின்னுகிறது. ஒரு பொழுதளவுகூட உயிர் நிலேத்து நிற்கும் நிச்சயம் இல்லே. ஆனுல் மனிதனே கோடிக் கணக்கான எண்ணங்களேயும் நினேவுகளேயும் மனதிலே புகுத்தி ஓட்டம் காண்கிறுன். இத்தகை யோரை நோக்கித் திருவள்ளுவர் சிரிக்கிறுர் :—

"ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியும் அல்ல பல."

இத்திருக்குறளே மனதில் வைத்துக்கொண்டு. அப்பர் அடிகள் திருநெய்த்தானத்துத் திருத்தாண்டகம் முழுவதையும் பாடியுள்ளார். அப்பாடல்களில் மக்கள் மனதிலே மண்டியெழுகின்ற பேராசைப் பேயெண்ணங் களின் பேதைமையைப் பேசிப் பேசிக் கண்டிக்கும்

அழகு நேர்த்தியாயிருக்கும். அவற்றில் மக்கள் உய்யும் நெறியினை, உண்மை நெறியினை, உளங்குளிர எடுத்து உணர்த்தவும் செய்கிறார். நிலையாமையை நீள எடுத்துக் கூறுகின்றார். ஒவ்வொருவரும் அப் பதிகம் முழுதையும் பாராயணம் செய்து பயன் எய்த வேண்டும். எடுத்துக்காட்டாக ஒரு பாடலை மட்டும் இங்கே குறிப்பிடலாம் :—

*" தினைத்தனையோர் பொறையிலா வுயிர்போங் கூட்டைப்*
*பொருளென்று மிகவுன்னி மதியா லிந்த*
*அனைத்துலகும் ஆளலாம் என்று பேசும்*
*ஆங்காரந் தவிர்நெஞ்சே யமரர்க் காக*
*முனைத்துவரு மதில்மூன்றும் பொன்ற அன்று*
*முடுகியவெஞ் சிலைவளைத்துச் செந்தீ மூழ்க*
*நினைத்தபெருங் கருணையன்நெய்த் தானம் என்று*
*நினையுமா நினைந்தக்கால் உய்ய லாமே."*

மும்மலங்களின் முனைப்பினால் அகங்கரித்து அழிந்துபடும் அளவில், பல்லுயிர்களையும் கருணையினால் காத்தளித்து முப்புரங்கள் போல் மும்மலங்களையும் சுட்டழித்துச் சுகம் பெருக்கும் சிவனே நமக்கு உய்யும் நெறியாவான் என்பதை அப்பர் அழகாகக் கூறுகிறார் இப்பாடலில்.

இவ்வாறு எது நம்முடைய நாள் ? எது நமனுடைய நாள் ? என்று தெரியாமல், இம்மியளவும் நம்மால் ஆக்கவும் அழிக்கவும் உரிமையின்றி அறுபத்துநான்கு வகை நோய்களுக்கும் ஆளாகி அல்லற்படுகிறோம். நோய்கள் என்றாலோ, அறுபத்து நான்கு மட்டுமல்ல. அவற்றின் வகை, தொகை, விரிகள் எண்ணிறந்தனவாய்ப் பல்கிக் கிடக்கும். இவற்றினிடையிலே நிறுத்தியுங்கூட, நிலைத்துவிடலாம் என்று நிமிர்ந்து பார்க்கிறான் மனிதன். இறைவனுடைய திருவடியை மறந்து விடுகிறான். அவ்விதம் மறப்பதால் அவன்

படும் அவதிக்கோ அளவில்லை. அவ்வளவு இன்னலுக்கு ஆளாகியும், இறைவனுக்கு ஆளாகும் புத்தி அவனுக்கு உண்டாவதில்லை. ஈசன் கழலை மறவாது அடைந்தவர்களே பிழைக்கலாம் என்று வற்புறுத்துகிறார் அப்பர் :—

"நாளும் நம்முடை நாள்கள் அறிகிலோம்
ஆளும் நோய்களோர் ஐம்பதோ டாறெட்டு
ஏழை மைப்பட் டிருந்துநீர் நையாதே
கோளி லியரன் பாதமே கூறுமே."

(ஐம்பதோடு ஆறுஎட்டு — அறுபத்து நான்கு; அல்லது, ஆறும் எட்டும் நாற்பத்தெட்டாகப் பெருக்கித் தொண்ணூற்றெட்டு (98) என்றும் கொள்ளலாம்.)

ஆதலால், அப்போதைக்குப் பார்த்துக் கொள்ளலாம் என்று ஏமாறாது, எப்போதைக்கும் வரக்கூடிய சாவு இப்போதைக்கும் வந்துவிடக்கூடும் என்பதை நன்குணர்ந்து, நாம் செய்யக்கூடிய நல்ல வினைகளுக்குள்ளெல்லாம் மிக நல்ல வினையான இறை வழிபாட்டை இன்றே, இப்பொழுதே, நம் கைகால் திடமாயிருக்கும் பொழுதே செய்தல் வேண்டும். பேச்சுத் திறமை இருக்கிற பொழுதே நாத்தழும்பேற இறைவன் நாமத்தை ஓதவேண்டும். நோயும் மூப்பும் தளர்ச்சியும் வந்து, நாக்கை உள்ளே இழுத்து, விக்கல் மேலே கிளம்பிப் பஞ்சால் ஊற்றியபால் கடைவழி யொழுகிக் கண்ணடைக்கும் பொழுது, இறைவனை நினைக்கவும் அழைக்கவும் இயலாதுபோகும். இதனைத்திருவள்ளுவர் கூறினார் :—

"நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்."

இங்கே நல்வினை என்று வள்ளுவர் பொதுப்படக் கூறியதனை, சிவபெருமானை ஒவ்வொரு நாளும்போற்றி

வணங்குதல் நல்ல வினை என்றும், நோய் நொடியில்லா திருக்கிற இளமைப் பருவத்திலேயே அந்த நல்ல வினையைச் செய்தால் நல்லதாகும் என்றும், கண்கெட்ட பிறகு சூரிய வணக்கத்தாற் பயனில்லையாதலால், முன்னரே முனைவன் பாதம் பணியவேண்டும் என்றும் மேற்கண்ட குறளுக்கு விளக்கம் தருவதுபோல் அப்பர் பாடியிருப்பது நோக்கத்தகும்.

"கேளு மின்இள மையய து கேடுவந்
தீளை யோடிரு மல்லது எய்தன்முன்
கோள ராவணி கொண்டீச் சுரவனை
நாளும் ஏத்தித் தொழுமின்நன் காகுமே."

இவ்வாறு இறைவனுடைய திருவடித் தியானத்தைக் கைக் கொள்பவர்கள் கடுந்தவம் செய்பவர்களாதல் வேண்டும். தவத்திற்குப் பல வகை நோன்புகள் உள. பசி முதலிய பல துன்பங்களைப் பொறுத்தல் வேண்டும். பல வகைப் பொருள்களிடத்தும் கொண்ட பற்றுக்களைச் செற்றுக் களைதல் வேண்டும். அவற்றால் வரும் துன்பங்கள் தம்மை வருத்தும்பொழுது, அவற்றைப் பொறுத்துத் தாங்குதல் வேண்டும். அப்பொழுது புடம்போட்ட தங்கம் களங்கம் நீங்கிப் பளிச்சிடுவதுபோல், ஞானம் ஒளிவிட்டு நிற்கும். மெய்ப்பொருளை உணரும் மெய்ஞ்ஞானம் மேம்பட்டு விளங்கும். இதனைக் குறள் கூறுகிறது:—

"சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு."

தேவாரமும் நமக்கு இதனைத் தெரிவிக்கிறது. தங்கத்தைத் தீயிலே போட்டுச்சுத்தப்படுத்துதல்போல் மனத்தை நோன்புத் தீயிலே போட்டு அதன் மாசினை அகற்றுதல் வேண்டும். நோன்புகளின் வெப்பத்திலே தான் மனம் செப்பமுற வேண்டும். அவ்வாறு செம்மை

நலம் பெற்றவர்களே சிவனைத் தொழுது வினைகளைப் போக்க முடியும். எப்பற்றையும் நீக்கிச் சிவப்பற்றுக் கொள்வார்க்கே மனம் மாசு நீங்கிச் செம்மையடையும். வினைகளும் வெந்தொழியும். இதனை அப்பர் எவ்வாறு கூறுகிறார் பாருங்கள்:—

"வெப்பத் தின்மன மாசு விளக்கிய
செப்பத் தாற்சிவன் என்பவர் தீவினை
ஒப்பத் தீர்த்திடும் ஒண்கழ லாற்கல்ல(து)
எப்பற் றும்மிலன் எந்தை பிரானிரே."

உலகப்பற்றுக்களைத் துறத்தலே துறவு என்னப் படும். பற்று, அகப்பற்று புறப்பற்று என இருவகைப் படும். மண் பெண் பொன் என்னும் செல்வங்களிடத்தே ஆசை வைத்தல் புறப்பற்றாகும். உடம்பினிடத்தே பற்றுக்கொள்ளுதல் அகப்பற்று. இவ்விருவகைப் பற்றுக்களையும் அவற்றின் நிலையாமை கருதி விடுதலே துறவு என்பது. செல்வம் நிலையாமையைக் கொண்டு சுற்றத்தாரிடத்தே செல்லும் பற்றையும் களைந்தெறிய வேண்டும். உலகத்தின் தன்மை எவ்வாறு இருக் கிறது? செல்வம் உள்ளவனை எல்லாரும் போற்றி மகிழ்ந்து கலந்து உறவாட எண்ணுவர். செல்வம் இல்லாதவனை எல்லாரும் வெறுத்து ஒதுக்குவர்.

"இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு."

என்பது குறள். வறுமையுள்ளவனை 'வா' என்றுகூடக் கேட்க மாட்டார்கள். தெரிந்ததாகவும் காட்டிக்கொள்ள மாட்டார்கள். பெற்ற தாய்கூட அவனை உற்ற பிள்ளை யாய் உறவாடாது மற்றப் பிள்ளையாய் மாறுகொள்ளு வாள். இதனைத் திருவள்ளுவர்கூறுகிறார்:—

"அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்."

இவ்வுண்மையைக்கொண்டு அப்பர் சுவாமிகள் உலக மக்களைச் சிந்திக்கச் சொல்கிறார். "மனிதர்காள்! நீங்கள் நன்றாக எண்ணிப் பாருங்கள். இன்று நீங்கள் உற்றார், உறவினர், சுற்றத்தார் என்று கொண்டாடும் அனைவரும் உங்களிடத்தில் அன்பு கொண்டவர்களா? அல்லது, உங்கள் கையிலுள்ள பணத்திலே கண்ணுள்ளவர்களா? உங்கள் செல்வம் நீங்கி நீங்கள் துன்ப நிலையாகிய வறுமை நிலையை யெய்தி விட்டால் உங்களைத் தெரிந்ததாகக்கூடச் சொல்லமாட்டார்கள். அவர்கள் அப்பொழுது உங்கள் அருகிற்கூட வர மாட்டார்கள். நம் கையிலுள்ள செல்வமோ 'செல்வம் செல்வம்' என்று செல்லா நிற்கும். ஆகையால் நீங்கள் உங்கள் செல்வத்திடத்தும் சுற்றத்திடத்தும் வீணே பற்றுவைப்பதாற் பயன் என்ன? இறைவனிடத்தே பற்றுக் கொண்டால் உங்களுக்குச் சிவலோகம் சித்திக்கும். இறைவனையே நம்புங்கள். எந்நிலையினும் அவன் நம்மைக் கைவிடமாட்டான். அவனே நமக்குக் கதியாவான்" என்று அறிவுறுத்துகிறார் அப்பர்:—

"மாடு தானது இல்லெனின் மானுடர்
பாடு தான்செல்வா ரில்லை பன்மாலையாற்
கூட நீர்சென்று கொண்டீச் சுரவனைப்
பாடு மின்பர லோகத் திருத்துமே."

மாடு - செல்வம்.

பிறப்பறுக்கலுற்ற துறவிக்குப் புறப்பற்றாகிய செல்வம் விடுதல்போல, அகப்பற்றாகிய உடம்பினிடத்து ஆசையும் அழிய வேண்டும். துறவியானவன் உடம்பினிடத்துப் பற்றுக்கொள்ளுதல் கூடத் தவறாகும். எல்லாப் பற்றுக்களையும் எடுத்தெறிய வேண்டும் என்னும் பொழுது, உடம்பினிடத்துமட்டும் எவ்வாறு அவன் பற்று வைக்கலாம்? இந்த உடம்பை ஒழிப்பதுதானே பிறவியறுப்பது?

"மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்
உற்ருர்க்கு உடம்பு மிகை."

என்ருர் திருவள்ளுவர். உடம்பும் மிகையாம்; ஏனெனில், உடம்பினிடத்தே பற்றுக்கொண்டால், அதன் வழியாக மற்றப் பற்றுக்கள் எல்லாம் முளைவிட்டு முன்னுக்கு வந்து விடும். ஆகவே அதுவும் கூடாது. இந்த உடம்பினிடத்தேயுள்ள பற்றும் அப்பர் அடிகளுக்கு அறவே தொலைந்து விட்டது. தமது பொன்ஞன உடம்பையும் அவர் மண்ணுகவே மதித்தார். மண்ணிலிருந்து வந்ததுதான் இந்த உடல். அது மண்ணோடு மண்ணுய் மண்ணைத்தான் அடையும் என்ற எண்ணத்தையும் விட்டு நாம் மினுக்கித் திரிகிருேம். அப்பரோ உடலை மதிக்கவே இல்லை. அவருடைய பற்றெல்லாம், ஆசையெல்லாம், அன்பெல்லாம் ஆண்டவன் ஒருவனையே குறித்து நின்றன. அவரே பாடுகிருர் பாருங்கள்:—

"அங்கத்தை மண்ணுக் காக்கி ஆர்வத்தை உனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன் பரமா நின்னைச்
சங்கொத்த மேனிச் செல்வா சாதல்நாள் நாயேன் உன்னை
எங்குற்ருய் என்ற போதா இங்குற்றேன் என்கண் டாயே."

பற்றுக்கள் அனைத்தும் ஒழிந்து போவதற்கு ஓர் உபாயம் கூறினுர் திருவள்ளுவர். வேண்டுதல் வேண்டாமையில்லாது பற்றற்றவனுகிய பரம்பொருளினிடத்து நீங்கள் பெரும் பற்றுக் கொண்டால், ஏனைப் பற்றுக்கள் எல்லாம் புல்லியனவாய்த் தோன்றிவிடும். அவற்றின் சிறுமை நோக்கியும், நிலையாமை கருதியும் தாமே நீங்கிவிடும். நாமும் வெறுத்து ஒதுக்கி விடுவோம். இறைவனுடைய பற்று ஒன்றுமே நிலையாக நம்மைப் பிடித்து நிற்கும். ஆகவே பற்றுக்கள் போக இறைவனைப் பற்றுக என்ருர்:—

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

இறைவனிடத்துக் கொண்ட பற்று அன்றி வேறு எவ்வகைப் பற்றும் அப்பர் சுவாமிகளுக்கு இருந்த தில்லை. இக்குறளை நினைந்து கொண்டே அப்பர் பாடுகிறார்:—

"கைப்பற் றித்திரு மால்பிர மன்னுனை
ஏப்பற் றியறி தற்கரி யாயருள்
அப்பற் றல்லது மற்றடி நாயினேன்
எப்பற் றும்மிலேன் எந்தைபி ரானிரே."

ஒருவன் இல்லறத்திலிருந்து உலகில் அனுபவிக்க வேண்டியவற்றை யெல்லாம் ஆர்ந்து அனுபவித்துத் துறவுள்ளம் கொண்டு துறவியாக வேண்டும் என்பது தமிழ் மரபு. அப்பொழுது எப்பொருட் கண்ணும் பற்றற்ற மிகுதிநிலை தோன்று நிற்கும் இதனைக் "காம நீத்த பாலினானும்" என்று குறிப்பிட்டார் தொல்காப்பியர். அதையே பொய்தீர் ஒழுக்க நெறி யென்றும், அந்நெறியை இறைவனே வகுத்துக் கொடுத்தான் என்றும், அதைக் கடைப்பிடித்து ஒழுகு வோர் நெடுநாள் இனிது வாழ்ந்திருப்பர் என்றும் திரு வள்ளுவர் கூறினார்.

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்."

இப் பொய்தீர் ஒழுக்க நெறியைத் துறவுநெறி என்று சைவ சமயம் கூறும். சிவபெருமானே இத் துறவுநெறியை அமைத்தான் என்று அப்பர் கூறுகிறார். இறைவன் துறவுக்கோலத்திலிருந்து தவம் செய்ததும், ஆலின் கீழிருந்து நால்வர்க்கு உபதேசம் செய்த தும் இவ்வுண்மையை வலியுறுத்துவனவாம்.

சிவபெருமானே எண்ணிலா வுயிர்களைப் படைத்து எழு வகைப் பிறப்புகளையும் விதித்து, அவ்வவற்றின் வினைக்கீடாக அவ்வுயிர்கள் சென்றடையும் கதிகளையும் அமைத்து, காமம் முதலிய ஐந்து குற்றங்களும் நீங்கிய சிறந்த சைவ நெறியையும் வகுத்து, பற்றுக்களை அறுத்துச் சிறப்புறுவதாகிய துறவு நிலையையும் இயைத்து, அத் தவநெறியின் முடிவும் பயனுமாகத் தனது திருவடியை வந்தடையும் இன்ப நிலையையும் காட்டினுன் என்று அப்பர் விளக்கிப் பாடியுள்ளார் :—

*"உற்றலவு பிணியுலகத் தெழுமை வைத்தார்*
*உயிர்வைத்தார் உயிர்செல்லுங் கதிகள் வைத்தார்*
*மற்றமரர் கணம்வைத்தார் அமரர் காணு*
*மறைவைத்தார் குறைமதியம் வளர வைத்தார்*
*செற்றம்மலி யார்வமொடு காம லோபஞ்*
*சிறவாத நெறிவைத்தார் துறவி வைத்தார்*
*நற்றவர்சேர் திருவடிஎன் தலைமேல் வைத்தார்*
*நல்லூரெம் பெருமானுர் நல்ல வாறே."*

அநாதியாக வரும் அவிச்சை அல்லது அஞ்ஞானம் என்னும் மயக்கமும், அதுபற்றி யான் என மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கு இது வேண்டும் என்னும் அவாவும், அதுபற்றி அப்பொருட்கண் செல்லும் ஆசையும், அதுபற்றி அதன் மறுதலைக்கண் செல்லுங் கோபமும் எனக் குற்றங்கள் ஐந்து ஆகும். இவற்றை வடநூலார் பஞ்சக்கிலேசங்கள் என்பர். இவைகள் உலகப் பரப்பின்கண் உள்ள உயிர்கள் அனைத்தையும் பிடித்து வாட்டி வருகின்றன. இறைவனைச் சிக்கெனப்பற்றி நின்று இவற்றின் கட்டுக்களைக் களைந்தெறிய வேண்டும். அக்குற்றங்கள் அப்பர் சுவாமிகளையும் வந்து வருத்தி அகப்படுத்த முயன்று பார்த்தன. அப்பர் திருவாரூர் இறைவனைச் சார்ந்து நின்று, அவற்றை வென்ற நிலையை ஒரு பாடலில் குறித்திருப்பது இங்கே கருதத்தகும் :—

"பொங்குமத மானமே ஆர்வச் செற்றக்
குரோதமே லோபமே பொறையே நீங்கள்
உங்கள்பெரு மாநிலத்தின் எல்லை யெல்லாம்
உழறுமிது குறைமுடிப்பீர்க் கரிதே யானேல்
அங்கமலத் தயனொடுமா லாகி மற்றும்
அதற்கப்பால் ஒன்றாகி அறிய வொண்ணாச்
செங்கனகத் தனிக்குன்றைச் சிவனை யாரூர்ச்
செல்வனைச் சேர்வேன் நும்மாற் செலுத்துணேனே."

இவ்வைந்து குற்றங்களுள் அகங்காரம் மயக்கத்தின் கண்ணும், அவாவுதல் ஆசைக்கண்ணும் அடங்கி, ஐந்து மூன்றாகவும் நிற்கும். அவை மூன்றும் காமம் (விழைவு), வெகுளி (வெறுப்பு), மயக்கம் (அவிச்சை), எனப்படும். இம்மூன்றும் ஒருங்கே ஒழிந்த வழி வினைகளெல்லாம் உயிரைப் பற்றாது அறவே அழிந்துவிடும் என்கிறார் திருவள்ளுவர் :—

"காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்."

இங்கே நோய் என்றது வினையை. இம்மூன்று குற்றங்களும் அறவே அற்றுப்போக வேண்டும் என்பார் அவற்றின் பெயர்கூடத் தோன்றலாகாது என்றார். இடையறாத தவம் நோன்புகள் ஞான யோகங்கள் ஆகிய நெருப்பைக் கொண்டு இக்கொடிய குற்றங்கள் அணுகாதபடி சுட்டுப் பொசுக்க வேண்டும்.

இவை மூன்றன் பெயரும் இல்லாதபடி அவற்றைக் களைந்து நின்று வினையை வென்றவர் திருநாவுக்கரசர். பிறப்பினால் வரும் பிணிகள் நோக்கியும், இறப்பினால் வரும் இழப்பு நோக்கியும் இளமையிலேயே உலக நிலையாமை யுணர்ந்து, இறவியொடு பிறவியறத் துறவியானவர் திருநாவுக்கரசர். அவர் பிறப்பினை வெறுத்து ஒதுக்கினார். அறநெறியையே மனத்தால்

விரும்பி மேற்கொண்டார். காமத்தைக் கடிந்தார். வெகுளியை வெறுத்தார். மயக்கத்தை மாய்த்தார். இறைவனையே சார்ந்து நின்று அவன் திருவடியைச் சார்பாகப் பற்றினர். வெற்றி கண்டார். அவரே இதைப் பாடியுள்ளார் :—

"பிறத்தலும் பிறந்தாற் பிணிப்பட வாய்ந்தசைந் துடலம்
புகுந்து நின்று
இறக்கு மாறுளதே யிழித்தேன் பிறப்பினை நான்
அறத்தையே புரிந்த மனத்தனய் ஆர்வச் செற்றக்
குரோதம் நீக்கியுன்
திறத்தனு யொழிந்தேன் திருவாரூர் அம்மானே."

இதில் காமத்தை ஆர்வம் என்றும், வெகுளியைச் செற்றம் என்றும், மயக்கத்தைக் குரோதம் என்றும் கூறினர். காமம் வெகுளி மயக்கங்களின் பெயரும் கெடவேண்டும் என்ற திருவள்ளுவரின் ஆணையைப் பொருள் அளவிற் கொண்டதோடல்லாமல், சொல்லளவிலும் அப்பர் கொண்டு விட்டார் என்னும்படி, அவற்றை அப்பெயர் கொண்டே குறியாது, ஆர்வம் செற்றம் குரோதம் என்று வடமொழிப் பெயர்களாற் குறித்தார் போலும். மற்றும் ஒரு பாடலில் ஐந்து புலன்கள் விரும்பியபடியே நாம் நடந்து ஐம்பொறிகளுக்கு அடிமையாகாது, காம வெகுளி மயக்கங்களை நாம் அறவே தொலைத்து அரனுர் திருவடிகளுக்கு நாம் ஆளாக வேண்டும் என்று நெஞ்சிற்குக் கூறியதுபோற் பாடிய பாடலும் ஈண்டு அறியத்தகும்:—

"வெறுத்துகப் புலன்க ளைந்தும் வேண்டிற்று வேண்டு நெஞ்சே
மறுத்துக ஆர்வச் செற்றக் குரோதங்க ளான மாயப்
பொறுத்துகப் புட்பகத்தே ருடையானை யடர வூன்றி
ஒறுத்துகந் தருள்கள் செய்தார் ஒற்றியூ ருடைய கோவே."

'பிறத்தலும்' என்று தொடங்கும் மேலைத்தேவாரப் பாடலில், 'அறத்தையே புரிந்த மனத்தனய்' என்று

அப்பர் பாடியிருக்கிறுர். அறத்தையே புரிந்த கையனுய் என்று பாடவில்லே. ஒருவன் தனது நெஞ்சத்துக்கண் பாவக்கருத்து இலனுதலே அனைத்தறங்களும். ஒழிந்தன வெல்லாம் துக்கத் தன்மையை யுடையனவாகும். மனதின்கண் குற்றம் இல்லாவதனுகிறதாகிய அவ்வளவையுடையதே தருமமாவது. மனதினுல் பாவத்தை நினையாதொழிதலே பெரிய தருமம். மனதிலே தீய சிந்தனைகளைத் திணித்துக்கொண்டு, பேச்சிலும் செயலிலும் அறத்தைக் காட்டி வாழ்வதெல்லாம் பிறரை மெய்ப்பிக்கவும், வெளியுலகை ஏமாற்றவும், ஆடம்பர ஆரவாரங்களை உண்டுபண்ணவும் அமைந்தனவாகுமன்றி, உண்மைத் தருமம் ஆகாது. ஒருவனுடைய சொல்லேயும்செயலேயும் ஆராயும்பொழுது அவனுடைய மனநிலே எவ்வாறு இருந்தது என்பதைத்தான் உலகம் முதற் கவனத்திற்கு எடுத்துக்கொள்ளும். மனம் தூய்மை யடையாதவரையில், புறக்கோலங்களும், நல்ல சொற்களும், நல்ல செயல்களும் யாதொரு நற்பயனையும் விளைவிக்கமாட்டா. அழகான மலர் மணம் வீசிக்கொண்டிருக்கலாம். ஆனுல் அதன் இதழ்களின் அடித்தளத்திலே பூநாகம் பதுங்கிக் கிடக்கலாம். அது போன்றதே மனமாசு நீக்காமல் புறத்தூய்மை காட்டியொழுகுதலும். மனம் செம்மைப்பட்டுவிட்டால் மற்றவை யெல்லாம் சரியாகிவிடும். "மனம் தூய்மை பெற்ருேர் புண்ணியசாலிகள்; ஏனெனில் அவர்கள் கடவுளைக் காண்பது திண்ணம்" (Blessed are the pure in heart; for they shall see God) என்று கிறித்துவ மறையிலும்கண்டுள்ளது. ஆசாபாசங்கள் உள்ளத்திலே குமுறி வெந்து புகைந்து கொணடிருக்கவும், அவற்றை மறைத்துப் புறத்தில்மட்டும் அறத்தைப் புரிந்து பொய் வாழ்வு வாழ்வதாற் பயனில்லே. ஆகவே திருவள்ளுவரும்:—

"மனத்துக்கண் மாசில ணாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற."

என்றார்.

ஆனால் உலகம் எப்படி இருக்கிறது? மனசிலே வஞ்சகமும், பொறாமையும், கொடுமையும், பேராசையும் மற்றும் பாவ நினைவுகளும் மண்டிக்கிடக்கவும் அவற்றை வெளியே காட்டிக்கொள்ளாது, போலி வேடம் புனைந்து நாடகம் நடத்துகிறது. இத்தகைய பொய் வாழ்வு நடத்துகிறவன் உலகத்தை ஏமாற்றுவதோடல்லாமல், தன்னையும் ஏமாற்றிக்கொள்கிறான். இந்தக் கள்ள வாழ்க்கை தனக்கும் உலகிற்கும் தீமையையே விளைத்து நிற்கும். உலகம் மெச்சுவதற்காகக் காரியங்களை நடத்தினால் போதும் என்று மக்கள் அறவாழ்வு வாழாது நடலை வாழ்வு வாழ்ந்து காலத்தையெல்லாம் வீணாகக் கழித்துவிட்டு, இறுதியில் கண் கலங்கி நிற்பர். ஆதலால் ஒவ்வொருவனும் தன் கல் நெஞ்சிலே கப்பிக்கிடக்கும் கள்ளத்தை அள்ளியெறிந்து மனதைச் சுத்தப்படுத்த வேண்டும். வெளிக்கோலங்களால் யாதும் பயன் இல்லை. அவை வீண் ஆடம்பரமும் படாடோபமுமேயாகும். உண்மையாகக் காமம் வெகுளி மயக்கங்களை முழு மனதுடன் நீக்க வேண்டும். அந்நிலையில் சீலமும் நோன்பும் தாமே வந்து தலைக் கூடும். இறைவனும் காட்சி தருவான். இவ்வாறு அறிவுறுத்துகிறார் அப்பர் பெருமானும்;—

"ஞாலமு மறிய வேண்டில் நன்றெனை வாழ லுற்றீர்
சாலமுங் கழிய லான கள்ளத்தை யொழிய கில்லீர்
கோலமும் வேண்டா ஆர்வச் செற்றங்கள் குரோதம் நீக்கில்
சீலமுந் நோன்பு மாவார் திருச்செம்பொன் பள்ளி யாரே."

மனம் நிறைய அழுக்கை வைத்துக்கொண்டு, புனிதமான தீர்த்தக் கரைகளையும், ஆறுகளையும் குளங்களையும் நாடிச்சென்று முழுகி வருவதால்

யாதொரு பயனும் இல்லை. ஆற்று நீரும் ஊற்று நீரும் உடம்பின் அழுக்கைப் போக்குமே யல்லாமல், உள்ளத்தின் அழுக்கைப் போக்குமா? ஆனுல் பலரும் இவ்வாறு தீர்த்தங்களில் முழுகித் தம்மைச் சிறந்த பத்தர்களாக வெளியே காட்டிக்கொண்டு, மனத்தால் பெரும் பாவங்களைச் செய்துவருவதாகத் திருவள்ளுவர் எச்சரிக்கிருர் :

"மனத்தது மாசாக மாண்டார் நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்."

இதனுல் தீர்த்தங்களுக்குப் புண்ணியமும் புனிதத் தன்மையும் இல்லை என்பதாகாது. அப்புனிதத் துறைகளின் தண்ணீரை 'மாண்டார் நீர்' என்று வள்ளுவர் சிறப்பித்துள்ளார். தூயமனத்துடன் தீர்த்தமாடுவது சிறந்த தவமும் புண்ணியமுமாகும். ஆனுல் புல்லிய மனத்துப் போலிகளின் உள்ளழுக்கைச் சிறந்த புண்ணிய நீர்கூடக் கழுவித் தூய்மைப்படுத்த இயலாது போய்விடும். வஞ்சகம் செய்வதற்கும் பிறரை ஏமாற்றுவதற்கும் தீர்த்தமாடி நடிப்பதை ஒரு தொழிலாகக்கொண்டு வாழும் பாவிகளின் பாவத்தைத் தீர்த்த நீர் எவ்வாறு துப்புரவு செய்யமுடியும்? இதைத்தான் திருவள்ளுவர் இங்கு வற்புறுத்திக் காட்டினுர்.

மனத்தில் உண்மையான பக்தியைக் கடவுளிடத்திற்கொண்டு தீர்த்தமாடினுல் அதுபெரும் புண்ணியமாகும். இதனை அப்பர் சுவாமிகள் எவ்வாறு கூறுகிருர் பாருங்கள் :—

"களித்துக் கலந்ததொர் காதற் கசிவொடு காவிரிவாய்க்
குளித்துத் தொழுதுமுன் னின்றவிப் பத்தரைக் கோதில் செந்தேன்
தெளித்துச் சுவைபமு தூட்டி யமரர்கள் சூழிருப்ப
அளித்துப் பெருஞ்செல்வ மாக்குமை யாற னடித்தலமே."

ஆனால் உண்மைப் பக்தியில்லாத பதகரைப் பற்றி யும் அப்பர் பல பாடல்களில் அறிவுறுத்துகிறார். சிவபெருமானுக்கு உண்மையான அன்பை மனத்திலே கொள்ளாது மகாமகக் குளத்திலே மாறி மாறிக் குளித்தும் பயன் அடைய முடியாது. குமரிக் கடலிலும், கங்கையிலும், காவிரியிலும் கால் கடுக்க ஓடியோடிக் குளிப்பதால் யாதொரு பயனும் வாராது. தீர்த்தமாடுத லின் பயனைப் பெறுவதற்கு முதலில் மனம் தூய்மை பெற்றுச் சிவனுக்கு அன்பு பூண வேண்டும். சிவ வழிபாட்டை மனதாற்கொள்ளாது தீர்த்தங்கள் ஆடி வினைகளைத் தீர்த்துக் கொள்ள முடியாது. நீராடும் பொழுது சிவசிவ என்று சிவ நாமத்தை உச்சரித்த வாறே நீராடுவதும் இதுபற்றியேயாகும். இந்தப் பழக்கத்தைக் கவிச்சக்கரவர்த்தி கம்பர்கூடக் கையாண்டு வந்திருக்கிறார் என்று தெரிகிறது. காடு செல்வதற்காக அயோத்தியை விட்டுக் கிளம்பிய இராமன் கங்கைக் கரையை அடைந்ததும், அப்புனித மான தீர்த்தத்தில் சீதையுடன் நீராடினான். தீர்த்த மாடுதல் என்பதை எண்ணியவுடனே கம்பருக்குச் சிவசிவ மந்திரம் மனத்திலே தோன்றிவிட்டது. உடனே சீதையும் இராமனும் உமையும் சிவனுமாக அவர் கவிக் கண்ணுக்குக் காட்சியளித்தனர். அப்படியே அழகாகப் பாடிவிடுகிறார் பாருங்கள் :—

*"வெங்கணாகக் கரத்தினன் வெண்ணிறக்*
*கங்கை வார்சடைக் கற்றையன் கற்புடை*
*மங்கை காணநின் றாடுகின் றான்வகிர்த்*
*திங்கள் சூடிய செல்வனிற் றோன்றினான்."*

கம்பர் இதயத்திலே சிவபிரான் எத்தகைய உயர் விடம் பெற்று விளங்கினான் என்பதை இப்பாடல் இனிது புலப்படுத்துகின்றது. வகிர்த்திங்கள் சூடிய செல்வன் என்று சிவனை வாயாரப் புகழ்ந்து போற்று

கின்ருர் கம்பர். கம்பர் சிலேடை என்னும் மந்திரக் கோலோச்சி இராமனைச் சிவனாக மாற்றிவிடுகிருர். கொடுங்கண்ணையுடைய யானையின் துதிக்கைபோலுங் கையையுடைய இராமனை, 'வெங்க*ணுகக் கரத்தினன்' என்றதும் அவன் பாம்பைக் கையிற்பூண்ட சிவனாக மாறிவிடுகிருன். கங்கை நீரில் முழுகி எழுந்த இராமனை 'வெண்ணிறக் கங்கை வார்சடைக் கற்றையன்' என்றவுடன், சிவனுக்கே உரித்தான அடையாளமும் வந்துவிடுகிறது. இராமன் சடையிலிருந்து வெண் துளிகளாகச் சிந்துகிற கங்கை நீர் இயல்பாகவும் பொருத்தமாகவும் கங்காநாயகனைக் காண்பித்து விடுகிறது. இவ்விடம் நீர் ஆடுகின்ற இராமனைச் சீதை காண்பது, ஆடுங் கடவுளாகிய அம்பலவாணனைச் சிவகாமவல்லி காண்பதாகவே கம்பர் கருதிவிடுகிருர். அவர் பாடிய பாடலும் சிவம் மணக்கும் தெய்வீகப் பாடல் ஆகிவிடுகிறது. இங்ஙனம் இராமனைக் கங்கைத் தீர்த்தத்தில் ஆடவைத்துக் கம்பர் சிவானந்தத் தீர்த்தத்தில் ஆடித் திளைப்பதும் நமக்கு நேர்த்தியான ஒரு தீர்த்தப் பாடலாய்த் திகழ்கிறதல்லவா? இவ்வாறு சிவனுக்கன்பு கொண்டு இராமன் கங்கையில் ஆடினுனே? என்னவோ? அது நமக்குத் தெரியாது. ஆனல் இராமன் கங்கையாடும்பொழுது கங்காதரனை ஓர் உயிரோவியமாகச் சித்திரித்து நம் கண்ணிலும் கருத்திலும் காட்சியளிக்கக் கொண்டு நிறுத்துகிருர் கம்பர். இராமன் கங்கையாடியதன் புண்ணியப் பலனைக் கற்போர் என்றும் எப்பொழுதும் எளிதிற் பெறும்படியாக விளங்கி நிற்கிறது இப்பாடல் என்பது மட்டும் உண்மை. இராமனே சிவனுகிவிடுகிருன். அரியையும் சிவனையும் ஒன்றுபடுத்திப் போற்றுதல் கம்பரின் வழக்கம்.

---

* நாகம் யானைக்கும் பாம்புக்கும் சிலேடை.

சிவனிடத்து அன்பில்லாமலும், சிவனுக்கு ஆளாகாமலும், சிவனை நினையாமலும் எந்தத் தீர்த்தம் ஆடினாலும் எப்பயனும் உண்டாகாது என்பதை அப்பர் தெளிவாக விளக்கிப் பாடியுள்ளார் :—

"கங்கை யாடிலென் காவிரி யாடிலென்
கொங்கு தண்கும ரித்துறை யாடிலென்
ஒங்கு மாகட லோதநீ ராடிலென்
எங்கு மீசனை னெனாதவர்க் கில்லையே."
"கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை
ஆடி னாலும் அரனுக்கன் பில்லையேல்
ஓடு நீரினை யோட்டைக் குடத்தட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே."

(அட்டி — ஊற்றி. மூர்க்கன் – முட்டாள்.)

அறிவில்லாத முட்டாளை மூர்க்கன் என்று கூறுவது அப்பர் சுவாமிகளின் வழக்கம். குடம் அடியிலே ஓட்டையாய் இருப்பதை அறியாது அது நிறையத் தண்ணீரை ஊற்றி வாயை மூடி வைத்து விட்டால், தண்ணீர் குடத்தில் தங்கியிருக்குமா? சிறிது நேரத்தில் தண்ணீரெல்லாம் ஒழுகிப் போய்விடும். வெறும் குடம் தான் மிச்சமாய் இருக்கும். அதுபோல், புண்ணியத் தீர்த்தங்களுக்குச் சென்று நீராடுகின்றவனை ஒரு குடம் என்று சொல்லலாம். அவன் உள்ளத்தில் சிவனுக்கு அன்பு இல்லாதிருக்குமானால், அவன் ஓர் ஓட்டைக் குடத்திற்கு ஒப்பாவான். அவன் தீர்த்தமாடுவதால் உண்டாகும் புண்ணியம் தங்காமல் ஒழுகிப் போய் விடும். ஒரு திருக்குறள் உவமையைச் சிறிது மாற்றி அப்பர் நமக்கு இங்கே அளித்துள்ளார். திருவள்ளுவர் கூறிய அந்த உவமையையும் நாம் இத்துடன் ஒன்றவைத்துப் படித்து மகிழலாம். அது யாது?

அருளொடும் அன்பொடும் வரக்கூடிய பொருளையே ஒருவன் ஈட்ட வேண்டும். அவ்விதமின்றிப்

பல தீவினைகளைச் செய்து பணத்தைச் சம்பாதித்து வைத்துக்கொண்டு பத்திரப்படுத்தி மகிழ்ந்திருத்தல், சூளையில் சுடப்படாத பச்சை மண்பாண்டம் நிறையத் தண்ணீரைப் பெய்து, அதற்கு நல்ல இறுகலான மூடி போட்டுச் சேமித்து வைப்பது போலாகும் என்றார் திருவள்ளுவர்:—

> " சலத்தால் பொருள்செய்தே மார்த்தல் பசுமண்
> கலத்துள்நீர் பெய்திரீஇ யற்று. "

பச்சை மண்குடம் தண்ணீரில் பொதுபொதென ஊறிக் கரைந்து வெடித்துவிடும். பானையும் உடைந்து நண்ணீரும் பாழாகிப்போகும். அதுபோல் ஒருவன் தீவினைகளைச் செய்து பொருளைத் தேடிச் சேர்த்தானானால் அந்தப் பொருளும் போய் அவனும் அழிந்து விடுவான், என்பதை வள்ளுவனார் உவமை முகத்தான் அழகாகக் கூறிவிட்டார். அவ்வாறு வள்ளுவர் வழங்கிய பசு மண்குடத்தில் ஊற்றிய நீர் அந்த மண் கரையும் வரையில் சிறிதளவு நேரமாவது தங்கியிருக்கும். ஆனால் ஓட்டைக் குடத்தில் நீர் ஊற்ற ஊற்ற அது வெளியே போய்க் கொண்டிருக்குமே யொழியத் துளியளவாவது சிறிது நேரங்கூட அதில் தங்கியிருக்காது. அதற்காகவே அப்பர் பசு மண்குட உவமையைச் சிறிது மாற்றி ஓட்டைக் குடம் என்றார். சிவபக்தியின்றி நீராடுவதால் யாதொரு பயனும் வாராது என்பதை அதன் மூலம் தெளிவாக்கினார்.

நாள்தோறும் நீராடுவதை ஒரு நியமமாகவும் மிகப் புனிதமாகவும் நம் நாட்டினர் கருதினர். உடம்பின் வெளிப்புறத்தை நீராலே கழுவிச் சுத்தம் செய்தனர். அவ்விதம் புறத்தைத் தூய்மைப் படுத்தும் பொழுதே அகத்தையும் கழுவித் தூய்மைப் படுத்துவது நம் நாட்டவர் வழக்கம். அதற்காகவே இறைவன்

நாமத்தை வாயாற் கூறி அவன் திருவடிகளைத் தியானம் செய்துகொண்டே நீராடுவது வழக்கம். ஒரே வேளையில் அகமும் புறமும் தூய்மை பெற வேண்டும். மனம் தூய்மையடையாமல் உடம்பை மட்டும் தூய்மைப் படுத்துவதால் பயனில்லை. நீரைக் கொண்டு புறத்தைத் தூய்மை செய்து கொள்ளலாம். அகத்தூய்மை பெறுவதற்கு நீர் உதவாது. வேறு எந்த வழியாலும் மனம் வெளுத்து சுத்தமாகிவிடாது:

" துணி வெளுக்க மண்ணுண்டு - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்துமாரீ
தோல்வெளுக்கச் சாம்பருண்டு -எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்துமாரீ
மணி வெளுக்கச் சாணையுண்டு - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்துமாரீ
மனம் வெளுக்க வழியில்லை - எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்துமாரீ."

என்று கவி பாரதியார் பாடினார். ஆனால் மனம் வெளுக்க வழி யில்லாமலில்லை; வழியுண்டு. மனதை வாய்மை (சத்தியம்) என்ற நீராலே தான் கழுவிச்சுத்தி பண்ணவேண்டும். இதனைக் கண்டு கூறியவர் திருவள்ளுவர்:—

" புறந்தூய்மை நீரா னமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்."

என்பது திருக்குறள். உண்மை என்னும் கருவி ஒன்றுதான் உள்ளத்தை எட்டிப் பிடித்துத் தூய்மை செய்ய உதவும். நடலை வாழ்வைக் கைவிட்டுப் பொய் தீர் ஒழுக்க நெறியைக் கடைப் பிடித்தவர்களுக்கே மனம் மாசு நீங்கி வெளுக்கும். இவ்வருமைத் திருக்குறளை அழகாகப் பொதிந்து வைத்துக் குறிப்பாகப் புலப்படுத்தி அப்பர் அடிகள் பாடியுள்ளார். திருப்புகலூர்க் கோயிற் சுற்றிலே ஒரு தீர்த்தப் பொய்கை

அத்திருக்கோயிலுக்கு ஓர் அகழ்போல அமைந்து கிடந்தது. அதிலே அடியார்கள் ஆர்வத்தோடு பாய்ந்து நீராடுவதை அப்பர் கண்டார். தாமும் அதிலே படிந்து குளித்தார். உடல் தூய்மையாகிவிட்டது. உள்ளம் தூய்மை அடைவதற்கு அந்தத் தீர்த்த நீர் போதாது. உள்ளத்திலே உண்மையொளி உதயமாக வேண்டும். அகத்திலே வாய்மை வயங்கி மிளிரவேண்டும். 'அகம் தூய்மை வாய்மையாற் காணப்படும்' என்ற வள்ளுவர் வாக்கை நினைத்தார். அங்கு நீராடுவோர் வாய்மையால் தூய்மை பெருது வாடுவதைக் கண்டார். அவர்களின் அவல நிலையோடு தம்மையும் சேர்த்துக்கொண்டு வருந்திப் பாடினர் :—

" காத்திலேன் இரண்டும் மூன்றும் கல்வியேல் இல்லை என்பால்
வாய்த்திலேன் அடிமை தன்னுள் வாய்மையால் தூயேனல்லேன்
பார்த்தனுக் கருள்கள் செய்த பரமனே ! பரவுவார்கள்
தீர்த்தமே திகழும் பொய்கைத் திருப்புக லூரனீரே !"

வாய்மையினுல் தூயவனுகவில்லையே என்று வருந்துகிருர் அப்பர். வாசனை கலந்த சவுக்காரம், தூள் முதலியவற்றைத் தேய்த்துக் குளித்துவிடுவதால் ஒருவன் பரிசுத்தனுகிவிட முடியாது. புறத்தே உடலைத் தூசி அழுக்குகள் மாசு படுத்துவதுபோல, அகத்தே மனதை மாசு படுத்தும் அழுக்குகளும் உள்ளன. அவை அழுக்காறு, ஆசை, வெகுளிபோன்றன. அவ் அழுக்குகள் எல்லாம்நீங்கி மனம் துப்புரவமைவதற்கு வாய்மை என்னும் சவுக்காரத்தால் மனதை அலசிக் கழுவுதல் வேண்டும். அப்பொழுதுதான் அகத்தும் புறத்தும் தூய்மை பிறக்கும். இதனைத் திருவள்ளுவர் எவ்வளவு தெளிவாகக் கூறுகின்ருர் காணுங்கள் :—

" தூஉய்மை என்ப தவாஇன்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்."

'Cleanliness is next to Godliness' என்று ஆங்கிலத்தில் சொல்வர். தெய்வத் தன்மைக்கடுத்தது துப்புரவுடைமை என்பது அதன் பொருள். அதே போல், பரிமேலழகரும் இங்கே தூய்மை என்பதற்கு வீடு என்று பொருள் கூறி, மெய்ம்மையுடைய பரத்தை ஆகுபெயரான் மெய்ம்மை என்றும் பொருள் கூறினர். இவற்றையெல்லாம் அகப்படுத்தி அப்பர் சுவாமிகள் 'வாய்மையால் தூயேனல்லேன்' என்று பாடினர். இவ்வாறு பல குறள்களின் கருத்துக்களையும் சொற்களையும் தம் பாடலில் பதியவைத்துப் பாடுவது திருநாவுக்கரசரின் இயல்பு. மேலே குறித்த அப்பர் பாடலில் இன்னுமோர் குறள் இனிது காட்சியளிப்பதை எளிதின் அறியலாம். 'காத்திலேன் இரண்டு மூன்றும்' என்றார். இரண்டும் மூன்றும் ஐந்து; ஐந்தையும் காப்பவன் இவ்வுலகிலே சிறப்படைவான் என்பதை வள்ளுவரும் கூறினர்.

"உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து."

இனியவை கூறல் என்பதற்கு, மனத்தின்கண் உவகையை வெளிப்படுப்பனவாகிய இனிய சொற்களைச் சொல்லுதல் என்று பொருள் கூறினர் பரிமேலழகர்; அதாவது கேட்டார்க்கு மனமகிழும் சொற்களைக் கூறுதல். இன்சொலாவன, அன்போடு கலந்து வஞ்சனையிலவாயிருக்கின்ற அறத்தினை உணர்ந்தார் வாயிற்சொற்கள் என்று இன்சொலின் இலக்கணத்தை அழகாகக் கூறினர் திருவள்ளுவர்:—

"இன்சொலால் ஈரம் அளைஇப் படிறிலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்."

இங்கே செம்பொருள் என்ற குறிப்பை நாம் கருத வேண்டும். 'மெய்யுணர்ந்தார் நெஞ்சிற்கு எல்லாம்

செம்மையுடைத்தாய்த் தோன்றலின் செம்பொருள் எனப்பட்டது என்பது பரிமேலழகர் தரும் விளக்கம். செம்பொருள் கண்டார் சொல் என்று கூறினுலும் போதும், வாய்ச்சொல் என்று வேண்டாது கூறினுர், வேண்டியது முடித்தற்கு. அது யாதெனில், செம் பொருள்கண்டார் வாய் தீய சொற்களைப் பயிலா என்பது அறிவித்தற்கு. இங்கு முழுமுதற்பொருளையே மெய்ப்பொருள் என்றும், அறம் என்றும், செம்மைப் பொருள் என்றும் பொருள்படச் செம்பொருள் என்ருர். செம்பொருளைத் தரிசிக்கும் பேறுபெற்ற பெரியோர்கள் வாயினின்றும் வரும் சொற்கள் இனிய சொற்களாய் இருக்கும். ஏனெனில் அவை அன்பு கலந்து குற்றம் இல்லாதனவாயிருக்கும். ஆகவே அவை அருள்மொழி களாய் வாய்மை நிறைந்து விளங்கும். அன்பு கலவாத வன்சொற்களும், பொய் முதலிய குற்றமுள்ள சொற் களும் இன்சொற்களாகா, அவை கேட்டோர்க்கு இன்பம் பயவாமையின். செம்பொருள் கண்டோர்க்கே இன் சொல் வழங்குதல் கூடும். செம்பொருள் என்பது இங்கே சிவபெருமானையே குறிக்கும் என்பதைச் சிவனடியார்கள் உணர்வர்.

நாவினின்று பயிலும் சொற்களின் இனிமைக்கு நாவரசரை ஒப்பாரும் மிக்காரும் இவ்வுலகில் இல்லை. அவரோ திருநாவுக்கு அரசர். இப்பெயர் இறைவனே ஏழுலகமும் போற்றும்படியாக உலகறிய அவருக்குக் கொடுத்தது. கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்பமொழியும் ஆற்றல் பெற்றவர் திருநாவுக்கரசர். அவர் சொல்லும் சொல்லெல்லாம் வெல்லும் சொல்லாகவும் செல்லும் சொல்லாகவும் விளங்கின. திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்டவர் அவர் ஆகலின், அவர் செம்பெருள் கண்ட செம்மையாளர். சிவனுகிய செம்பொருளைக் கண்டு,

சிவனருள் பெற்றுச் சிவமாகவே நின்று அவர் கூறும் சொற்கள் இன்சொற்கள் ஆகாமல் வேறென் சொற்களாகும்? புன்சொற்கள் பயிலாத அவர் நாவினின்றெழும் தென் சொற்கள் யாவும் நன்சொற்கள் பொன்சொற்கள், இன்சொற்கள். அழகான சொற்களால், மணிமணியான வார்த்தைகளால் இறைவனுடைய இயல்புகளை எடுத்துக் கூறும் சக்தி அவர் நாவிலே இயல்பாகவே அமைந்திருந்தது. இறைவன் அவருக்குத் திருநாவுக்கரசு என்று பட்டம் சூட்டியதும் அக்காரணத்தினாலேயே என்பதையும் நாம் அறிதல் வேண்டும். இதை அப்பர் தேவாரப்பாடல் ஒன்றால் நாம் எளிதில் அறியலாம்.

> "நாதனா யுலக மெல்லாம் நம்பிரா னெனவும் நின்ற
> பாதனும் பரம யோகி பலபல திறத்தி னாலும்
> பேதனாய்த் தோன்றி னானைப் பெருவேளூர் பேணி னானை
> ஓத நா வுடையனாகி உரைக்குமா றுரைக்கின் றேனே."

அவ்வாறு அப்பர் செம்பொருளின் திறத்தை யெல்லாம் எடுத்துக் கூறியது கற்பனையினாலன்று, பிறர் சொல்லக் கேட்டதினாலன்று; தம்முடைய அனுபவ உணர்ச்சியைக்கொண்டும், தாம் இறைவனோடு கலந்து அளவளாவும் நெருங்கிய தொடர்பையும் பழக்கத்தின் பெற்றியைக் கொண்டுமேயாகும். அதனால் அவ்வாறு பழகியறியாத உலகமக்களுக்கு எளிதில் உணரும் விதத்தில் எப்படி எப்படி எடுத்துக் கூறினால் அவர்கள் உணர்ந்து கொள்வார்களோ அப்படி உணர்த்தும் ஆற்றலைப் பெற்றனராம். இதனையும் அவர் வாயுரை கொண்டே நாம் உணரலாம்:–

> "குறவிதோள் மணந்த செல்வக் குமரவேள் தாதையென்று
> நறவிள நறுமென் கூந்தல் நங்கையோர் பாகத் தானைப்
> பிறவியை மாற்று வானைப் பெருவேளூர் பேணி னானை
> உறவினால் வல்ல னாகி உணருமா றுணர்த்து வேனே."

ஒன்றாயும் உடனாயும் வேறாயும் இப்பிரபஞ்சம் அனைத்தையும் தன்னுள் அகப்படுத்திக்கொண்டு, அதற்கும் அப்பாற்பட்டு நிற்கின்ற செம்பொருள் திருநாவுக்கரசரைத் தம் பொருளாகக்கொண்டு இரண்டற அத்துவிதமாகக் கலந்து நின்ற நிலையில், அவர் உலகிற்கு நன்மையுண்டாகும்படியாக அழகான கருத்துக்களை யெடுத்துப் பேசுவாராம். பேய்த்தன்மை படைத்தோர் பேசும் பேய்ச்சொற்களை, வெட்டெனப் பேசும் வெளிறிய சொற்களை, புல்லறிவிற்பிறக்கும் பொய்மையுரைகளை, புன்மொழிகளைப் பேசமாட்டாராம். ஏனெனில், திருவருளினால் அவருடைய சொல்லும், செயலும் எண்ணமும் யாதொரு பிழையையும் அறியாதாம் ஆம்; அவர் செம்பொருளின் அடியிணையைக் குறுகினவர்; துரிசற்றவர்; பற்றற்றவர்; செம்பொருளோடு தொடர்புற்றவர்; புண்ணியனை நண்ணிய புண்ணியத்துள்ளவர்; கடுமையோடு களவற்றவர்; ஈசனை நேசனாய் நித்தலும் நினையப்பெற்றவர்; ஈசனுடைய எண்குணத்துள்ளவர்; பாசமற வீசும்படியோராவர். மேலும், அச்சம் என்பதை அணுவும் அறியாத ஆண்மையாளர் அப்பர். இச்சகம் பேசி இழிதொழில் புரிந்தும், மன்னரை மதித்து மாண்பினையிழந்தும், செல்வரைப் பின்சென்று சங்கடம் பேசியும் திரிகின்ற பேயர்கள் பேசும் பேச்சு, மயக்கமும் கலக்கமும் விளைவிப்பதாய்ப் பொருளற்றிருக்கும். தென்றிசைக் கோனையும் வென்றருள் பெற்ற அப்பர் வாக்குகளோ அருள்வாக்குகள் அல்லவா? இதோ அவரே கூறுகிறார்:—

" நிற்பனவும் நடப்பனவும் நிலனும் நீரும்
நெருப்பினொடு காற்றாகி நெடுவா னாகி
அற்பமொடு பெருமையுமாய் அருமை யாகி
அன்புடையார்க் கெளிமையதாய் அளக்க லாகாத்

*தற்பரமாய்ச் சதாசிவமாய்த் தானும் யானும்*
*ஆகின்ற தன்மையனை நன்மை யோடும்*
*பொற்புடைய பேசக் கடவோம் பேயர்*
*பேசுவன பேசுதுமோ பிழையற் றேமே.''*

ஆகவே இவற்றால், 'செம்பொருள்கண்டார்வாய்ச்சொல்' என்ற திருக்குறள் வாசகத்திற்கு இலக்காகத் திருநாவுக்கரசர் இலங்குவதைக் கண்டோம். இன் சொற்களைப் பயிலாத நாக்கு என்ன நாக்கு? புண்ணுக் குத்தான். உலகமக்கள் பொறாமை, பகைமை, இறுமாப்பு, இவை காரணமாக வன் சொற்களையே வழங்குகின்றனர். இனியவை கூறலின் இன்பத்தை இம்மியும் அறியாது வீணே உழல்கின்றனர்.

ஒவ்வொருவருடைய சொந்த அநுபவத்தைக் கொண்டும் அவரவர் தாமாகவே உண்மைகளை உணர வேண்டும் என்பது திருவள்ளுவரின் விருப்பம். ஆதலால் அவர் ஒரு கேள்வி போடுகிறார். "பிறர்கூறும் இனிய சொற்கள் உங்களுக்கு இன்பம் விளைப்பதை நீங்கள்நேரில் ஐயமறக்கண்டுகொண்டிருக்கின்றீர்களே, பிறர் உங்களிடம் இன்சொற்களையே பேசவேண்டும் என்றும் விரும்புகின்றீர்களே; பின் ஏன் இன்சொல் வழங்க மறுக்கின்றீர்கள்? அதனால் நீங்கள் அடையும் பயன் ஒன்றும் இல்லையே!" என்று இடித்துக் கூறுகிறார்:—

*"இன்சொ லினிதீன்றல் காண்பான் எவன்கொலோ*
*வன்சொல் வழங்கு வது?"*

ஆகா! ஒவ்வொருவரும் அன்பும் உண்மையும் கலந்த வஞ்சகமற்ற இனிய சொற்களையே பேசுவது என்று மட்டும் ஒரு விரதம் கொள்வதாய் இருந்தால் இவ்வுலகமே இன்ப வுலகமாக மாறிவிடுமே! பின் பகைமைக்கும் போருக்கும் உலகில் இடமே இல்லாமற் போய்விடும். துன்பமும் வறுமையும் தொலைந்துவிடும்.

அல்லவைதேய அறம்பெருகும். சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும் இம்மையும் இன்பம் பெருக்கும். நட்பும் அன்பும் எங்கும் நடமாடி நிற்கும். இவ்வளவு சிறப்புக்களையும் மிக்க எளிதாக யாரும் இனியவை கூறிப்பழுதற அடையலாம் என்று விளக்கிப்பேசுகிறார் திருவள்ளுவர். அப்படியிருந்தும் உலகத்தில் இனிய சொல் கிடைப்பது குதிரைக் கொம்பாய் இருக்கிறது. மக்கள் பிறரிடம் இனிமையாக உரையாடி உறவாட மறுக்கிறார்கள். பிறர்மனம் புண்படும்படியாகவே பேசுகின்றனர். பிறர்மனம் இன்பம் அடைந்துவிடக் கூடாது என்றே சுடு சொற்களைக் கையாளுகின்றனர். சிலர் இனிமையாகப் பேசுவது தங்கள் உயரிய நிலைக்கும் பெருமைக்கும் இழுக்கு என்று நினைத்து விடுகிறார்கள். இனிமையாகப்பேசுதல் ஏதோ ஒருவிதக் குறைச்சல் என்ற தவறான எண்ணம் பலரிடையே நிலவி வருகிறது. கர் புர் என்று கடிந்து பேசுவதுதான் பெரிய . மனிதருக்கு அடையாளம் என்று கருதும் பேதையரும் உண்டு. இவற்றையெல்லாம் கண்டு திருநாவுக்கரசர் மனம் நொந்திருக்கிறார்.

"வேம்பினைப் பேசி விடக்கினை ஓம்பி வினை பெருக்கித்
தூம்பினைத் தூர்த் ம்கோர் சுற்றந் துணையென் றிருத்திர் தொண்டர்"

என்று உலகரை நோக்கி அவர் வருந்தி அழைத்துப் பேசுவதைப் பாருங்கள்! உலக மக்கள் அருவருத்த செயல்களையும் விறுவிறுத்த பேச்சினையும் உடையராய் ஒருவரை ஒருவர் வெறுக்கும்படியாய், விலங்கினும் கேடாய் வாழும் வாழ்க்கையை நோக்கி வாடினவர் திருநாவுக்கரசர். உலகத்தார் குற்றங்களையெல்லாம் அவர்களில் ஒருவராக இருக்கும் தாமும் கொண்டிருப்பதாகவே பாவித்து, அவ்வுலக மக்களுக்கு அறவுரை கூறும் விதத்தில் பல பாடல்கள் பாடியுள்ளார். அவற்றுள் ஒன்றனை இங்குக் காணலாம்:—

"குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோல மாய
நலம்பொல்லேன் நான்பொல்லேன் ஞானி யல்லேன்
நல்லாரோ டிசைந்திலேன் நடுவே நின்ற
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தேன் அல்லேன்
வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேச வல்லேன்
இலம்பொல்லேன் இரப்பதே ஈய மாட்டேன்
என்செய்வான் தோன்றினேன் ஏழை யேனே."

குற்றமே பெரிதுடைய குலம் பொல்லாராய் இருக்கும் மக்கள் வெறுப்பனவே மிகப் பெரிதும் பேசவல்லாரா யும் உள்ளாரே என்று அப்பர் வருந்துவதை இப் பாடலில் நன்கு காணலாம்.

வஞ்சகமற்ற இனிய மொழிகளைப் பேசப்பயிலாத வர்கள் சமூக நல வளர்ச்சிக்கே வேண்டத்தகாதவர்கள் என்பது திருநாவுக்கரசரின் எண்ணமாக இருந்திருக் கிறது. ஏனெனில், அத்தகையோர் பழி பாவங்களுக்கு அஞ்சமாட்டார்கள். அவர்கள் செம்மை மனம் படைத் தவர்களாய் இருக்க முடியாது. அவர்களுடைய மனத்திலே அன்பிற்கும் அறத்திற்கும் இடமே யிருக்காது. பிறர்க்குக் கொடுமையிழைப்பதற்கு அஞ்சவே மாட்டார்கள். அவர்களால் உலகில் துன்பம் மல்கும், பாவம் பெருகும், நல்லவை தேயும், தீயவை ஓங்கும், அறம் அழியும், நயனும் நன்றியும் நாட்டை விட்டு நகரும், போரும் பகையும் பொருக்கென வந்து சூழும். இக்குறிப்புக்களை யெல்லாம் திருவள்ளுவர் இனியவைகூறல் என்னும் அதிகாரத்தில் கூறுமாற் கூறிவைத்தார் இனியவை கூற இயலாதோர் பொல் லாத அரக்கர்களாகவே இருப்பார்கள். அப்படிப்பட்ட பாவிகளை இறைவன் அழித்துத் தொலைத்தேவிடுவான். இலங்கையில் உள்ள இராவணனும் மற்ற அரக்கர் களும் பிறரோடு இனிது பேசி இயையவாழாது

கொடுமையிழைத்து வந்ததாலேயே, பிறனில் விழைதல் கொலை முதலிய குற்றங்களுக்கு ஆளாகி இராமன் அம்பினுல் உயிர் இழக்க நேர்ந்தது. இவ்வுண்மையை அப்பர் சுவாமிகள் ஒரு தேவாரப் பாடலில் பொறித்து வைத்து நம்மையெல்லாம் சிந்திக்கச் செய்துள்ளார்:—

"வாக்கினு லின்பு ரைத்து வாழ்கிலார் தம்மையெல்லாம்
போக்கினுற் புடைத்த வர்க ளுயிர்தனை யுண்டுமால்தான்
தேக்குநீர் செய்த கோயில் திருவிரா மேச்சு ரத்தை
நோக்கினுல் வணங்கு வார்க்கு நோய்வினை நுணுகு மன்றே."

இப்பாடலில் அமைந்துள்ள நோக்கினை நோக்கி உணர்ந்தால் நோய் வினை நிச்சயமாகப் போய்விடும் திருவள்ளுவர் இனியவை கூறல் என்ற அதிகாரத்துக். கூறிய கருத்துக்களின் பிண்டமாகவும் பயனுகவும் இப்பாடல் திகழ்வதைக் கற்ருேர் உணர்வர் என்பது திண்ணம்.

"யாவர்க்கு மாம் பிறர்க்கின் னுரை தானே" என்ருர் திருமூலர். யாவரோடும் இனியவை கூறி இன்புறச் செய்து தாமும் இன்பமாய் வாழ எல்லாராலும் முடியும். இதற்கு யாதொரு பொருட் செலவும் கிடையாது. வன் சொல் வழங்குவதைவிட இன்சொல் இயம்புதற்கு உடல் உழைப்பும் குறைவுதான். கவலையும் இருக்காது. அப்படி யிருந்தும் மக்களுக்கு இனியவை கூற மனம் ஒருப்படுவதில்லை. இது எப்படி இருக்கிறதென்ருல், இங்குத் திருவள்ளுவர் ஓர் அழகான உவமையைக் காட்டுகின்ருர். ஒருவன் தனக்கு உரித்தான தோட்டத்திலேயுள்ள சுவை நிறைந்த அருமையான தீங்கனிகளை, ஔவைக்கு அதிகமான் அளித்த நெல்லிக் கனி போன்ற ஆயுள் நீடிக்கும் பழங்களை வைத்திருக் கிருன். ஆனுல் அவற்றை உண்டு மகிழாமல், தனக்குச் சொந்தமில்லாத அயலானுடைய தோட்டத்திலுள்ள

எட்டிக்காய், காஞ்சிரங்காய், வேப்பங்காய் போன்ற நஞ்சு கலந்தனவும் சுவையில்லாதனவுமாகிய காய்களைத் திருடித் தின்கிறுன். இது எவ்வளவு அறிவுள்ள செயல்? இது போன்றதுதான், இனிய வார்த்தைகள் பேசக் கூடியனவாய் இருக்கவும் அவற்றை விடுத்து, இன்ஞத வார்த்தைகளை இழுத்து வைத்துப் பேசுதல்.

"இனிய வுளவாக இன்ஞத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று."

இனியவை பேசாதவர் அழிவர் என்பது இதனுல் பெறப்படும். அப்படி இன்ஞதவற்றைப் பேசுவதால் வரும் இழுக்கையும் இழப்பையும் இடரையும் 'காய்கவர்ந்தற்று' என்பதால் இனிது விளக்கிஞர். திருவள்ளுவர் கையாண்ட கனியிருப்பக் காய்கவர்தல் என்னும் உவமை ஒரு பழமொழியாகவே நாட்டில் பயிலத் தொடங்கிவிட்டது. இப்பழமொழியுவமை அப்பர் மனதைப் பெரிதும் கவர்ந்திருக்கிறது. 'சிவ சிவ' என்று இனியவை கூறி இனிது வாழாது தாம் நீண்ட நாள் சமண் சமயம் குறுகி வாழ்ந்ததை நினைத்து வருந்திய அப்பருக்குக் கனியிருப்பக் காய்கவரும் உவமை பொருத்தமாய்த் தோன்றியுள்ளது. உடனே அதை ஒரு பழமொழி உவமையாக அமைத்து அருமைத் தேவாரம் பாடிஞர் :—

"மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் தாள்தொழாதே
உய்யலா மென்றெண்ணி யுறிதூக்கி யுழிதந்தென் னுள்ளம் விட்டுக்
கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலும் ஆரூரரைக்
கையினுற் றெழாதொழிந்து கனியிருக்கக் காய்கவர்ந்த
கள்வனேனே."

கவர்ந்ததால் கள்வஞனமை இப்பாடலில் இனிது விளக்கப்பட்டது.

மேலே காட்டிய குறளில், உவமேயத்தில் இனிய வுளவாக என்றும் இன்னாத கூறல் என்றும் காணப் படுவதால், உவமையில் வந்துள்ள கனியை இனிய கனியென்றும், காயை இன்னாத காய் என்றும் நாம் சேர்த்துக் கூட்டுதல் வேண்டும். கனியிருப்ப என்ற தனாலும் இனிய உளவாக என்றதனாலும், இன் சொற்கள் நமக்கு உரிமையுடையனவாய் நம்வயம் இருக்கும் தன்மையும், அவற்றை நாம் வழங்க வேண்டிய கடமையும் உணர்த்தப்பட்டன. காய் கவர்ந்தற்று என்றதால், இன்னாச்சொல் நமக்கு உரித் தாகாமையும், அதனை வழங்கலாகாமையும் உணர்த்தப் பட்டன.

இவ்வாறு இன்சொற்களைப் பயிலாது கடுஞ் சொற்களை வழங்குவதோடு, உலகில் மக்கள் புறங் கூறித் திரிவதையும் நாம் பார்க்கிறோம். மனிதன் தன் வாழ்நாளின் அருமையை உணராது பிறனைப் பழி கூறித் திரிவதிலேயே தன் ஆயுளிற் பெரும்பகுதி யையும் கழிப்பது எவ்வளவு அறிவீனம்? உலகில் புறங் கூறுபவனைக் கண்டு ஒவ்வொருவரும் அஞ்சி ஒதுங் குவர். வேறு எப்பாவம் செய்பவனும் அவ்வளவு வெறுப்புக்கு ஆளாகமாட்டான். ஒருவன் அறனென்று சொல்வதுஞ் செய்யாது பாவங்களைச் செய்யுமாயினும், பிறனைப்புறங்கூறான் என்று உலகத்தாரால் சொல்லப் படுதல் நன்று என்று கூறினார் திருவள்ளுவர் :—

"அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது."

மற்றப்பாவச் செயல்களினால் இழிக்கப்படாது அவற் றின் மேற்பட்டுப் புறங்கூறாமை என்னும் நல்ல குணம் விளங்கி நிற்கும் என்பதால் இவ்வாறு கூறப்பட்டது. ஒருவன் எது செய்தாலும் செய்யாவிட்டாலும், புறங்

கூறமாட்டான் என்று மட்டும் இருந்தால், அவனை எல்லாரும் விரும்பி அணுகுவார்கள், அணுகவும் விடுவார்கள். ஆனால் புறங்கூறுபவனை அண்ட விடாமல் தூரவெறுத்து ஒதுக்குவார்கள். இதற்குக் காரணம், மற்றப்பாவங்களெல்லாம் ஒருவன் கண் முன்னிலையில் நிகழக்கூடியவை. ஆதலால் சிறிது முன்னெச்சரிக்கையாய் இருந்து அவை நிகழாதபடி தன்னைப்பாதுகாத்துக் கொள்ளலாம். அவற்றால் அவ்வளவு தீமை நேராது. ஆனால் புறங்கூறுதல் என்பது ஒருவன் முதுகின்புறத்து அவன் இல்லாத இடத்தில் அவனுக்குத் தெரியாமல் நிகழ்வதால், எவனும் தன்னைப் பாதுகாத்துக்கொள்ள முடியாமற் போய்விடும். புறங்கூறப்பட்டவன் தன்னை அறியாமலே பெரும் பழிக்கு ஆளாகிவிடுவான். பின்னர் அப்பழியிலிருந்து தன்னை அவன் விடுவித்துக்கொள்ள இயலாமற்போய்விடும். ஆதலால் மற்றப்பாவங்களைப் புரிவோரைவிடப் புறங்கூறுபவனைக் கண்டு உலகம் பெரிதும் அஞ்சி நடுங்கும். மற்றக்குற்றங்கள் செய்தால், அவை ஒவ்வொன்றுக்கும் உரிய தண்டனை நீதிமன்றத்தில் உடனே கிடைக்கும். ஆனால் புறங்கூறுபவன் தண்டிக்கப்படாமலே தப்பித்துக் கொண்டு திரிவான். துப்பறியும் நாய்களும் அவனைக் கப்பிப்பிடிக்க முடியாது. ஆதலால், மற்றப்பாவங்கள் செய்யினும் புறங்கூறாதிருத்தல் இனிது என்றார்.

நாலுபேர் கூடிவிட்டால் அங்கில்லாத ஐந்தாமவனைப்பற்றிப் பேசுவது என்பது பெருவழக்கமாகி விட்டது. அப்படிப் பேசிக்கொண்டிருக்கும் நால்வரில் ஒருவன் நழுவியதும், மற்ற மூவரும் அந்த நாலாவது ஆளைப்பற்றிப் பேசுவார்கள். அம்மூவருள்ளும் ஒருவன் போய்விட்டால், அவனைப்பற்றியும் எஞ்சிய இருவரும் பேசத்தொடங்குவார்கள். இப்படியாகச் சந்திப் பேச்சு

களிலும் திண்ணைப் பேச்சுகளிலும் ஒரு சில சோம்பேறிகள் கூடிக்கொண்டு பிறருடைய குற்றங்குறைகளை மிகைப்படுத்திப் பேசுவதில் இன்பம் காண்பது பெருந் தீமையை விளைப்பதாகும். இத்தகைய மன்றிற் பழிக்கும் மன்பதைகள் நாட்டின் நலனைக்கெடுக்கும் நச்சுப்பாம்புகள் என்று கொண்டே அவர்கள் அழிந்தால் ஆக்கம் உண்டாகும் என்று வள்ளுவர் கருதினர். இல்லாத இடத்தில் ஒருவனைப் பழித்துப் பேசுவதற்குச் சிறிதும் கூசாமல் எலும்பில்லாத நாக்கு நீண்டு நெளிந்து நிமிர்ந்து கொடுக்கும். இவ்வாறு முன்னர் நடித்துப் பின்னர் இடித்துப் பன்னிப்பறைவது பழிவளர்க்கும் செவிலியாய் மற்றப்பாவங்களெல்லாம் தோன்றுவதற்குக் காரணமாய் இருத்தலின் மிகக் கொடியது என்று அப்பரும் கூறினர். இறைவனைப் பழிச்சவேண்டிய நாவாலே பிறரைப் பழித்துக் கூறி நம்மை இழித்துக்கொண்டு ஏச்சுக்கு ஆளாவது எவ்வளவு அறியாமை என்று இரங்கி உருகுகிறர் அப்பர் :—

"பேச்சொடு பேச்சுக்கெல்லாம் பிறர்தமைப் புறமே பேசக்
கூச்சிலேனாதலாலே கொடுமையை விடுமாறேரேன்
நாச்சொலி நாளும் மூர்த்தி நன்மையை யுணர மாட்டேன்
ஏச்சுளே நின்று மெய்யே யென்செய்வான் தோன்றினேனே."

'யாராலே கெட்டது? நோராலே கெட்டது' என்று ஒரு பழமொழி உண்டு. நோரு என்பது வாய். அது வாக்கினைக் குறிக்கும். ஒருவன் வேறு எதனைக் காவாது போயினும் நாவினைக் காத்தல் வேண்டும். நாவினைக்காத்தல் என்பது, பொய், குறளை, கடுஞ்சொல், பயனில் சொல் என வாக்கின் கண் நிகழும் நான்கு பாவங்களும் நிகழாதபடி காத்துக்கொள்ளவேண்டும். பயனில் சொல் என்பது தமக்கும் பிறர்க்கும் அறம் பொருள் இன்பமாகிய பயன்களுள் ஒன்றும் பயவாத

சொல். அதுதான் வீண் பேச்சுப் பேசுதல். அதனை அரட்டையடித்தல் என்றும் சொல்வர். மற்றை நாடுகளைவிட நம் நாட்டிலே தான் இக்குற்றம் மிகுதியாகக் காணப்படுகிறது. முதியோர்களை விட இளைஞர்களிடத்திலே இப்பழக்கம் மல்கியிருக்கிறது. எவ்வளவோ பயனுடைய சொற்களைச் சொல்லியும், பேசியும், செயல் புரிந்தும் நம் நிலையா வாழ்க்கையிலிருந்து நிலைத்த ஊதியங்களைப் பெறவேண்டியிருக்க, அவற்றைப்புரியாது, ஒருவருக்கும் ஒன்றும் பயவாத பேச்சுக்களைப் பேசிக் காலத்தைப் பாழாக்குவது மிகவும் வருந்தத்தக்கதன்றே? திருவள்ளுவரும் பத்துக்குறள்களை இதற்காகச் செலவிட வேண்டியதாயிற்று. அவற்றுள் ஒரு குறள் வருமாறு :—

"பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்."

ஒருவன் நயனிலவற்றை .வேண்டுமானாலும் சொல்லலாம், பயனில சொல்லக்கூடாது என்பது வள்ளுவர் கொள்கை. பயனிலவற்றை நாட்டுப்பொய் என்று கூறுவர் அப்பர் அடிகள். இறைவனுடைய மெய்யான புகழைப் பேசுதலே பயனுடைய சொல்லுதல். மற்றப் பொய்யான பேச்செல்லாம் பயனில சொல்லுதலே யாகும் என்கிறார் அப்பர்.

"மாட்டைத் தேடி மகிழ்ந்துநீர் நும்முளே
நாட்டுப் பொய்யெலாம் பேசிடும் நாணிலீர்
கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே."

இதுகாறும் கூறிய வாற்றால் திருவள்ளுவருக்கும் திருநாவுக்கரசருக்கும் உள்ள ஒருமைப்பாடு ஒருவாறு உணர்த்தப்பட்டது. அருளிலே முளைத்த அறமே திருக்குறளுக்கு அடிப்படையாக அமைந்து விளங்குகிறது. அதனைத் தயாமூல தன்மம் என்று வட

மொழியிற் கூறுவர். இந்தத் தயாமூல தன்மம் என்னும் தத்துவமே தமக்குச் சிவபெருமானல் வகுத்துக் கொடுக்கப்பட்ட தென்றும், இதுவே தமது மனதைத் திருத்திச் செம்மைப்படுத்தியது என்றும் அப்பர் தெரிவிக்கிருர் :—

" சினந்திருத்துஞ் சிறப்பெரியார் குண்டர் தங்கள்
செதுமதியார் தீவினைக்கே விழுந்தேன் தேடிப்
புனந்திருத்தும் பொல்லாத பிண்டி பேணும்
பொறியிலியேன் தனைப்பொருளா ஆண்டு கொண்டு
தனந்திருத்து மவர்திறத்தை யொழியப் பாற்றித்
தயாமூல தன்மவழி யெனக்கு நல்கி
மனந்திருத்தும் மழ ாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே."

தயை என்பது அருள். மூலம் என்பது தோன்று தற்கிடம். தன்மம் என்பது அறம். வழி என்பது நெறி. இவ் அருள் வழியெழு அறநெறியைக் கடைப் பிடித்து ஒழுகுபவர்க்கே ஆண்டவன் அருள்புரிவான் என்பதையும் அதுவே சிவலோக நெறி என்பதையும் அப்பர் அழகாகக் கூறியுள்ளார் :—

குலங்கெடுத்துக் கோள்நீக்க வல்லான் தன்னைக்
குலவரையன் மடப்பாவை யிடப்பா லானை
மலங்கெடுத்து மாதீர்த்தம் ஆட்டிக் கொண்ட
மறையவனைப் பிறைதவழ்செஞ் சடையி னானைச்
சலங்கெடுத்துத் தயாமூல தன்ம மென்னுந்
தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க் கெல்லாம்
நலங்கொடுக்கும் நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே."

இம்முறையில் இன்னும் பாரித்துரைக்க வேண்டிய பொருள் பலவுள. விரிவஞ்சி இத்துடன் நிறுத்தலாயிற்று. அன்பர்கள் நலங்கண்டு பயன்துய்ப் பார்களாக.

---

## இந்நூலாசிரியரின் பிற நூல்கள்

| | | |
|---|---|---|
| எத்தன் ஏகாம்பரம் | 1 | 50 |
| முத்தமிழ் முழக்கம் | 2 | 00 |
| தமிழ் உள்ளம் | 2 | 00 |
| வெண்ணிலவிலே | 2 | 00 |
| கவி இன்பம் | 2 | 50 |
| அப்பர் விருந்து | (அச்சில்) | |
| புதுமணப் பரிசு | (அச்சில்) | |